# தமிழைப் பிழையின்றி எழுதுவோம்

தமிழ் இணையக் கல்விக்கழகம்
காந்தி மண்டபம் சாலை
கோட்டூர்
சென்னை – 600 025.

**பெயர்** தமிழைப் பிழையின்றி எழுதுவோம்

**உரிமை** தமிழ் இணையக் கல்விக்கழகம்
காந்தி மண்டபம் சாலை
கோட்டூர்
சென்னை – 600 025.

**பதிப்பு** முதல் பதிப்பு 2024

முனைவர்
பழனிவேல் தியாக ராஜன்
அமைச்சர் தகவல் தொழில்நுட்பவியல்
மற்றும் டிஜிட்டல் சேவைகள் துறை

வாய்மையே வெல்லும்

தலைமைச் செயலகம்,
சென்னை-600 009.

நாள் 26 Aug 2024

வாழ்த்துரை

சங்கம் வளர்த்த தமிழ்ச்சோலையில் குழலும் யாழும் மயங்கும். உயிருக்கு ஒப்பாய் உயிரெழுத்து; தனித்து இயங்கா மெய்யெழுத்து; உடம்புடன் கலந்த உயிரேபோல் உயிர்மெய்யென எண்ணிடலங்காப் பெருமைக்குரிய சிறப்புகளைத் தன்னகத்தே கொண்டது தமிழ்மொழி. இம்மொழி, பல நாடுகளில் ஆட்சி மொழியாகவும், எளிதாகத் தொடர்பு கொள்ளும் தொடர்பு மொழியாகவும் உள்ளது. தமிழர்கள் மட்டுமின்றி, பல அயலகத்தாரும் தமிழில் இலக்கண இலக்கியங்களை இயற்றியுள்ளார்கள். எம்மொழியாயினும் அம்மொழியின் அடிப்படைக் கூறுகளைக் கற்றுத் தெளியவேண்டும். அத்தகைய வகையில் ‘தன்னேரிலாத் தமிழ்’ என்ற தமிழின் சிறப்பினை உணர்ந்தவர்கள் தமிழின் அடிப்படைகளை மெல்ல மெல்லக் கற்கின்றனர். இதன் மூலம் தமிழைப் பிழையின்றிப் பேசவும், எழுதவும் முயற்சி செய்து வருகின்றனர். இன்று, உலகெங்கும் தமிழின் செம்மாந்த நிலையை மேம்படுத்தும் நோக்கில் பல்வேறு முயற்சிகள் வந்தவண்ணமுள்ளன. அந்த வகையில் தமிழ் இணையக் கல்விக்கழகமும் குறுகிய காலத்தில் தமிழைப் பிழையின்றிப் படிப்பதற்கும், எழுதுவதற்கும் ‘தமிழைப் பிழையின்றி எழுதுவோம்’ என்ற புத்தகத்தை உருவாக்கியுள்ளது.

தமிழ் இணையக் கல்விக்கழகத்தின், தமிழைப் பிழையின்றி எழுதுவோம் என்ற இப்புத்தகத்தின் மூலம், தமிழின் மரபு சார்ந்த இலக்கணக் கூறுகளை அறிவதுடன், பயன்பாட்டு அடிப்படையில் இலக்கணத்தைப் பயன்படுத்தவும் முடியும். மேலும், சூழல் சார்ந்த பொருள்களுடன் தமிழ் இலக்கணத்தைப் பொருத்திப் பார்த்துப் பிழையின்றிப் படித்து எழுதுவதுடன் வாழ்வியலுடன் ஒப்பிட்டுப் பார்க்கவும் முடியும். ‘சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்’ என்ற தமிழ்மகள் ஔவையின் கூற்றினை மேன்மேலும் மேம்படுத்திக் கொண்டுவரும் தமிழ் இணையக் கல்விக்கழகத்தின் அளப்பரிய தமிழ்த்தொண்டை வாழ்த்துகிறோம்! பாராட்டுகிறோம். வாழ்க தமிழ்! வளர்க தமிழ்த் தொண்டு!

தமிழ் இணையக் கல்விக்கழகம்
(முந்தைய தமிழ் இணையப் பல்கலைக்கழகம்)
Tamil Virtual Academy
(Erstwhile Tamil Virtual University)
திரு. சே. ரா. காந்தி, இ.ர.பா.ப.,
இயக்குநர் (மு.கூ.பொ.)

# அணிந்துரை

உலகில் பல மொழிகள் தோன்றின. அவற்றுள் பல காலவெள்ளத்தில் அழிந்தன. புதிய புதிய மொழிகளும் தோன்றி வளர்ந்தன. அவ்வகையில் பல நூற்றாண்டுகள் கடந்தும், இன்றும் இனிமை குறையாமல் கற்போர் நெஞ்சம் களிப்புறச் செய்யும் அருந்தமிழ்ச் சிறப்பினை எளிதாகச் சொல்லிவிட முடியாது. பழமைக்கும் பழமையாய் இலக்கண இலக்கிய வளமுடையதாய் நிற்பதோடு மட்டுமல்லாமல், புதுமைக்கும் புதுமையாய்க் கருத்துச் செல்வம் நிறைந்ததாய், என்றும் இளமைப் பொலிவுடன் விளங்குவது தமிழ்மொழி. இச்சிறப்பைப் பிற மொழிகளில் காண்பது அரிது. காலம் காலமாக எழுந்த இலக்கண இலக்கியங்கள் தமிழ் மொழியின் வளர்ச்சியைத் தொடர்ந்து பேணின. பின்பு வந்த புதுக் கவிதைகள், கட்டுரைகள், புதினங்கள், சிறுகதைகள் எனப் பலவகை இலக்கிய வடிவங்கள் தமிழில் தோன்றிப் பெருமை சேர்த்தன.

'சுவர் இருந்தால் அன்றோ சித்திரம் எழுத முடியும்?' தமிழ் இணையக் கல்விக்கழகம் இன்று சுவராக இருந்து தமிழ்மொழி வளர்ச்சிக்காகப் பல சித்திரங்களை உருவாக்கிக் கொண்டு வருகிறது என்பது பெருமைக்குரியது. அவ்வகையில் குறுகிய காலத்தில் தமிழைப் பிழையின்றிப் படிப்பதற்காகவும் எழுதுவதற்காகவும் இந்நூல் உருவாக்கப்பட்டுள்ளது. இந்நூலில் தொல்காப்பியம், நன்னூலை அடிப்படையாகக் கொண்டு தமிழ் எழுத்துகளின் வகைதொகை, பிறப்பு, ஒலிப்பு முறையுடன் அறிமுகம் செய்தல், சொல்வகைகளான மூவகைமொழி, இலக்கியவகைச் சொற்கள், இலக்கணவகைச் சொற்கள் ஆகியவற்றைப் பயன்பாட்டு அடிப்படையில் விவரித்தல், தொடர் அமைப்பு, தொடர் அமைப்பின் சிறப்பு, கருத்துவகைத் தொடர்கள், வழு, வழாநிலை, வழுவமைதி தொடர்பான விளக்கங்களை இதழ்கள், செய்தித்தாள்கள் துணையுடன் கற்றல், சொற்புணர்ச்சிகள், தனிச்சொல், துணைவினை, மொழிநடை, சொற்பிரிப்பு சேர்க்கை முறைகள், அமைப்பு முறை, பிறமொழிப் பயன்பாடு, நிறுத்தக் குறியீட்டுப் பயன்பாடு ஆகியவற்றை அறிமுகம் செய்தல் எனப் படிப்படியாகத் தமிழின் வளர்நிலைகளில் அமைக்கப்பட்டுள்ளது. மாணவர்கள் இலக்கணத்தை நூற்பாக்களின்வழி மனனம் செய்து கற்க வேண்டிய சூழலை மாற்றி, அன்றாட நடைமுறைப் பயன்பாட்டிலுள்ள சொற்களைக் கொண்டு கற்கும் நிலையை இந்நூல் உருவாக்கியுள்ளது என்பது பாராட்டிற்குரியது. இந்நூலை அழகுற வடிவமைத்த அனைவருக்கும் என் பாராட்டுகள். தமிழைப் பிழையின்றி கற்கவும், எழுதவும், பேசவும் முயலும் அனைவருக்கும் என் வாழ்த்துகள்.

இயக்குநர்

Anna University Campus,Gandhi Mandapam Road,Kottur, Chennai - 600 025.
Tel : 91-44-2220 9400, Fax : 91-44-2220 9405, E-mail: tva@tn.gov.in, URL:www.tamilvu.org

# பொருளடக்கம்

## பாடம்–1

# தமிழ் எழுத்துகள் அறிமுகம்

### 1.0 முன்னுரை

நமது எண்ணங்களைப் பிறருடன் பகிர்ந்து கொள்வதற்காக உருவானவை மொழிகள். முதலில் சைகைகளும், ஒலிகளும் கருத்துகளைப் பரிமாறப் பயன்படுத்தப்பட்டன. பின்னர், ஒலிகள் மெதுவாக உருமாற்றம் அடைந்து மொழியாக மாறின.

இவ்வாறு உருமாற்றம் அடைந்து வளர்ந்த மொழிகளில் இனிமையானதும், வாழ்வியலோடு இணைந்ததுமாய் விளங்குவது தமிழ்மொழி. இவ்வாறு, சிறப்பு வாய்ந்ததாய் விளங்கும் தமிழ்மொழியின் எழுத்துகள், அவற்றின் ஒலிப்புமுறை, உருவ அமைப்பு ஆகியவற்றைப் பற்றி நாம் இங்கு அறிந்துகொள்வோம்.

### 1.1 எழுத்துகளின் வகைதொகை

தமிழ் எழுத்துகள் உயிர், மெய், உயிர்மெய், ஆய்தம் என நான்கு பிரிவுக்குள் அடங்கும். இவற்றின் பெயர் அடிப்படையில் இவற்றிற்குரிய பொருள் விளக்கத்தை நாம் தெரிந்துகொள்வோம்.

மொழிக்கு உயிர்போல் விளங்குபவை, உயிர் எழுத்துகள். 'அ' முதல் 'ஔ' வரையிலான பன்னிரண்டும் உயிர் எழுத்துகள்.

மொழிக்கு உடல்போல விளங்குபவை, மெய் எழுத்துகள். 'க்' முதல் 'ன்' வரையிலான பதினெட்டும் மெய் எழுத்துகள்.

உடலும் உயிரும் இணைந்து மனிதன் உருவாவதுபோல, உருவாகும் எழுத்துகளே உயிர்மெய் எழுத்துகள். 'க' முதல் 'னௌ' வரையிலான 216 எழுத்தும் உயிர்மெய் எழுத்துகள்.

**க் + அ = க**

**க் + ஆ = கா**

என 216 உயிர்மெய் எழுத்தும் உருவாகும்.

மனிதர்களின் உருவத்தை நாம் காணலாம். ஆனால், அவர்களின் உயிரினைக் காண முடியாது. அவர்களது அசைவின் மூலமும் பேச்சின் மூலமும் அவர்களின் உயிரை நாம் உணர முடியும். அதுபோலவே **'க்'** என்னும் மெய்யைக் கண்ணால் காணலாம். **'அ'** என்னும் உயிரை ஒலிக்கும்போது உணர முடியும்.

மெய்யெழுத்துடன் உயிரெழுத்துச் சேரும்போது புதுஎழுத்துப் பிறக்கிறது. ஆனால், அதை நாம் மெய்யுயிர் என்று சொல்வது இல்லை. ஏனெனில், 'க' என்பதில் 'அ' என்னும் உயிரே

ஒலிக்கிறது. இதனால் மெய்யொலிகள் இயங்க உயிரொலிகள் காரணம் என்பதால் உயிரை முன்வைத்து உயிர்மெய் என்று கூறுகிறோம்.

இவ்வாறு, அனைத்து எழுத்துகளும் சேர்ந்து மொத்த எழுத்துகளின் எண்ணிக்கை 247 ஆகிறது.

| | | |
|---|---|---|
| உயிர் எழுத்துகள் | – | 12 |
| மெய் எழுத்துகள் | – | 18 |
| உயிர்மெய் எழுத்துகள் | – | 216 |
| ஆய்த எழுத்து | – | 1 |
| **மொத்தம்** | **–** | **247** |

### 1.1.1 குறிலும் நெடிலும்

எழுத்துகளை முதலெழுத்து, சார்பெழுத்து என இருவகைப்படுத்தலாம். உயிர்–12, மெய்–18 ஆக 30 எழுத்தும் முதலெழுத்துகள் ஆகும். இவற்றைச் சார்ந்து வருபவை சார்பெழுத்துகள் ஆகும்.

தமிழ்மொழியிலுள்ள சொற்களை ஒலிப்பதற்கு, முதல் எழுத்துகளைச் சரியாக ஒலிக்க பயிற்சி செய்தாலே போதுமானது. உயிர் எழுத்துகளை நீட்டியும், குறுக்கியும் ஒலிக்க வேண்டும். மெய் எழுத்துகள் அனைத்தையும் ஒரே அளவில் ஒலிக்க வேண்டும்.

இவ்வாறு உயிர் எழுத்துகள், ஒலிக்கும் அளவைப் பொறுத்து **குறில், நெடில்** என இரண்டாகப் பிரியும். இதன்படி,

**அ, இ, உ, எ, ஒ** என்ற ஐந்து எழுத்தும் குறில் எழுத்துகள்

**ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ** என்ற ஏழு எழுத்தும் நெடில் எழுத்துகள்

இந்த உயிர் எழுத்துகள் மெய்எழுத்தோடு சேர்ந்து பிறக்கும்போது உருவாகும் உயிர்மெய் எழுத்துகள், உயிர் எழுத்தின் இயல்பையே கொண்டு ஒலிக்கும்.

'க்' என்னும் மெய் எழுத்தோடு 'அ', 'இ', 'உ', 'எ', 'ஒ' ஆகிய குறில் எழுத்துகள் சேரும்போது, உயிர்மெய்க் குறில் எழுத்துகள் தோன்றும்.

அதே மெய்யோடு 'ஆ', 'ஈ', 'ஊ', 'ஏ', 'ஐ', 'ஓ', 'ஔ' ஆகிய நெடில் எழுத்துகள் சேரும்போது உயிர்மெய் நெடில் எழுத்துகள் தோன்றும்.

மெய் எழுத்துகளில் குறிலும், நெடிலும் இல்லை. எனவே, உயிர் எழுத்துகளுடன் சேரும்போது அவற்றின் பண்பினையே உயிர்மெய் எழுத்துகள் பெறுகின்றன.

### 1.2 உயிர் எழுத்துகளை ஒலிக்கும் முறை

முதலில் உயிர் எழுத்துகள் எவ்வாறு ஒலிக்க வேண்டும் என்பதை அறிந்துகொள்வோம். உயிர் எழுத்துகள் அனைத்தும் காற்றின் தடை இல்லாமல் இயல்பாகவே பிறக்கின்றன.

அ, ஆ – இவ்விரண்டு உயிர்களும் வாயைத் திறந்து ஒலிப்பதனால் பிறக்கின்றன.

இ, ஈ, எ, ஏ, ஐ – ஐந்து எழுத்துகளும் வாயைத் திறப்பதோடு மேல்வாய்ப் பல்லை, நா விளிம்பு தொடுவதால் பிறக்கின்றன.

உ, ஊ, ஒ, ஓ, ஔ – ஐந்து எழுத்துகளும் உதடுகளைக் குவித்து ஒலிப்பதனால் பிறக்கின்றன.

### 1.3 மெய் எழுத்துகளை ஒலிக்கும் முறை

உடல் இல்லாமல் உயிர் இயங்காது. அதுபோல, மெய் இல்லாமல் மொழியும் இயங்காது. உயிர் ஒலிகள் காற்றின் தடை இல்லாமல் வாயைத் திறந்தவுடன் பிறக்கும். ஆனால், மெய்யொலிகள் காற்றினை நாக்கு, உதடு, பல் ஆகியவை தடை செய்வதால் பிறக்கும். இவ்வாறு தடை செய்யும்போது நாக்கு, பல், உதடு ஆகியவற்றைத் தடவியும் வருடியும் மெய் எழுத்துகள் பிறக்கின்றன. மெய்யொலிகளை ஒலிக்கும் இடம், தன்மை ஆகியவற்றின் அடிப்படையில் மூவகையாகப் பிரிக்கலாம். அவை,

1. வல்லினம்
2. மெல்லினம்
3. இடையினம்

#### 1.3.1 வல்லினம்

காற்று வெடித்து வெளிவருவதால் பிறக்கும் ஒலிகள் வல்லொலிகள். இதனை வெடிப்பொலிகள் என்றும் கூறுவர்.

**க், ச், ட், த், ப், ற்**

ஆகியவை வல்லின எழுத்துகள் ஆகும். இவற்றை ஒலிக்கும்போது, காற்று வேகமாக வெளிவிடப்படல் வேண்டும்.

#### 1.3.2 மெல்லினம்

மெல்லின எழுத்துகள் காற்று தடைபடாமல் மூக்கின் வழியாக வருவதால் தோன்றுகின்றன. காற்றை வாயில் தடுத்து மூக்கின் வழியாக வெளிவிடுவதால் இவ்வொலிகள் மென்மைத் தன்மை பெறுகின்றன இதன் காரணமாக மெல்லினம் என்ற பெயரைப் பெற்றுள்ளன. **ங். ஞ். ண், ந், ம், ன்** ஆகியவை மெல்லின எழுத்துகளாகும்.

### 1.3.3 இடையினம்

வன்மையாகவும் இல்லாமல் மென்மையாகவும் இல்லாமல் இரண்டிற்கும் இடைப்பட்ட தன்மையுடைய ஒலியாக ஒலிக்கப்படும் எழுத்துகளை இடையின எழுத்துகள் என்று கூறுகிறோம். இவற்றை ஒலிக்கும்போது கீழ் உதடுகள் மிகவும் மெல்லியதாகத் தடித்து நிற்கும்.

**ய், ர், ல், வ், ழ், ள்** ஆகியவை இடையின எழுத்துகள் ஆகும்.

**மெய்யெழுத்துகள் ஒலிப்பு முறைகள்**

க், ங் – இவ்விரு மெய்களும் நாவினது முதற்பகுதி அண்ணத்தைத் தொடுவதனால் தோன்றுகின்றன.

ச், ஞ் – இவ்விரு மெய்களும் இடை நா (நடு நாக்கு) நடு அண்ணத்தைத் தொடுவதனால் பிறக்கின்றன.

ட், ண் – இவை, நாவினது நுனி, அண்ணத்தினது நுனியைத் தொடுவதனால் பிறக்கின்றன.

த், ந் – மேல்வாய்ப் பல்லினது அடியை, நாக்கின் நுனி பொருந்துவதனால் இவ்வெழுத்துகள் தோன்றுகின்றன.

ப், ம் – மேல் உதடும் கீழ் உதடும் பொருந்த, இவ்வெழுத்துகள் பிறக்கும்.

ய் – இது, நாக்கினது அடிப்பகுதி, மேல்வாயின் அடிப்பகுதியைப் பொருந்துவதனால் பிறக்கின்றது.

ர், ழ் – இவை, மேல்வாயை நாக்கின் நுனி தடவுவதனால் பிறக்கின்றன.

ல் – இது, மேல்வாய்ப் பல்லின் அடியை, நாவினது ஓரங்கள் தடித்து நெருங்குவதனால் பிறக்கிறது.

ள் – இது, மேல்வாயை, நாவினது ஓரங்கள் தடித்துத் தடவுவதனால் பிறக்கிறது.

வ் – இது, மேல்வாய் பல்லைக் கீழுதடு பொருந்துவதனால் பிறக்கின்றது.

ற், ன் – இவை, மேல்வாயை நாக்கின் நுனி மிகவும் பொருந்துவதனால் பிறக்கின்றன.

இவ்வாறு ஒவ்வோர் எழுத்தும் ஒவ்வொரு முறையில் பிறக்கின்றது. ஆகவே, எழுத்துகளின் ஒலிப்புமுறைகளை அறிந்து, அவற்றைச் சரியாக ஒலிக்க வேண்டும்.

### 1.4 ஒலிமாற்றம்

தமிழ் எழுத்துகளைத் தனித்தனியாக ஒலிக்கும்போது, மேற்குறிப்பிட்ட வழியில் அமையும். ஆனால், இவ்வெழுத்துகள் சொற்களில் பயின்று வரும்போது உடன்வரும் எழுத்தின் ஒலியோடு சார்ந்து, சிறிது ஒலி மாற்றம் அடையும்.

உதாரணமாக '**க**' என்பது வெடிப்பொலி. இது தனக்கு இனமான மெல்லொலியோடு சேர்ந்து வரும்போது சிறிது மெல்லொலித் தன்மை பெற்று வரும்.

**(எ.கா.)**

'கு' என்னும் எழுத்தைத் தனித்துச் சொல்லும்போது, 'ku' என ஒலிக்கும். ஆனால், இவ்வெழுத்து, 'பங்'கு' என்னும் சொல்லில் 'ங்' என்னும் மெல்லொலியுடன் சேரும்போது, 'gu' என ஒலிக்கும்.

இவ்வாறே, அகம் என்ற சொல்லில் 'க' எனும் எழுத்து 'ka' என ஒலிக்காமல் 'ha' என ஒலிக்கும்.

பஞ்சு எனும் சொல்லில் 'சு' எனும் எழுத்து 'su' என ஒலிக்காமல் 'ju' என ஒலிக்கும்.

### 1.5 உருவ வேறுபாடு

எழுத்துகள் சொற்களாக மாறும்போது சிறிது ஒலி மாற்றம் பெறும் எனப் பார்த்தோம். ஏனெனில், தமிழில் அழுத்தி ஒலிக்கக்கூடிய எழுத்துகள் என்று எவையும் இல்லை. அவை, தமக்கு அருகிலுள்ள எழுத்துகளின் ஒலிக்கேற்ப சிறிது மாற்றம் பெறுகின்றன.

பிறமொழிச் சொற்களைத் தமிழில் பயன்படுத்தும் போது அவற்றின் ஒலிகளை ஈடுசெய்ய தனி எழுத்துகள் பயன்படுத்தப்படுகின்றன.

**ஷ, ஜ, ஹ, ஸ** என்பன சமஸ்கிருத எழுத்துகள் ஆகும்.

பெரும்பாலும் சமஸ்கிருதச் சொற்களை எழுதும்போதே இவ்வெழுத்துகள் பயன்படுகின்றன. தற்போது பல்வேறு ஆங்கிலமொழிச் சொற்களை எழுதுவதற்கும் இவ்வெழுத்துகள் மிகவும் பயனுள்ளதாக இருக்கின்றன. பிறமொழிச் சொற்களை எழுதும்போது எந்த ஒலி மாற்றமும் வராமல் இருக்க, இந்த எழுத்துகள் துணை செய்கின்றன.

எடுத்துக்காட்டாக, இந்து தமிழ் நாளிதழில் வெளியான ஒரு செய்தி கீழே கொடுக்கப்பட்டுள்ளது. இதில், பிறமொழிச் சொற்கள் கலந்து வருவதைக் காணலாம்.

> **கிரிக்கெட்** போட்டிகளிலிருந்து ஓய்வு பெற்றார் **ஹர்பஜன் சிங்**. இந்திய அணிக்காக விளையாடி இவர் 103 **டெஸ்ட்** போட்டிகளில் 417 **விக்கெட்டு**களையும், 236 ஒருநாள் போட்டிகளில் 269 **விக்கெட்டு**களையும், 28 **டி** 20 ஆட்டங்களில் 25 **விக்கெட்டு**களையும் கைப்பற்றியுள்ளார். **டெஸ்ட்** போட்டிகளில் **ஹாட்ரிக் விக்கெட்** வீழ்த்திய இந்தியர் என்ற பெருமையும் இவருக்கு உண்டு.

### 1.6 சுட்டெழுத்துகள்

பிறவற்றைச் சுட்டுவதற்காகச் சுட்டுப்பொருள் தந்து நிற்கும் எழுத்துகள், சுட்டெழுத்துகள் எனப்படும். அவை, அ, இ, உ என்பன.

அவன், அவள், அவர், அது, அவை, இவன், இவள், இவர், இது, இவை

இவற்றுள், 'இ' என்பது, பக்கத்தில் உள்ளதைச் சுட்டிக்காட்டுவதற்கு வரும் எழுத்து. அதனால், 'இ' என்பது அண்மைச் சுட்டு என்ற அழைக்கப்படுகிறது.

இவன், இவள், இவர், இது, இவை

'அ' என்பது, தொலைவில் உள்ளவற்றைச் சுட்டிக்காட்டுவதற்கு வரும் எழுத்து. அதனால் 'அ' என்பது சேய்மைச் சுட்டு. (சேய்மை – தொலைவு)

அவன், அவள், அவர், அது, அவை

அந்த, இந்த, அங்கு, இங்கு என வருவன எல்லாம் சுட்டுத் திரிபுகள் எனப்படும். 'உ' என்ற எழுத்தும் சுட்டு எழுத்து. ஆனால், இது தற்காலப் பயன்பாட்டில் இல்லை.

**அகச்சுட்டு**

ஒருசொல்லின் அகத்தே (உள்ளே) நின்று சுட்டுப்பொருளைத் தருவது **அகச்சுட்டு** எனப்படும். சான்று:

**அ**வன், **அ**வள், **அ**வர், **அ**து, **அ**வை

**இ**வன், **இ**வள், **இ**வர், **இ**து, **இ**வை

**உ**து, **உ**வன்.

அகச்சுட்டுச் சொற்களிலிருந்து சுட்டெழுத்தை நீக்கினால் அச்சொல் பொருள் தராது.

**அ** + வள்
**இ** + வள்
**அ** + வன்
**இ** + வன்
**அ** + து
**இ** + து
**அ** + வை
**இ** + வை

**புறச்சுட்டு**

ஒரு சொல்லின் புறத்தே (வெளியே) நின்று சுட்டுப்பொருளைத் தருவது **புறச்சுட்டு** ஆகும். சான்று:

அப்பையன், அவ்வீடு, அக்குளம்.

இப்பையன், இவ்வீடு, இக்குளம்

உப்பக்கம்.

புறச்சுட்டு சொற்கள் பிரித்தாலும் பொருள் தரும்.

அ + பையன்
இ + பையன்
அ + வீடு
இ + வீடு
அ + குளம்
இ + குளம்
உ + பக்கம்

### 1.7 வினா எழுத்துகள்

'எ', 'யா', 'ஆ', 'ஓ', 'ஏ' ஆகிய ஐந்து எழுத்தும் வினாப் பொருளில் வருகின்ற எழுத்துகளாகும்.

எவன்? யார்? அவனா? அவளோ? யானே?

இவ்வாறு எடுத்துக்காட்டுகள் அமையும். இவற்றுள், 'எ', 'யா' ஆகிய இரண்டும் சொல்லின் முதலில் நின்று வினாப் பொருள் தரும்.

எவன்? யாவன்?

எவள்? யாவள்?

எவர்? யாவர்?

எவை? யாவை?

எது? யாது?

'ஆ', 'ஓ' – ஆகிய இரண்டும் சொல்லின் இறுதியில் நின்று வினாப் பொருள் தரும்.

அவனா? – அவனோ?

அவளா? – அவளோ?

அதுவா? – அதுவோ?

அவையா? – அவையோ?

'ஏ' என்னும் எழுத்து, சொல்லுக்கு முதலிலும், சொல்லுக்கு இறுதியிலும் நின்று வினாப் பொருள் தரும்.

ஏன்? – யானே?

ஏது ? – அவனே?

**அகவினா**

சொல்லின் உள்ளே நின்று வினாப் பொருள் தந்தால் அகவினா ஆகும். அந்த வினா எழுத்தை நீக்கினால் சொல்லுக்குப் பொருள் இராது.

சான்று : யார்? எது? ஏன்?

**புறவினா**

சொல்லின் வெளியே நின்று வினாப்பொருள் தந்தால் புறவினா ஆகும். அந்த வினா எழுத்தை நீக்கினாலும் சொல்லுக்குப் பொருள் இருக்கும்.

சான்று : அவனா? ( ன்+ ஆ)?, இவன்தானே (ன்+ஏ)?, எவ்வூர்? (எ+ஊர்)?

## 1.8 மயங்கொலி எழுத்துகள்

எழுத்துகளின் ஒலிப்பு முறையை நாம் இதுவரை கண்டோம். இவ்வெழுத்துகளில் சில எழுத்துகள் மட்டும் ஒலிக்கும் முறைகளில் சிற்சில வேறுபாடுகளைக் கொண்டிருக்கும். நாம் சரியாக ஒலிக்காவிடில் அவை வேறு எழுத்துகளாக உணரப்பட்டுவிடும். இவ்வாறு ஒலிக்கும் எழுத்துகளை மயங்கொலிகள் என்று கூறுவோம்.

ஒலிக்கும்போதே மயக்கத்தை உண்டுபண்ணும் என்பதால் இவை இப்பெயர் பெற்றன.

**ண, ந, ன**

**ல, ள, ழ**

**ர, ற**

ஆகிய எட்டு எழுத்தும் மயங்கொலிகள் ஆகும்.

### 1.8.1 எழுத்துகளின் பெயர்கள்

ஒருவரைத் தனியாக அடையாளப்படுத்திக் காட்டுவது அவருடைய பெயர். பெயரில்லாமல் யாருமே இருக்க முடியாது. அதுபோல, எழுத்துகளுக்கும் பெயர்கள் உண்டு. எடுத்துக்காட்டாக, 'க' என்னும் எழுத்தைக் கூறும்போது, 'ககரம்' எனக் கூறவேண்டும். அதே போல் 'ஏ' என்னும் எழுத்தைக் கூறும்போது, 'ஏகாரம்' எனக் கூறவேண்டும். இவ்வாறு எழுத்துகளுடன் கரம், காரம், கான் எனச் சாரியைச் சேர்த்துச் சொல்வோம்.

இங்கு, மயங்கொலி எழுத்துகளுக்குரிய பெயர்களை அறிவோம்.

**'ல'** – நுனி நா லகரம் என்று ஒலிப்பு அடிப்படையில் இது அழைக்கப்படுகிறது. மேலும் **தனி லகரம்** என்றும் கூறுவர்.

**'ள'** – நா மடி 'ளகரம் என்று கூறுவர். இதனைப் **பொது ளகரம்** என்றும் கூறுவர்.

**'ழ'** – இதன் பெயர் நாம் அனைவரும் நன்கு அறிந்ததே. தமிழுக்கே தனிச்சிறப்பு சேர்க்கும் எழுத்து என்பதால் இதைச் **சிறப்பு ழகரம்** என்று அழைக்கிறோம்.

**'ண'** – மூன்று சுழி 'ண' என்று நாம் அழைக்கின்றோம். ஆனால், இதன் இன எழுத்தான டகரத்தோடு இணைத்துச் சொல்லவேண்டும். ஏனென்றால் இந்த இரண்டு எழுத்தும் ஒரே இடத்திலேயே பிறக்கின்றன. எனவே இதனை **டண்ணகரம்** என்று கூறுதல் வேண்டும்.

**'ந'** – தகரமும் நகரமும் ஒரே இடத்தில் பிறப்பதால் **தந்நகரம்** என்று இது அழைக்கப்பெறும்.

**'ன'** – இரண்டு சுழி னகரம் என்று இதனை நாம் கூறுவோம். இருசுழி னகரம் என்றும் இது அழைக்கப்படும். டண்ணகரத்தைப் போலவே **றன்னகரம்** என்று முன்னால் வரும் எழுத்தோடு சேர்த்து இது அடையாளப்படுத்தப்படும். ஏனென்றால் இவை இரண்டும் ஒரே இடத்தில் பிறக்கின்றன.

**'ர'** – இடையின எழுத்து என்பதால், **இடையின ரகரம்** என்று அழைக்கப்படும்.

**'ற'** – வல்லின எழுத்து என்பதால், **வல்லின றகரம்** என்று அழைக்கப்படும்.

### 1.8.2 'ண', 'ந', 'ன' வேறுபாடு

மயங்கொலி எழுத்துகளுள் 'ண', 'ந', 'ன' ஆகிய மூன்றும் தவறாக ஒலிக்கப்பட்டாலும், எழுதப்பட்டாலும் பெரிய பொருள் மாறுபாட்டைக் கொடுக்கும்.

### 1.8.3 ணகர, நகர, னகரப் பயன்பாடு

மயங்கொலி எழுத்துகளுள் முதலில் 'ண', 'ந', 'ன' ஆகிய மூன்றும் பயன்படும் இடம்பற்றிக் காண்போம்.

இம்மூன்றில் எந்த எழுத்து எங்கு வரவேண்டும் என்பது குறித்துச் சிலநேரங்களில் குழப்பம் ஏற்படும். **தந்நகரம்** எப்போதும் சொல்லின் முதலிலேயே வரும். **றன்னகரமும், டண்ணகரமும்** எங்கு வரும்? இந்தக் கேள்விக்கான பதில் இவ்வெழுத்துகளின் பெயரிலேயே உள்ளது.

**'ட'** வரும் சொற்களில் ண வரும். அதாவது டண்ணகரம் 'ட' – வுடன் சேர்ந்தே வரும். உதாரணமாக,

நான் செழியனைக் கடையில் க**ண்டே**ன்.

நாங்கள் திருமண ம**ண்ட**பத்திற்குச் சென்றோம்.

அக்காவுடன் நான் ச**ண்டை** போட்டேன்.

இதே விதியை **றன்னகரத்திற்கும்** கொள்ளலாம்.

பூனை எலியைக் கொ**ன்ற**து.

கபிலன் முறுக்கைத் தி**ன்றா**ன்.

கோதை கடைக்குச் செ**ன்றா**ள்.

இவை மட்டுமே றன்னகரத்திற்கும், டண்ணகரத்திற்குமான விதிகள் இல்லை.

திருமணம், அண்ணன், பண்ணை

மனிதன், சின்னம், கன்னி

என்பன போல இவ்வெழுத்துகள் சொற்களில் வரும். தொடர் வாசிப்பு, எழுத்துப் பயிற்சி இரண்டும் இந்த மயக்கத்தைப் போக்க உதவும்.

### 1.8.4 'ண', 'ன' ஒலி வேறுபாடு

ஒரு சொல்லில், ணகரமும் னகரமும் மாறி வருமானால், அச்சொல்லின் பொருளே மாறிவிடும். எனவே ஒவ்வொரு சொல்லின் பொருளையும் உணர்ந்து சரியான எழுத்தைப் பயன்படுத்தி எழுதுதல் வேண்டும்.

எடுத்துக்காட்டாக,

நான் உன்னிடம் **முன்னூறு** ரூபாய் கொடுத்தேன் என்று எழுதும்போது நான் உன்னிடம் **முன்பு நூறு** ரூபாய் (முன்+ நூறு ரூபாய்) கொடுத்தேன் என்று பொருள் வரும்.

நான் உன்னிடம் **முந்நூறு** ரூபாய் கொடுத்தேன் என்று எழுதும்போது நான் உன்னிடம் **மூன்று நூறு** ரூபாய் கொடுத்தேன் என்ற பொருளில் வரும்.

மேலும் சில சொற்களைக் காணலாம்.

| | | | |
|---|---|---|---|
| 1. | ஆனி | – | தமிழ் மாதம் |
| | ஆணி | – | சுவரில் அடிக்கும் ஆணி |
| 2. | இவண் | – | இப்படிக்கு |
| | இவன் | – | ஒருவரை சுட்டிக் காட்டுவது (அண்மைச் சுட்டு) |
| 3. | உண் | – | சாப்பிடு |
| | உன் | – | உன்னுடைய (முன்னிலை ஒருமை) |
| 4. | ஊன் | – | இறைச்சி |
| | ஊண் | – | உணவு |
| 5. | கணி | – | கணக்கிடுதல் |
| | கனி | – | பழம் |

**கனி**யைக் **கண**க்கிட்டுப் பறித்து வை

6. காண் – பார்

கான் – காடு

7. கிண்ணம் – பாத்திரம்

கின்னம் – துன்பம்

8. திணை – ஒழுக்கம்

தினை – சிறுதானியம்

9. நண்பகல் – நடுப்பகல்

நன்பகல் – நல்ல பகல்

> நண்பகலில் திடீரெனக் கருமேகம் சூழ்ந்ததால் வெயில் குறைந்து நன்பகலாயிற்று.

10. நாண் – நாணம்

> நான் வில்லில் நாணைப் பூட்டினேன்.

நான் – தன்னைக் குறிப்பது (தன்மை ஒருமைப்பெயர்)

11. பணி – வேலை

பனி – பனிக்காலம்

> பனிக்காலத்தில் பணி செய்ய யாரும் விரும்பமாட்டார்

12. மணம் – வாசனை

மனம் – நெஞ்சம்

> மல்லிகையின் மணம் மனத்தைக் கவர்ந்தது

13. வணம் – ஓசை

வனம் – காடு

> வனத்தில் எழுந்த வணம் கேட்டு விலங்குகள் அஞ்சின.

14. வண்ணம் – நிறம்

வன்னம் – எழுத்து

15. வாணம் – வானவெடி

வானம் – ஆகாயம்

> மின்னல்
> வானம் நடத்தும் வாணவேடிக்கை
> –கவிக்கோ அப்துல் ரகுமான்

### 1.9 'ல', 'ழ', 'ள' வேறுபாடு

லகர ஒலிகள் பெரும்பாலும் சரியாக ஒலிக்கப்படுவதில்லை. 'சித்திரமும் கைப்பழக்கம் செந்தமிழும் நாப்பழக்கம்' என்று சொல்லப்படுவதைப் போலத் தொடர்ச்சியாக ஒலிப்புப் பயிற்சியே நம்மைச் சரியாக ஒலிக்க வைக்கும்.

எழுத்துகளைத் தனியாகக் கூறும்போது சரியான முறையில் ஒலித்துவிட்டு நாம் பேசும்போது இவ்வெழுத்துகளின் ஒலிப்பை மறந்துவிடுகிறோம். அவ்வாறின்றி, இவ்வெழுத்துகளின் துல்லியமான ஒலிப்பினை மனத்தில் நிறுத்திப் பேசிப் பழகினால், நாளடைவில் நம்மையறியாமலே அவை நம் பேச்சில் சரியான ஒலிப்புடன் வெளிவரும்.

### 1.9.1 'ல', 'ழ', 'ள' கரப் பயன்பாடு

பிழையாக உச்சரிக்கப்படும் எழுத்துகளுள் முக்கியமானது. லகர, ளகர, ழகர எழுத்துகளே ஆகும். தமிழ்மொழிக்குச் சிறப்புச் சேர்க்கும் எழுத்து ழகரம், வேறு எந்த மொழியிலும் இல்லாத எழுத்து இது. ஆனால் சில சமயங்களில் இது தவறாக உச்சரிக்கப்படுகிறது.

ணகர, னகரம் போல எந்த எழுத்துக்குப் பின் வரும் என்று துல்லியமாக நம்மால் சொல்ல இயலாது. தொடர்ந்த வாசிப்பும், சொற்பயிற்சியுமே லகர, ளகர, ழகரப் பயன்பாட்டை அறிந்துகொள்ள உதவி செய்யும்.

### 1.9.2 'ல', 'ழ', 'ள' ஒலி வேறுபாடு

லகர, ளகர, ழகர எழுத்துகள் சொற்களில் மாற்றிப் பயன்படுத்தப்பட்டால் பொருள் முழுவதுமாக மாறிவிடும். அதனைப் பின்வருமாறு காணலாம்.

1. அலகு – பறவையின் மூக்கு
2. அழகு – வனப்பு

கமலா அழகாகப் படம் வரைந்தாள் என்று எழுதுவதற்குப் பதிலாகக் கமலா அலகாகப் படம் வரைந்தாள் என்று எழுதிவிட்டால் பொருள் எத்தனை மாறிவிடும் என்பதைப் பார்த்தீர்களா?

மேலும் அதிகமாக அனைவரையும் குழப்பும் சொற்கள் ஒலி, ஒளி இரண்டும்.

சூரியன் ஒலிருமா? ஒளிருமா?

சூரியன் ஒளிருமே தவிர ஒலிராது. லகர, ளகர சொற்களுக்கான பொருளறிந்தால் இப்பிழை நேராது.

ஒலி – ஓசை

ஒளி – வெளிச்சம்

ஒழி – நீக்கு

விளக்கு ஒளிரும்.
மணி ஒலிக்கும்.
தீய பழக்கத்தை ஒழி.

இதுபோல் இன்னும் மயக்கம் தரும் சில சொற்களைக் காண்போம்.

| | | |
|---|---|---|
| கலகம் | – | சிக்கல், சண்டை |
| கழகம் | – | அமைப்பு, குழுமம் |
| கலை | – | ஆண்மான் |
| கழை | – | மூங்கில் |
| கிழி | – | துண்டாக்கு |
| கிளி | – | பறவை |
| கிழவி | – | தலைவி |
| கிளவி | – | சொல் |
| குலம் | – | குடிப்பிறப்பு |
| குளம் | – | நீர்நிலை |
| கொல்லை | – | புழக்கடை |
| கொள்ளை | – | திருட்டு |
| கோலி | – | கிராமிய விளையாட்டுப் பெயர் |
| கோழி | – | பறவையினம் |
| தவளை | – | உயிரினம் |
| தவலை | – | பாத்திரம் |
| பால் | – | உணவு |
| பாழ் | – | கேடு |
| புகல் | – | சொல் |
| புகழ் | – | பெருமை |
| மழை | – | வானின் நீர் |
| மலை | – | கற்குன்று |

## 1.10 'ர', 'ற' வேறுபாடு

இவ்வெழுத்துகள் தவறாக ஒலிக்கப்பட்டாலும், எழுதப்பட்டாலும் பெரிய பொருள் மாறுபாட்டைக் கொடுக்கும்.

### 1.10.1 ரகர, றகரப் பயன்பாடு

- றகரமும் ரகரமும் சொல்லின் முதல் எழுத்தாய் வராது.
- 'ற்' எனும் மெய் எழுத்துக்குப் பின்னால் இன்னொரு மெய் எழுத்து வராது.
- றகரம் தமிழின் சிறப்பெழுத்து. வேற்றுமொழிச் சொல்லினை ஒலிபெயர்த்து எழுதும்போது இவ்வெழுத்தைப் பயன்படுத்தக் கூடாது.

  எடுத்துக்காட்டு;

  அலமாரி, கரம், பிரின்சிபால்

- எங்கு எந்த ரகரம் போடவேண்டும் என்னும் குழப்பம் வரும்போது ஒன்றை நினைவு வைத்துக் கொள்ளலாம். 'பெரியவருக்குச் சிறிய 'ர' போடு, சிறியவருக்குப் பெரிய ற போடு' விளையாட்டாக இது சொல்லப்பட்டாலும் எல்லா இடங்களிலும் எந்த றகரம் வரும் என்பதைப் பயிற்சியின் மூலமாகவே அறிய முடியும்.

### 1.10.2 ரகர, றகர ஒலி வேறுபாடு

இவ்வெழுத்துகள் எழுதப்படும்போது மாற்றி எழுதப்பட்டால் பெரிய பொருள் மாற்றத்தைக் கொடுக்கும். இதனைப் பின்வரும் சொற்களாலும் அவற்றின் பொருள்களாலும் அறியலாம்.

சில சொற்கள் நமக்குக் குழப்பத்தைத் தரும். அவற்றுள் ஒன்று,

கறுப்பு – கருப்பு

இவ்விரண்டில் நிறத்தைக் குறிக்கும் சொல் எது?

கருமை நிறத்தைக் குறிக்கும் இடங்களில் எல்லாம் இடையின ரகரமே வரல் வேண்டும்,

பின்வரும் எடுத்துக்காட்டுகள் மூலம் இவற்றை அறியலாம்,

கருப்பு, கரி, கரிசல், கரும்பு, கரிய, கார்மேகம், கருங்குரங்கு, கருநாகம், கருமுகில், கருங்கடல் ஆகிய சொற்களைக் கூறலாம்.

மேலும் கறுப்பு என்பது சினம் (கோபம்) என்ற பொருளில் வரும்.

'கறுப்பும், சிவப்பும் வெகுளிப் பொருள்' என்னும் தொல்காப்பிய நூற்பா இதற்குச் சான்றாய் வரும். கறுப்பு என்பது, வறுமை என்னும் பொருளையும் தரும்.

அடுத்து, **பசியாற/ பசியார** என்னும் சொற்களை எடுத்துக்கொள்ளலாம். இவற்றில் றகரமும் ரகரமும் எதிரெதிர் பொருளையே தருகின்றன.

மக்கள் பசியாற உணவளித்த உங்களுக்கு நன்றி என்று கூறுவதற்குப் பதிலாக,

மக்கள் பசியார உணவளித்த உங்களுக்கு நன்றி எனக் கூறினால் அது பெரிய தவறாய் முடியும். ஏனெனில், **பசியாற** என்பது **பசி தணிய** என்ற பொருளையும், **பசியார** என்பது **பசி நிறைய** என்ற பொருளையும் தந்துவிடும்.

| | | |
|---|---|---|
| இரங்கு | – | மனமிரங்கு |
| இறங்கு | – | கீழே இறங்கு |
| இரை | – | உணவு |
| இறை | – | கடவுள் |
| உரவு | – | அறிவு |
| உறவு | – | சொந்தம் |
| உரை | – | பேச்சு |
| உறை | – | பை |
| எரி | – | தீ |
| எறி | – | வீசு |
| பொறி | – | இயந்திரம் |
| பொரி | – | நெற்பொரி |
| மரம் | – | தாவரம் |
| மறம் | – | வீரம் |
| மாரி | – | மழை |
| மாறி | – | மாற்றம் |
| விரல் | – | கை விரல் |
| விறல் | – | வலிமை |
| சுரா | – | கள் |
| சுறா | – | மீன் |

எனப் பொருள் வேறுபாடு காட்டுவதை உணரலாம்.

### 1.11 மொழி முதல், இடை, கடை எழுத்துகள்

தமிழில் ஒரு சொல்லுக்கு முதலிலும் இடையிலும் இறுதியிலும் என்னென்ன எழுத்துகள் வரும் என்பதை நாம் கட்டாயம் அறிந்துகொள்ள வேண்டும். ஏனெனில், இக்காலத்தில் பிறமொழிச் சொற்கள் தமிழில் கலந்து வழங்குகின்றன. இத்தகைய சொற்களில் பெரும்பான்மையான எழுத்துகள் தமிழில் மொழிக்கு முதலில் வராதவை. இவற்றைக் கொண்டே தமிழ்ச்சொற்கள் எவை, பிறமொழிச்சொற்கள் எவை என வேறுபடுத்தி அறியலாம்.

### 1.11.1 மொழிக்கு முதலில் வரும் எழுத்துகள்

உயிரெழுத்துகளில் பன்னிரண்டும் மொழிக்கு முதலில் வரும். பின்வரும் எடுத்துக்காட்டுகளைக் கவனியுங்கள்.

**அ**ம்மா, **ஆ**டல், **இ**ரவு, **ஈ**கை, **உ**தவி, **ஊ**ஞ்சல், **எ**ழுத்து, **ஏ**க்கம், **ஐ**ந்திணை, **ஒ**ட்டகம், **ஓ**லை, **ஔ**வை.

உயிர்மெய் எழுத்துகளுள் பின்வரும் வரிசையிலுள்ள எழுத்துகள் மொழிக்கு முதலாகும்.

க, ச, த, ப, ங, ஞ, ந, ம, ய, வ ஆகிய பத்து எழுத்தும் மொழிமுதலாகும். இவற்றுள், முதல் ஆறு எழுத்து, அதன் வரிசையுடன் பன்னிரண்டாகும். இறுதியிலுள்ள நான்கு எழுத்துக்குரிய வரிசையில் வகர எழுத்தில் எட்டும், யகர எழுத்தில் ஆறும், ஞகர எழுத்தில் நான்கும் ஙகர எழுத்தில் ஒன்றும் மொழிக்கு முதலில் வரும்.

**க** வரிசை – (12) – **க**டல், **கா**ற்று, **கி**ளை, **கீ**ற்று, **கு**டம், **கூ**ட்டல், **கெ**டு, **கே**ள், **கை**வேலை, **கொ**டி, **கோ**ட்டை, **கௌ**ளி

**ங** வரிசை – (1) – **ங**ப்போல் வளை (ஆத்திசூடி) அங்ஙனம், இங்ஙனம், உங்ஙனம், எங்ஙனம் என அக்காலத்தில் வழக்கில் இருந்தன. 'ஙனம்' என்பது, இடத்தையும் தன்மையையும் உணர்த்தும் பலபொருள் ஒரு சொல்லாகும். இக்காலத்தில் 'ங' எழுத்து மொழிமுதல் பயன்பாட்டில் இல்லை. எனவே, ங வரிசையில் எந்தச் சொல்லும் இக்காலத்தில் தொடங்குவதில்லை.

**ச** வரிசை (12) – **ச**ட்டம், **சா**ர்பு, **சி**னம், **சீ**ற்றம், **சு**க்கு, **சூ**டு, **செ**ந்தமிழ், **சே**ர்த்தல், **சை**கை, **சொ**த்து, **சோ**ளம், **சௌ**க்கியம்

**ஞ** வரிசை – (4) – ஞமலி, ஞாலம், ஞெகிழி, ஞொள்கிற்று. இக்காலத்தில் **ஞெ, ஞொ** ஆகிய இரண்டும் வழக்கில் இல்லை.

**த** வரிசை – (12) – **த**ம்பி, **தா**ய், **தி**ண்ணை, **தீ, து**ன்பம், **தூ**க்கம், **தெ**ய்வம், **தே**ங்காய், **தை**யல், **தொ**ழில், **தோ**கை, தௌவல்

**ந** வரிசை – (12) – **ந**ன்மை, **நா**டு, **நி**ழல், **நீ**ளம், **நு**கத்தடி, **நூ**ல், **நெ**ல், **நே**ற்று, **நை**தல், **நொ**ச்சி, **நோ**ய், **நௌ**வி

**ப** வரிசை (12) **–** **ப**ள்ளி, **பா**டம், **பி**ள்ளை, **பீ**ர்க்கங்காய், **பு**ன்னை, **பூ**மாலை, **பெ**ண், **பே**ழை, **பை**ந்தமிழ், **பொ**ன், **போ**க்கு, **பௌ**வம்

**ம** வரிசை – 12) – **ம**லர், **மா**ன், **மி**கை, **மீ**ன், **மு**ள், **மூ**ன்று, **மெ**ன்மை, **மே**ல், **மை**விழி, **மொ**ழி, **மோ**ப்பம், **மௌ**வல்

**ய** வரிசை – (6) – **ய**வனர், **யா**னை, **யு**கம், **யூ**கம், **யோ**சி, **யௌ**வனம்

**வ** வரிசை – (8) – **வ**ண்டி, **வா**ளி, **வி**ல், **வீ**டு, **வெ**ட்சி, **வே**லை, **வை**கை, **வௌ**வால்

மேற்கூறிய தடித்த எழுத்துகள், ஒரு சொல்லுக்கு முதலில் வருகின்றன. இவையன்றி, பிறமொழிச் சொற்கள் தமிழில் கலக்கும்போது, அவற்றின் ஒலிக்கேற்ப, இம்முதல் எழுத்துகளில் தொடங்குவதும் உண்டு. எடுத்துக்காட்டாக,

அநியாயம் (வடசொல்)

ஆப்பிள் (ஆங்கிலச்சொல்)

பின்வரும் எடுத்துக்காட்டுகளையும் கவனியுங்கள். பிறமொழிச் சொற்களுள் சில, தமிழில் எந்த மாற்றமுமின்றி அப்படியே ஒலிக்கப்படுகின்றன. அவை, தமிழ் எழுத்துகளால் எழுதப்பட்டாலும் தமிழ்ச்சொற்கள் அல்ல. அத்தகைய சொற்கள் மொழிக்கு முதலில் வராத எழுத்துகளில் தொடங்கும் சொற்களாகவும் உள்ளன. எடுத்துக்காட்டாக,

லட்டு, ரம்பம், ரப்பர், ரவை, டப்பா, லண்டன், லுங்கி, ரொட்டி, ரிக்ஷா, ஜாங்கிரி, ஜிலேபி, ஐஸ்கிரீம், லாபம் போன்று வரும் சொற்களுக்கு முன்னால், இகரம் சேர்த்து 'இலாபம்' என எழுதுவதுண்டு. மேலும், ராமாயணம் – இராமாயணம், லோகம் – உலோகம், ரங்கன் – அரங்கன் என லகர, ரகர எழுத்தில் தொடங்கும் சொற்களுக்கு முன்னால், அ, இ, உ ஆகியவற்றில் ஏதேனும் ஒன்றைப் பயன்படுத்தி எழுதுவர்.

இக்காலத்தில் எல்லாச் சொற்களுக்கும் இது பொருந்தவில்லை. எடுத்துக்காட்டாக, ஆங்கிலச் சொல்லான 'ரப்பர்' என்பதை, 'இரப்பர்' என எழுதினாலோ பேசினாலோ அதன் உண்மையான பொருள் (Rubber) என்பது அறியப்படாமல், 'யாசிப்பவர்' எனப் பொருளைத் தந்துவிடும். இதனால், பெரும்பாலும், லகர, ரகர எழுத்தில் தொடங்கும் சொற்கள் அந்தந்த எழுத்தையே முதலாகக் கொண்டுள்ளன.

### 1.11.2 மொழிக்கு இடையில் வரும் எழுத்துகள்

தமிழில் மொழிக்கு இடையில் ர், ழ் ஆகிய மெய்யெழுத்துகள் தத்தம் எழுத்தோடு சேர்ந்து வருவதில்லை. அவை தவிர்த்த பதினாறு மெய்யும் தத்தம் மெய்யோடு மொழிக்கு இடையில் வரும். (எ.கா.) சக்கரம், எங்ஙனம், மச்சம், மஞ்ஞை, வட்டம், எண்ணம், மொத்தம், அந்நியன், அப்பம், அம்மி, மெய்யன், பல்லி, கொல்லை, உள்ளம், குற்றம், அன்னம்.

மேலும், க், ச், த், ப் தவிர்த்து ஏனைய மெய்கள், பிறமெய்களோடு சேர்ந்தும் மொழிக்கு இடையில் வரும். (எ.கா.) சங்கம், வஞ்சி, வெட்கம், இரண்டு, கந்தம், கம்பன், கொய்சகம், சேர்க்கை, செல்வம், தெவ்யாது, கள்வன், வாழ்க, கற்க, அன்பு.

### 1.11.3 மொழிக்கு இறுதியில் வரும் எழுத்துகள்

பன்னிரண்டு உயிரெழுத்தும் பதினொரு மெய்யெழுத்தும், குற்றியலுகரமும் ஆக மொத்தம் 24 எழுத்தும் மொழிக்கு இறுதியில் வரும்.

**(எ.கா.)**

(1) உயிரெழுத்து, தனித்து வருதல்

ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ (ஓரெழுத்து ஒருமொழி)

(2) உயிரெழுத்து, மெய்யுடன் வருதல்

சால (ல் + **அ**), உலா (ல் + **ஆ**), பனி (ன் + **இ**), தீ (த் +**ஈ**), நடு (ட் + **உ**), பூ (ப் + **ஊ**), சேள, தே (த் + **ஏ**), தை (த் + **ஐ**), நொ (ந் + **ஒ**), போ (ப் +**ஓ**), கௌ (க் + **ஔ**)

**மெய்யெழுத்துகள்**

ஞ் – உரிஞ், ண் – மண், ந் – பொருந், ம் – மரம், ன் – பொன், ய் – வேய், ர் – வேர், ல் – வேல், வ் – தெவ், ழ் – வீழ், ள் – வாள்

**குற்றியலுகரம்**

சுக்கு, மாசு, வண்டு, சால்பு, அஃது, பாலாறு

பிறமொழிச் சொற்கள் தமிழில் வழங்கும்போது, இங்குச் சுட்டிக்காட்டப்படாத எழுத்துகளில் முடிவதும் உண்டு. அவ்வாறு வரும் எழுத்துகளுடன் உகரம் சேர்த்து ஒலிக்கப்படுகிறது. (எ.கா.) இங்கிலாந் – இங்கிலாந்து,

## 1.12 மெய்ம்மயக்கம்

மெய்யெழுத்துகள் பதினெட்டு என நாம் அறிந்துள்ளோம். இவ்வெழுத்துகளுள் சில தம்முடன் தாம் மயங்கும். சில எழுத்துகள் தம்முடன் பிற மயங்கும். இவ்வாறு வருவதனை மெய்யெழுத்துகள் மயங்குதல் எனக் கூறுவர்.

எடுத்துக்காட்டாக, 'பள்ளி' இச்சொல்லைக் கவனியுங்கள். இதில், ளகர மெய்க்கு அடுத்து அதே மெய் (ள் + இ) வந்துள்ளது. இவ்வாறு வருவது மெய்ம்மயக்கம்.

மற்றோர் எடுத்துக்காட்டைப் பாருங்கள். 'தங்கம்' இச்சொல்லில், ஙகர மெய்க்கு அடுத்துக் ககர மெய் (க் + அ) வந்துள்ளது. இவ்வாறு வருவதும் மெய்ம்மயக்கம்தான்.

எனவே ஒரு மெய்யெழுத்தானது, அதே மெய்யெழுத்துடனோ பிற எழுத்துகளுடனோ மயங்கி வரும் என அறிகிறோம், அவை, உடனிலை மெய்ம்மயக்கம், வேற்றுநிலை மெய்ம்மயக்கம் என்பன.

### 1.12.1 உடனிலை மெய்ம்மயக்கம்

மெய்யெழுத்துகளுள் ரகரம், ழகரம் ஆகிய இரண்டு மெய்யெழுத்தையும் தவிர்த்து, ஏனைய பதினாறு மெய்யும் தம்முடன் தாம் கூடிவரும். அதாவது, மயங்கிவரும். பின்வரும் எடுத்துக்காட்டுச் சொற்களைக் கவனித்தால் நன்கு விளங்கும்.

**பக்கம்**, **அங்ஙனம்**, **அச்சம்**, **விஞ்ஞானம்**, **சட்டம்**, **கண்ணன்**, **தத்தை**, **எந்நாள்**, **அப்பளம்**, வன்**மம்**, செ**ய்யா**மை, வெ**ல்லம்**, கொ**வ்வை**, ப**ள்ள**ம், ப**ற்று**, **கன்னி**

### 1.12.2 வேற்றுநிலை மெய்ம்மயக்கம்

மெய்யெழுத்துகளுள் க,ச,த,ப ஆகிய நான்கும் தவிர்த்து ஏனைய பதினான்கு மெய்யும் பிற மெய்யெழுத்துகளுடன் கூடிவரும். இவ்வாறு மெய்ம்மயங்குவதை வேற்றுநிலை மெய்ம்மயக்கம் என்கிறோம். பின்வரும் எடுத்துக்காட்டுகள் வழி, இதனைப் புரிந்துகொள்ளலாம்.

வ**ங்க**ம், ப**ஞ்சு**, தி**ட்ப**ம், வெ**ண்க**லம், ப**ந்து**, ப**ம்ப**ரம், செ**ய்தி**, போ**ர்வை**, வெ**ல்க**, தா**ழ்ப்**பாள், கே**ள்வி**, கற்குவியல், ம**ன்ற**ம்.

> **அறிவோம்! தெளிவோம்!**
>
> **முயற்சியா? முயற்ச்சியா?**
>
> முயற்சி என்பதே சரி. 'ற்', 'ட்' என்னும் வல்லினமெய்களுக்கு அருகில் அதே வல்லினமெய்கள் எப்போதும் வருவதில்லை.
>
> பயிற்சி - சரி
> பயிற்ச்சி - தவறு
> நட்பு - சரி
> நட்ப்பு - தவறு
>
> **முயற்சித்தான்/முயன்றான் – எது சரி?**
>
> முயன்றான் என்பதே சரி. முயற்சி என்பது தொழிற்பெயர். இதிலிருந்து வினைமுற்று உருவாகாது. பயிற்சி என்னும் சொல்லைப் பயிற்சித்தான் என்று நாம் கூறுவதில்லை. பயின்றான் என்றே கூறுகிறோம். இதனை நினைவிற்கொண்டால், பிழையைத் தவிர்க்கலாம்.

## 1.13 எழுத்துப்போலி

நலமா, நலனா?

நிலமா, நிலனா?

மேற்கண்டவற்றுள் எவை சரியானவை? இத்தகைய சொற்களை நீங்கள் அறிந்திருப்பீர்கள். 'நலம்', 'நிலம்' என வரவேண்டிய சொற்கள், 'நலன்', 'நிலன்' எனவும் வருகின்றன. இவ்வாறு ஒரு சொல்லில் வரவேண்டிய எழுத்துக்கு மாற்றாக வேறோர் எழுத்து மயங்கி வருவதனை 'எழுத்துப் போலி என்கிறோம். இதனால், பொருள் மாற்றம் ஏற்படுவதில்லை. எழுத்துப்போலியில் மூவகை உண்டு. அவை முதற்போலி, இடைப்போலி, இறுதிப்போலி என்பன.

### 1.13.1 மொழி முதற்போலி

பசல் – **பைசல்**

மஞ்சு – **மைஞ்சு**

மயல் – **மையல்**

மேற்கண்ட எடுத்துக்காட்டில், தடித்த எழுத்துகளில் உள்ள சொற்கள் எழுத்துப்போலிகள். மொழிமுதல் எழுத்தான 'ப' எழுத்துக்கு, 'பை' என்பது போலி. இவ்வாறே, 'ம' எழுத்துக்கு 'மை' என்பது போலி. சகரம், ஞகரம், யகரம் ஆகிய எழுத்துகள் வரும்போதும்தான் இத்தகைய எழுத்துப்போலிகள் வருகின்றன.

### 1.13.2 மொழி இடைப்போலி

அமச்சு – **அமைச்சு**

இலஞ்சி – **இலைஞ்சி**

அரயர் – **அரையர்**

மேற்கண்ட எடுத்துக்காட்டில், தடித்த எழுத்துகளில் உள்ள சொற்கள் எழுத்துப்போலிகள். இங்கு, மொழிக்கு இடையில் வந்துள்ளன.

### 1.13.3 மொழி இறுதிப்போலி

அகம் – அக**ன்**

சுரும்பு – சுரும்ப**ர்**

பந்தல் – பந்த**ர்**

சாம்பல் – சாம்ப**ர்**

மேற்கண்ட சொற்களில் தடித்த எழுத்துகள் கொண்டவை எழுத்துப்போலிகள். இவை சொல்லின் இறுதியில் வந்துள்ளன. இதனால், பொருள் மாற்றம் ஏற்படுவதில்லை.

இதுவரை எழுத்துகள் மயங்கி வருவதனையும் எழுத்துப்போலிகளாக வருவதனையும் அறிந்தோம். இவற்றையும் கவனத்தில் கொள்வோம்.

**அறிவோம்! தெளிவோம்!**

**சுவற்றிலா? சுவரிலா? – எது சரி?**

சுவரில் என்பதே சரி. சுவல் என்பதன் எழுத்துப்போலி சுவர் என்பது. சுவல் என்பதற்குத் தோள் என்று பொருள். தோள் போலத் தாங்கி நிற்பது என்னும் காரணப்பெயர் அடிப்படையில் சுவல் – சுவர் என வழங்குகிறது.

மொழிக்கு இறுதியில் வரும் எழுத்துகளில் 'ற்' என்பது இல்லை. ஆகவே, 'சுவற்' என்பது ஒரு சொல்லில்லை. இதிலிருந்து 'சுவற்றில்' என்பது எவ்வாறு உருவாகும்? சிந்தியுங்கள். பிழையின்றி எழுத முயல்வோம்.

## 1.14 தொகுப்புரை

நாம் இதுவரை தமிழ் எழுத்துகளின் வகைதொகை, அவை பிறக்குமிடங்கள், அவற்றின் ஒலிப்புமுறைகள் ஆகியவற்றை விரிவாகப் பார்த்தோம். தமிழில் மயங்கொலிகள் சிறப்பிடம் பெறுவதால், அவற்றைப் பற்றிய விரிவான விளக்கத்தையும் அவை பயன்படும் இடங்கள் பற்றியும் அறிந்துகொண்டோம். மொழிக்கு முதல், இடை, இறுதி ஆகிய இடங்களில் எந்தெந்த எழுத்துகள் வரும் என்பதையும், எழுத்துகளின் மயக்கம், எழுத்துப்போலி எவ்வாறு வரும் என்பதையும் அறிந்துகொண்டோம். தமிழில் தவறின்றிப் பேசுவதற்கும் எழுதுவதற்கும் தமிழ் எழுத்துகளின் அறிமுகம் நன்கு தேவை. ஒரு சொல்லில் இடம்பெற வேண்டிய எழுத்து, வேறொன்றாக மாறினால் பொருட்குழப்பத்தை ஏற்படுத்திவிடும். இதனை நன்குணர்ந்து பிழையின்றி எழுதப் பயிற்சி பெறவேண்டும். தமிழில் பிழையின்றிப் பேசவும் எழுதவும் விரும்புபவர்கள், தமிழ் எழுத்துகளின் வரிவடிவங்களையும் ஒலிவடிவங்களையும் நன்கு உற்றுநோக்கிக் கவனத்தில் கொள்ள வேண்டும். பன்முறைப் பயிற்சி, பிழையின்றிப் பேசவும் எழுதவும் உதவும்.

## பயிற்சிகள்

**அ) பின்வரும் சொல்லில் இடம்பெற வேண்டிய சரியான எழுத்தைக் கண்டறிக.**

1. நான் கடையில் பு_ வாங்கினேன். (ளி / லி)

2. யானை ப_ மரத்தைக் கண்டது. (லா/ ழா)

3. இந்த நா_காலி மரத்தால் செய்யப்பட்டுள்ளது. (ர்/ ற்)

4. முத்தமிழ் என்பது இயல், இசை, _டகம் என்பனவாகும். (ணா/ நா)

5. திருக்குறள் பதினெ_ கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. (ண்/ ன்)

**ஆ) பின்வரும் படத்திற்குரிய முதலெழுத்தை அடைப்புக் குறியிலிருந்து தேர்ந்தெடுத்துப் பெயரைக் கூறுக.**

1.  (கொ / கோ)

2.  (பே/ பெ)

3.  (செ/ சே)

4.  (பு/ பூ)

5.  (நா / ந)

**இ) பொருத்துக.**

| சொல் | – | பொருள் |
|---|---|---|
| 1. கனி | – | காடு |
| 2. குளம் | – | வீரம் |
| 3. கான் | – | பழம் |
| 4. ஒலி | – | நீர்நிலை |
| 5. மறம் | – | ஓசை |

**ஈ) பின்வரும் பாடலில் இடம்பெற வேண்டிய சரியான சொல் எது?**

________எழுந்தவுடன் படிப்பு (கலை / காலை)

பின்பு கனிவு கொடுக்கும் நல்ல ________ (பட்டு / பாட்டு)

மாலை முழுதும் ________ (விலையாட்டு/ விளையாட்டு)

என்று வழக்கப்படுத்திக்________பாப்பா (கொள்ளு / கொல்லு)

**உ) பின்வரும் படம் எந்தெந்த எழுத்திற்குரிய ஒலிப்புமுறையைச் சுட்டுகிறது?**



1. ________ 2. ________ 3. ________

**ஊ) பின்வரும் நுண்கதையிலிருந்து சுட்டுச் சொற்கள் சுட்டுத் திரிபுகள் ஆகியவற்றைக் கண்டறிக.**

ஆற்றங்கரையோரம் ஆலமரம் ஒன்று இருந்தது. அந்த மரத்தில் பறவைகளின் 'கீச் கீச்' ஒலி எப்போதும் கேட்டுக்கொண்டே இருக்கும். ஆற்றின் கரையோரம் இருந்த வீடு ஒன்றில் சிறுவன் ஒருவன் தன் தாயுடன் வசித்து வந்தான். ஒருநாள், காற்று சுழன்றடித்தது. மரத்திலிருந்த இலைகள் உதிர்ந்தன. மழை சடசடவெனப் பெய்யத் தொடங்கியது. அச்சிறுவன் வீட்டிற்கு வெளியே நின்று, மழை பெய்வதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தான். அப்போது, சிறு பறவை ஒன்று தட்டுத் தடுமாறி மேலிருந்து விழுந்தது. அது பறக்க முடியாமலும் மழைநீரில் நனைந்துகொண்டும் துன்பப்பட்டது. சிறுவன், உடனே தன் அம்மாவை அழைத்தான். "அம்மா, அந்தப் பறவையைப் பாருங்கள். பறக்கமுடியாமல் கீழே விழுந்துவிட்டது." என்று கூறினான். அங்கு வந்த சிறுவனின் அம்மா, "அடடா, இந்தப் பறவைக்கு இறக்கைகூட

இன்னும் சரியாக முளைக்கவில்லை. இங்கு வேறு எந்தப் பறவையையும் காணோமே" என்று கூறியவாறு, அந்தச் சிறுபறவையை மெதுவாகக் கையிலெடுத்தார். துணியால் அதனை அரவணைத்தவாறே வீட்டிற்குள் கொண்டு சென்றார். இப்போது, சிறுவனின் வீட்டிலும் 'கீச், கீச்' ஒலி மெல்லக் கேட்கத் தொடங்கியது.

**எ) பின்வரும் செய்தியிலுள்ள மயங்கொலிப் பிழைகளை நீக்கி எழுதுக.**

தமிலில் சிரந்த இலக்கியப் படைப்புக்காக 2021ம் ஆன்டின் சாகித்ய அகாடமி விருதுக்கு எலுத்தாலர் அம்பை தேர்வு செய்யப்பட்டுல்லார். அம்பை எளுதிய 'சிவப்புக் கழுத்துடன் ஒரு பச்சைப் பறவை' என்ர சிருகதைத் தொகுப்புக்குத் தமிழுக்கான சாகித்ய அகாடமி விருது கிடைத்துல்லது. "பென் யாருக்கும் உடைமைப் பொருள் அல்லள்; தனக்கென்று தனி விருப்பங்கலும், சுயமரியாதையும் கொன்டவல் பென்" என்பதை அம்பையின் படைப்புகள் வளியுருத்துகின்றன.

**ஏ) எழுத்துகளின் பெயர்களை எழுதுக**

ண – ____________

ன – ____________

ந – ____________

ல – ____________

ள – ____________

ழ – ____________

ற – ____________

ர – ____________

**ஐ) ஓரிரு தொடரில் விடை தருக.**

1. கல்வி – இச்சொல்லில் அமைந்துள்ள அடிப்படை ஒலிகளைக் கூறுக.
2. உலக மொழிகள் அனைத்திற்கும் அடிப்படையாக அமைந்துள்ள உயிரொலிகள் எவை?
3. குறிலோசை, நெடிலோசை இவ்விரண்டையும் வேறுபடுத்தும் ஏதேனும் ஒரு சொல் கூறுக.
4. அது, இது – இவ்விரண்டில் அருகிலுள்ள பொருளைக் குறிப்பிடும் சொல் எது?
5. 'முக்கனியில் சிறந்தது எக்கனி?' – இத்தொடரில் இடம்பெற்றுள்ள வினா எழுத்து எது?
6. ஒலிக்கும் முறையில் வேறுபடும். ஆனால், ஒலிக்கும் அளவில் வேறுபடாது. இக்கூற்று எந்த எழுத்துகளுக்குப் பொருந்தும்?

7. ஸ, ஷ, ஜ, ஹ – இவை தமிழ் எழுத்துகள் அல்ல என்பதற்கு வெளிப்படையாகத் தெரியும் அடையாளம் எது?

8. பந்து, பட்டம் – இவ்விரு சொல்லில் ஒலிமாற்றம் பெறும் சொல் எது?

9. றன்னகரம் என்பது, எந்த எழுத்தைக் குறிக்கிறது?

10. விலை – விளை – விழை பொருள் வேறுபாடு உணர்ந்து தொடர் அமைக்க.

## விடைகள்

**அ) சரியான எழுத்து**

1. பு**ளி** 2. ப**லா** 3. நா**ற்**காலி 4. **நா**டகம் 5. பதினெ**ண்**

**ஆ) படத்திற்கேற்ற சரியான சொல்**

1. **கொ**க்கு 2. **பெ**ட்டி 3. **சே**வல் 4. **பூ**ட்டு 5. **ந**ண்டு

**இ) பொருத்துக.**

| சொல் | – | பொருள் |
|---|---|---|
| 1. கனி | – | பழம் |
| 2. குளம் | – | நீர்நிலை |
| 3. கான் | – | காடு |
| 4. ஒலி | – | ஓசை |
| 5. மறம் | – | வீரம் |

**ஈ) பாடலில் சரியான சொல்**

காலை, பாட்டு, விளையாட்டு, கொள்ளு

**உ) படம் குறிக்கும் ஒலிப்புக்குரிய எழுத்துகள்**

1. ண 2. ன 3. ந

**ஊ) நுண்கதையில் இடம்பெற்றுள்ள சுட்டுச் சொற்கள், சுட்டுத் திரிபுகள்**

ஆற்றங்கரையோரம் ஆலமரம் ஒன்று இருந்தது. **அந்த** மரத்தில் பறவைகளின் 'கீச் கீச்' ஒலி எப்போதும் கேட்டுக்கொண்டே இருக்கும். ஆற்றின் கரையோரம் இருந்த வீடு ஒன்றில் சிறுவன் ஒருவன் தன் தாயுடன் வசித்து வந்தான். ஒருநாள், காற்று சுழன்றடித்தது. மரத்திலிருந்த இலைகள் உதிர்ந்தன. மழை சடசடவெனப் பெய்யத் தொடங்கியது. **அச்சிறுவன்** வீட்டிற்கு வெளியே நின்று, மழை பெய்வதை வேடிக்கை பார்த்துக்கொண்டிருந்தான். **அப்போது,** சிறு பறவை ஒன்று தட்டுத் தடுமாறி மேலிருந்து விழுந்தது. **அது** பறக்கமுடியாமலும் மழைநீரில் நனைந்துகொண்டும் துன்பப்பட்டது. சிறுவன், உடனே தன் அம்மாவை அழைத்தான். "அம்மா, **அந்தப்** பறவையைப் பாருங்கள். பறக்கமுடியாமல் கீழே விழுந்துவிட்டது." என்று கூறினான். **அங்கு** வந்த சிறுவனின் அம்மா, "அடடா, **இந்தப்** பறவைக்கு இறக்கைகூட இன்னும் சரியாக முளைக்கவில்லை. **இங்கு** வேறு எந்தப் பறவையையும் காணோமே" என்று கூறியவாறு, **அந்தச்** சிறுபறவையை மெதுவாகக் கையிலெடுத்தார். துணியால் **அதனை** அரவணைத்தவாறே வீட்டிற்குள் கொண்டு சென்றார். **இப்போது**, சிறுவனின் வீட்டிலும் 'கீச், கீச்' ஒலி மெல்லக் கேட்கத்தொடங்கியது.

**எ) பின்வரும் செய்தியிலுள்ள மயங்கொலிப் பிழைகளை நீக்கி எழுதுக.**

தமிழில் சிறந்த இலக்கியப் படைப்புக்காக 2021ஆம் ஆண்டின் சாகித்ய அகாடமி விருதுக்கு எழுத்தாளர் அம்பை தேர்வு செய்யப்பட்டுள்ளார். அம்பை எழுதிய 'சிவப்புக் கழுத்துடன் ஒரு பச்சைப் பறவை' என்ற சிறுகதைத் தொகுப்புக்குத் தமிழுக்கான சாகித்ய அகாடமி விருது கிடைத்துள்ளது. "பெண் யாருக்கும் உடைமைப் பொருள் அல்லள்; தனக்கென்று தனி விருப்பங்களும், சுயமரியாதையும் கொண்டவள் பெண்" என்பதை அம்பையின் படைப்புகள் வலியுறுத்துகின்றன.

**ஏ) எழுத்துகளின் பெயர்களை எழுதுக.**

ண – டண்ணகரம்

ன – றன்னகரம்

ந – தந்நகரம்

ல – தனி லகரம்

ள – பொது ளகரம்

ழ – சிறப்பு ழகரம்

ற – வல்லின றகரம்

ர – இடையின ரகரம்

**ஐ) ஓரிரு தொடரில் விடை அளிக்க.**

1. உயிரொலிகள், மெய்யொலிகள் – **க், அ, ல், வ், இ**
2. அ, ஆ
3. கல் – கால்
4. இது
5. **எ**க்கனி – **எ** என்னும் எழுத்து
6. மெய்யெழுத்துகள்
7. வரிவடிவம் (உருவ மாற்றம்)
8. பந்து
9. றன்னகரம் – **ன**

10. விலை – வீட்டை விலைக்கு வாங்கினேன்.

விளை – வயலில் பயிர்கள் நன்றாக விளைந்திருந்தன.

விழை – பேச்சுப்போட்டியில் பங்கேற்க விழைந்தேன்.

## பாடம் 2

## சொல்வகைகள் அறிமுகம்

### 2.0 முன்னுரை

தமிழ் எழுத்துகளின் அறிமுகத்திற்கு அடுத்துச் சொற்கள் அறிமுகமாகின்றன. நாம் பேசும்போது சொற்களாய்ப் பேசுவதைக் காட்டிலும் தொடர்களாய்ப் பேசுவது மிகுதி. அவ்வகையில் எழுத்துகள் பல சேர்ந்து பொருள் தரும் சொற்களாகின்றன. சொற்கள் பல சேர்ந்து தொடர்களாகின்றன. இந்தப் பிணைப்பு ஒன்றுடன் ஒன்று சங்கிலித்தொடர்போல் இணைந்துள்ளது. இந்தப்பாடம், உங்களுக்குத் தமிழில் வழங்கும் சொல்வகைகளையும் அவற்றின் பயன்பாடுகளையும் எடுத்துரைக்கிறது.

### 2.1 பதம்

ஒன்று அல்லது ஒன்றிற்கும் மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்து நின்று பொருள் தருவது, சொல் எனப்படும்.

எகா. பூ, கனி, கல்வி, பட்டம்.

எழுத்துகளால் உருவானதாக இருந்தாலும் பொருள் தருவதாக இருந்தால் மட்டுமே அது சொல் எனப்படுகிறது. பொருள் தராதவை சொல் என்று கூறப்படுவது இல்லை. எடுத்துக்காட்டாக,

வில்க

இதில் ஒன்றிற்கு மேற்பட்ட எழுத்துகள் தொடர்ந்து வந்துள்ளன. ஆயினும், பொருள் தரவில்லை. எனவே, **இதனைச்** சொல் என்று சொல்வதில்லை.

ஒரு மொழிக்கு அடிப்படை அம்மொழியில் உள்ள எழுத்துகள் ஆகும். எழுத்துகள் ஒன்றோ பலவோ சேர்ந்து சொல் உருவாகிறது. கிளவி, **பதம், மொழி** என்பன சொல்லின் வேறுபெயர்கள். ஒரு சொல் தனித்து நின்றோ பல சொற்கள் சேர்ந்து நின்றோ சொற்றொடர் உருவாகும். இவ்வாறு ஒரு மொழியின் படிநிலைகள் அமைகின்றன.

ஓர் எழுத்துச் சொற்கள் = பூ, வா, ஆ, கை, பை, ஈ, தை.

ஈரெழுத்துச் சொற்கள் = நட, நில், படி, கண், இழு.

மூவெழுத்துச் சொற்கள் = பலம், புறம், கடல், தண்மை, மாண்பு.

நாலெழுத்துச் சொற்கள் = கடவுள், சிறுத்தை, வேந்தன், அரும்பு, தங்கம்.

மேலும், நாலெழுத்துகளுக்கு மேற்பட்ட சொற்கள் தமிழில் உண்டு.

## 2.2 பதம் இரண்டு

பிரிக்கக்கூடிய சொல், பகுபதம் ஆகும். பிரிக்க இயலாத சொல், பகாப்பதம் ஆகும். பகுபதங்களைப் பெயர்ப் பகுபதம், வினைப் பகுபதம் என இரண்டாகப் பகுக்கலாம். வினைப் பகுபதம், தெரிநிலை வினைப்பகுபதம், குறிப்பு வினைப்பகுபதம் என்று இருவகைப்படும்.




ஒரு பகுபதச் சொல் பிரிந்து நிற்கும் நிலையில் அமையும் உறுப்புகள் பகுபத உறுப்புகள் எனலாம். இப்பகுபத உறுப்புகள் **ஆறு** வகைப்படும். **அவை** பகுதி, விகுதி, இடைநிலை, சந்தி, சாரியை, விகாரம் என்பனவாகும்.




ஒரே சொல்லில் இந்த ஆறு உறுப்பும் அமையலாம். ஒன்றோ பலவோ குறைந்தும் வரலாம்.

எ.கா. கண்டனன் = காண் (கண்) + ட் + அன் + அன்

வாழ்க = வாழ் + க

### 2.2.1 பகுதி

ஒரு பகுபதத்தின் முதலில் அமையும் உறுப்பு பகுதி ஆகும். எனவே, இதனை முதனிலை என்றும் வழங்கலாம். பகுதி பெயர்ச்சொல்லாக வந்தால் பொருள், இடம், காலம், சினை, குணம் தொழில் ஆகிய அறுவகைப் பெயர்ச்சொற்களுள் ஒன்றாகவும் வினைச்சொல்லாக இருப்பின், விகுதி பெறாத ஏவல்வினையாகவும் அமையும். பகுபதத்திலுள்ள பகுதி பொருள் உடையதாக இருக்கும். உண்டான் என்னும் பகுபதத்தில் (உண்+ட்+ஆன்) உண் என்பது பகுதியாகும்.

1. பொருட்பெயர் – பொன்னன் (பொன் + அன்)
2. இடப் பெயர் – வெற்பன் (வெற்பு + அன்)
3. காலப் பெயர் – ஆதிரையன் (ஆதிரை + அன்)
4. சினைப் பெயர் – கண்ணன் (கண் + அன்)
5. குணப் பெயர் – கரியன் (கருமை + அன்)
6. தொழிற் பெயர் – சொல்லன் (சொல் + அன்)

### 2.2.2 விகுதி

பகுபதத்தின் இறுதியில் நிற்கும் உறுப்பு என்பதால், இதனை இறுதிநிலை என்றும் வழங்குவர்.

உண்டான் என்னும் பகுபதத்தில் (உண் + ட் + ஆன்) ஆன் என்பது விகுதி ஆகும். இது திணை (உயர்திணை), பால் (ஆண்பால்), எண், (ஒருமை) இடம் (படர்க்கை) ஆகியவற்றைக் காட்டிநிற்கும்.

**ஆண்பால் பெயர் விகுதிகள்**

அன், ஆன், மன், மான்

**சான்று:** வெற்பன்(அன்), வானத்தான்(ஆன்), வடமன்(மன்), மலையமான்(மான்),

**பெண்பால் விகுதிகள்**

அள், ஆள், தற்போது இ, ஐ என்ற விகுதிகளும் வருகின்றன.

**சான்று**: இவள் (அள்), குழலாள்(ஆள்), பொன்னி(இ), கோதை (ஐ).

**பலர்பால் பெயர் விகுதிகள்**

அர், ஆர், மார்,

**சான்று:** மறவர்(அர்), ஓதுவார்(ஆர்), தேவிமார்(மார்)

**ஒன்றன்பால் பெயர் விகுதி**

து

ஈற்றில் முடிவது ஒன்றன்பால் ஆகும்.

**சான்று**: அது, யாது, அஃது,

**பலவின்பால் பெயர் விகுதிகள்**

வை, அ, கள்.

**சான்று**: அவை (வை), கரியன(அ), கிளிகள்(கள்).

பன்மையைக் குறிக்கப் பெயர்களோடு சேர்க்கப்படும் 'கள்' விகுதி உயர்திணைப் பன்மைப் பெயர்களோடும் அஃறிணைப் பன்மைப் பெயர்களோடும் சேர்க்கப்படுகின்றன.

**சான்று**: நாம், இவை, இச்சொற்களே பன்மையைக் குறிக்கும். பன்மையைக் குறிக்க கள் விகுதியை மேலும் இவற்றோடு சேர்க்க வேண்டியதில்லை. ஆனால் பயன்பாட்டில் சேர்க்கின்றோம். இதை **விகுதி மேல் விகுதி** என்பர்.

நாங்கள் (நாம் + கள்) அவர்கள்(அவர் + கள்), உயர்திணைப் பன்மைப் பெயர்கள்.

இவை, இக்கால வழக்கில் ஏற்றுக் கொள்ளப்பட்டன. ஆயினும், இவைகள் (இவை + கள்) என்னும் சொல் தவறான சொல்லாக்கமாகக் கொள்ளப்படுகிறது. 'இது' என்னும் ஒருமைக்கு 'இவை' என்பதே பன்மையாகும்.

**அறிவோம்! தெளிவோம்!**

**ஓட்டுநர்/ ஓட்டுனர் – எது சரி?**

ஓட்டுநர் என்பதே சரி. ஓட்டு என்னும் வினைச் சொல்லுடன் 'நர்' என்னும் விகுதி சேர்ந்து பெயராகிறது.

அனுப்பு + நர்
செலுத்து + நர்
இயக்கு + நர்
நடத்து + நர்

இவை போன்று பெயர்ச்சொற்கள் உருவாகின்றன. 'ஓட்டு' என்பதுடன் 'னர்' சேர்ந்து பெயராக மாறுவதில்லை. இது, தவறான சொல்லாக்கம். ஓட்டினர், அனுப்பினர், இயக்கினர், நடத்தினர் என வரும் வினைமுற்றுகளில், 'னர்' என்னும் வடிவம் இருப்பதைக் காணுங்கள். இச்சொற்களில், (ஓட்டு + (இ)ன் + அர்) னகர ஒற்று காலங்காட்டும் இடைநிலையாக உள்ளது. 'அர்' என்பது விகுதியாக உள்ளது. எனவே, **ஓட்டுநர்** என்பதை பெயரைக் குறிக்கவும் **ஓட்டினர்** என்பதை வினையைக் குறிக்கவும் பயன்படுத்துவோம்.

**இடம்**

பேசுகின்றவன் தன்னைத்தானே குறித்துக் கூறும் சொல்– தன்மை. தனக்கு முன்னால் யாரிடம் பேசுன்றானோ; அவனைக் குறிக்கும் சொல் முன்னிலை. தன்னையும் குறிக்காமல், எதிரில் இருப்பவனையும் குறிக்காமல் வேறொருவனைக் குறிக்கும் சொல், படர்க்கை. தன்மை, முன்னிலை, படர்க்கை என இடம் மூன்று வகைப்படும்.

நான் பார்த்தேன் – தன்மை

நீ பார்த்தாய் – முன்னிலை

அவர் பார்த்தார் – படர்க்கை

### 2.2.3 இடைநிலை

முதனிலைக்கும் (பகுதி) இறுதிநிலைக்கும் (விகுதி) இடையில் நிற்கும் உறுப்பு என்பதால் இடைநிலை என்னும் பெயர் பெறுகின்றது. பெரும்பாலும் காலம்காட்டும் உறுப்பாகவும், எதிர்மறைப் பொருள்தரும் உறுப்பாகவும் வரும். வினைப் பகுபதத்தில் இடைநிலை காலம் காட்டும் உறுப்பு ஆகும். உண்+ட்+ஆன் என்னும் பகுபதத்தில் – உண் – முதனிலை ட் – இடைநிலை ஆன் – இறுதிநிலை (விகுதி)

'இடைநிலை' – பகுதிக்கும் விகுதிக்கும் இடையில் அமைந்திருத்தலைக் காணலாம். இந்த இடைநிலை இறந்தகால இடைநிலை, நிகழ்கால இடைநிலை, எதிர்கால இடைநிலை என மூன்றாகும்.

- இறந்தகால இடைநிலை – த், ட், ற், (இ)ன்
- நிகழ்கால இடைநிலை – கிறு, கின்று, ஆநின்று
- எதிர்கால இடைநிலை – ப், வ்
- எதிர்மறை இடைநிலை – ஆ, ஆல், இல்

**அறிவோம்! தெளிவோம்!**

**வேண்டாம்/ வேண்டா – எது சரி?**

வேண்டா என்பதே சரி. வேண்டும் என்பதன் எதிர்ச்சொல், வேண்டா என்பதே. வேண்டா = வேண்டு + ஆ. இச்சொல்லில், 'ஆ' என்னும் எழுத்து எதிர்மறைப் பொருளைத் தருகிறது. வேண்டாம் = வேண்டு + ஆம். இச்சொல்லில், ஆம் என்னும் சொல், நேர்மறைப் பொருளைத் தருகிறது. ஆகவே, எதிர்மறைப்பொருளில் எதிர்ச்சொல்லாக வருவது, **வேண்டா** என்னும் சொல்தான். இதன் பொருள் அறியாமல் பேச்சிலும் எழுத்திலும் பலர் தவறாகப் பயன்படுத்துகின்றனர்.

**இறந்தகால இடைநிலை**

நடந்தான், கேட்டாள், கற்றார், பாடினாள் இவை யாவும் இறந்தகால வினைமுற்றுகள். இச்சொற்களின் இடையில் உள்ள த், ட், ற், இன் ஆகிய நான்கும் இறந்த காலம் உணர்த்தும் இடைநிலைகள் ஆகும்.

**நிகழ்கால இடைநிலை**

உண்கிறான், ஆடுகின்றாள், செல்லா நின்றார், (செல்கிறார் என்பது பொருள்) இந்த வினைமுற்றுச் சொற்கள் நிகழ்காலம் உணர்த்துகின்றன. நிகழ்காலம் உணர்த்தும் இடைநிலைகள் கிறு, கின்று, ஆநின்று ஆகிய மூன்றும் ஆகும். இக்காலத்தில் 'ஆநின்று' என்ற இடைநிலை, பெரும்பான்மையாக வழக்கில் இல்லை.

**எதிர்கால இடைநிலை**

காண்பார், தேடுவார்

இவ்விரு வினைமுற்றும் எதிர்காலம் உணர்த்தும் சொற்களாகும். இச்சொற்களில் உள்ள ப், வ், ஆகிய இரண்டும் எதிர்காலம் உணர்த்தும் இடைநிலைகள்.

### 2.2.4 சந்தி

இது பெரும்பாலும் முதனிலை (பகுதி)க்கும் இடைநிலைக்கும் இடையில் வரும். பகுதிக்கும் விகுதிக்கும் இடையிலும் சிறுபான்மை வரக்கூடும். உறுப்புகளின் இணைவில் (சந்தி), அவற்றை இணைக்க வருவது சந்தி. நடத்தல் என்னும் பகுபதம் நட + த் + தல் என்று பிரிந்து வரும்.

நட – பகுதி த் – சந்தி தல் – விகுதி

பகுதிக்கும், விகுதிக்கும் இடையில் 'த்' சந்தி வந்திருப்பதைக் காண முடிகிறது.

### 2.2.5 சாரியை

இது பெரும்பாலும், இடைநிலைக்கும் விகுதிக்கும் இடையில் வரும் உறுப்பு ஆகும். சிறுபான்மையாகச் 'சந்தி'க்கும் விகுதிக்கும் இடையிலும் வரும்.

சாரியை = சார்ந்து இயைந்து நிற்பது. தனக்கெனப் பொருள் எதுவும் இன்றிப் பிற உறுப்புகள் இணையும்போது இடையில் வருவது.

வந்தனன் என்னும் சொல் 'வா(வ) + த்(ந்) + த் + அன் + அன்' வா – பகுதி த் – சந்தி 'ந்' ஆனது விகாரம் த் – இடைநிலை அன் – சாரியை அன் – விகுதி

'த்' இடைநிலைக்கும், 'அன்' விகுதிக்கும் இடையில் சாரியை வந்துள்ளதைக் காணலாம்

### 2.2.6 விகாரம்

விகாரம் என்பது தனி உறுப்பு இல்லை. பகுதி, விகுதி, முதலான உறுப்புகள் சேர்தலால் ஏற்படும் மாற்றத்தை விகாரம் என்கிறோம்.

**சான்று:**

கண்டான் = காண் (கண்) + ட் + ஆன்

காண் என்னும் பகுதி கண் என விகாரப்பட்டது. பகுதி தொழிலை உணர்த்தும் ஏவலாக இருக்கும். மூன்று காலங்களுக்கும் ஒன்றே ஆகையால் 'காண்' என்பதே பகுதியாக இருக்க வேண்டும்.

**சான்று:**

நடந்தான் = நட + த் (ந்) + த் + ஆன்

இதில் 'நட' என்னும் பகுதியை அடுத்துள்ள சந்தி 'த்' ஆகும் இச்சந்தியைத் திரிக்காமல் எடுத்துக் கொண்டால் 'நடத்தான்' என்று கூற வேண்டும். ஆனால் நடந்தான் என்பது சொல்லாகையால் 'த்' என்னும் சந்தி 'ந்' எனத் திரிந்து வந்துள்ளது.

**சான்று:**

வந்தான் = வா (வ) + த் (ந்) + த் + ஆன்

வா என்னும் பகுதி 'வ' என விகாரப்பட்டது. த் என்னும் சந்தி 'ந்' என விகாரப்பட்டது.

## 2.3 பகாப்பதம்

பகுக்கப்படாத இயல்பையுடைய சொற்கள் பகாப்பதம் ஆகும். எடுத்துக்காட்டாக மண், கண், நிலம், காற்று, நாய், வா.

### 2.3.1 பகாப்பதத்தின் வகைகள்

- **பெயர்ப் பகாப்பதம்**

பெயர்ச் சொற்களாக அமையும் பகாப்பதங்கள் பெயர்ப் பகாப்பதம் எனப்படும்.

எ.கா : நெருப்பு, காற்று, நிலம், நீர்.

- **வினைப் பகாப்பதம்**

வினைச் சொற்களாக அமையும் பகாப்பதங்கள் வினைப் பகாப்பதம் எனப்படும்.

எ.கா : உண், தின் , நட, வா.

- **இடைப் பகாப்பதம்**

இடைச் சொற்களாக அமையும் பகாப்பதங்கள் இடைப் பகாப்பதம் எனப்படும்.

எ.கா : மன், கொல், போல், மற்று.

- **உரிப் பகாப்பதம்**

உரிச் சொற்களாக அமையும் பகாப்பதங்கள் உரிப் பகாப்பதம் எனப்படும்.

எ.கா : கூர், மிகு, உறு, தவ, நனி, கழி

மேலே சுட்டிய எடுத்துக்காட்டுகளில் கண்ட பெயர், வினை, இடை, உரிச் சொற்களைப் பிரித்தால் பொருள் தருவதில்லை; அவை இடுகுறியில், இட்டு வழங்கி வருகின்ற தன்மையில் அமைந்தவை.

**சிந்தனை வினா : கடல் இச்சொல் பகுபதமா? பகாப்பதமா? கண்டறிக.**

## 2.4 மூவகை மொழி

சொற்பொருள் அடிப்படையில் மொழி மூவகைப்படும். அவை,

1) தனிமொழி

2) தொடர்மொழி

3) பொதுமொழி

என்பவை ஆகும்.

### 2.4.1 தனிமொழி

ஒரு சொல் தனித்து வந்து ஒரு பொருளைத் தந்தால் அது **தனிமொழி** எனப்படும்.

**(எ.கா)** செல், போ, கண், மரம்

இங்கே, எடுத்துக்காட்டில் குறிப்பிடப்பட்டுள்ள தனிச்சொல் ஒவ்வொன்றும் தனக்கான ஒரே ஒரு பொருளில் மட்டும் வந்துள்ளது.

### 2.4.2 தொடர்மொழி

தனிமொழிகள் பல தொடர்ந்து வந்து பொருளைத் தந்தால் அது **தொடர்மொழி** எனப்படும்.

**(எ.கா)** அறம் செய், அறநூல் படி, இன்சொல் கூறு, பண்பு காட்டு

இங்கே தனிச்சொற்கள் பல சேர்ந்து **தொடராக** வந்து பொருளைத் தந்துள்ளன.

### 2.4.3 பொதுமொழி

ஒரு சொல்லே தனிமொழியாக நின்று ஒரு பொருளையும், தொடர்மொழியாகப் பிரிந்துநின்று வேறு பொருளையும் தந்தால் அது பொதுமொழி எனப்படும். அதாவது, தனிமொழிக்கும் தொடர்மொழிக்கும் பொதுவாக வரும் சொல்லே பொதுமொழி.

(எ.கா) அந்தமான், பலகை

அந்தமான் என்னும் ஒரு சொல், தனிமொழியாக நின்று அந்தமான் என்னும் தீவைக் குறிக்கும். அந்தமான் என்னும் சொல்லை அந்த + மான் என்று பிரித்தால் அந்த மான் என்னும் தொடர்மொழியாக நின்று ஒரு விலங்கைக் குறிக்கும்.

பலகை என்னும் ஒரு சொல், தனிமொழியாக நின்று பலகை (மரப்பலகை) என்னும் பொருளைத் தரும். பலகை என்னும் ஒரு சொல்லையே பல+கை என்றும் பிரிக்கலாம். இவ்வாறு பிரித்தால் பல கைகள் என்னும் தொடர்மொழியாகப் பொருளைத் தருகிறது.

**சிந்தனை வினா : 'வைகை' –இச்சொல் தனிமொழியா? பொதுமொழியா? பொதுமொழியாயின் இருபொருள் தருக.**

## 2.5 சொல்லின் வகை

இலக்கிய வகைச் சொற்கள். இலக்கணவகைச் சொற்கள் எனச் சொற்கள் இருவகைப்படும்.

### 2.5.1 இலக்கியவகைச் சொற்கள்

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என இலக்கியவகைச் சொற்கள் நான்கு வகைப்படும்.

#### 2.5.1.1 இயற்சொல்

படித்தவர், படிக்காதவர் என்னும் பாகுபாடின்றி, அனைவராலும் எளிதாகப் புரிந்துகொள்ளக் கூடிய சொல் இயற்சொல். 'பூ', 'யானை', 'நாய்', 'மாடு' முதலான சொற்கள் எளிதில் புரிந்துகொள்ளக் கூடியவை. ஆதலால் இயற்சொற்களாயின. இயற்சொல் – இயல்பான சொல்.

பெயர் இயற்சொல், வினை இயற்சொல் என இயற்சொற்கள் இருவகைப்படும்.

எளிதில் பொருள் உணர்த்தும் பெயர்ச்சொற்கள் பெயர் இயற்சொல் எனப்படும்.

(எ.கா) சூரியன், நிலவு, காற்று, தீ.

இவை போன்ற இயற்சொற்கள் பெயர்ச்சொற்கள் ஆதலால், இவை பெயர் இயற்சொற்களாயின.

எளிதில் பொருள் உணருமாறு அமைந்துள்ள வினைச்சொற்கள் வினை இயற்சொல் எனப்படும்.

(எ.கா)

**படித்தான், வந்தார், பாடினாள், பறந்தது, மேய்ந்தன.**

இவை போன்ற இயற்சொற்கள் வினைச்சொற்கள் ஆதலால் இவை வினை இயற்சொற்களாயின.

### 2.5.1.2 திரிசொல்

கற்றவர்கள் மட்டும் புரிந்து கொள்ளக் கூடிய சொல் திரிசொல் எனப்படும். 'கடல்' என்பது அனைவருக்கும் விளங்கும் சொல் ஆகும். ஆனால், கடலைக் குறிக்கும் 'ஆழி' என்னும் சொல் படித்தவர்களுக்கு மட்டுமே தெரியும். மேலும், சில எடுத்துக்காட்டுகள்.

காற்று –வளி

நகம் –உகிர்

மயில்தோகை –பீலி

கிளி –தத்தை

நீர் –புனல்

உலகம் –ஞாலம்

உரைத்தான் –செப்பினான்

- **திரிசொல் இருவகைப்படும்**

1) பெயர்த்திரிசொல்

2) வினைத் திரிசொல்

1) **பெயர்த்திரிசொல்**

கற்றவர்க்கு மட்டுமே பொருள் விளங்குமாறு அமைந்த பெயர்ச்சொல் 'பெயர்த்திரிசொல்' ஆகும்.

(எ.கா)

எயில் – மதில்

நல்குரவு – வறுமை

கழை – மூங்கில்

கிழமை – உரிமை

மடி – சோம்பல்

**பெயர்த்திரிசொல் இருவகைப்படும்.**

**i. ஒரு பொருள் குறித்த பல பெயர்த்திரிசொல்**

**ii. பல பொருள் குறித்த ஒரு பெயர்த்திரிசொல்**

- **ஒரு பொருள் குறித்த பல பெயர்த்திரிசொல்**

வேழம், வாரணம், கழை ஆகிய சொற்கள் "யானை" என்னும் ஒரே பொருளை உணர்த்துகின்றன. இவ்வாறு கற்றவர்க்கு மட்டுமே பொருள் விளங்குமாறு அமைந்து ஒரே பொருளை உணர்த்தும் பல சொற்களை ஒரு பொருள் குறித்த பல பெயர்த்திரிசொல் என்று அழைக்கிறோம்.

- **பல பொருள் குறித்த ஒரு பெயர்த்திரிசொல்**

ஆவி இச்சொல் உயிர், பேய், மெல்லிய புகை ஆகிய பல பொருள்களை உணர்த்துகின்றன. அரிதில் பொருள் விளங்கும் இப்பெயர்ச்சொற்கள் பல பொருள்களைத் தருவதால் அவற்றைப் பல பொருள் குறித்த ஒரு பெயர்த்திரிசொல் என்று அழைக்கிறோம்.

2) **வினைத்திரிசொல்**

கற்றவருக்கு மட்டுமே பொருள் விளங்கும் வகையில் அமைந்த வினைச்சொல் **வினைத்திரிசொல்** எனப்படும்.

எ.கா: வினவினான், விளித்தான், நோக்கினான்.

**வினைத்திரிசொல் இரு வகைப்படும்.**

**i. ஒரு பொருள் குறித்த பல வினைத் திரிசொல்**
**ii. பல பொருள் குறித்த ஒரு வினைத் திரிசொல்**

**i. ஒரு பொருள் குறித்த பல வினைத் திரிசொல்**

செப்பினான், உரைத்தான், மொழிந்தான், இயம்பினான் இவை கற்றவர்க்கு மட்டுமே விளங்கும் வகையில் அமைந்த வினைச்சொற்களாகும். எனவே இவை வினைத் திரிசொல் என வழங்கப்படும். இச்சொற்கள் அனைத்தும் '**சொன்னான்**' என்னும், ஒரு பொருளையே குறிப்பதால் இவற்றை ஒரு பொருள் குறித்த பல வினைத் திரிசொல் என்பர்.

**ii. பல பொருள் குறித்த ஒரு வினைத் திரிசொல் :**

வீசு இந்த வினைச்சொல் எறி, சிதறடி, பரவச்செய், ஆட்டு என்னும் பல பொருள்களை உணர்த்துகின்றது. இது கற்றவர்கள் மட்டுமே அறியும் சொல்லாகும். இதனைப் பல பொருள் குறித்த ஒரு வினைத் திரிசொல் என்பர்.

### 2.5.1.3 திசைச்சொல்

வடமொழி அல்லாத பிறமொழிச்சொற்கள் அம்மொழிகளில் எந்தெந்தப் பொருளில் வழங்குகின்றனவோ அந்தந்தப் பொருளிலேயே தமிழிலும் வந்து வழங்குவதைத் திசைச் சொற்கள் என்கிறோம்.

'கேணி' (கிணறு), 'பெற்றம்' (பசு) இவை போன்ற சொற்கள் தமிழ்மொழியில் வழங்கும் சொற்கள். ஆனால், இவை தமிழ்ச் சொற்கள் அல்ல. இவ்வாறு, செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரண்டு கொடுந்தமிழ் நாடுகளிலும், தாம் குறித்த பொருளை விளக்கி நிற்கும் சொற்கள் திசைச்சொல் எனப்படும்

**திசைச்சொற்கள்**

| | | |
|---|---|---|
| 1. தென்பாண்டி நாடு | பெற்றம் (பசு); சொன்றி (சோறு) | |
| 2. குட்ட நாடு | தள்ளை | (தாய்) |
| 3. குட நாடு | அச்சன் | (தந்தை) |
| 4. கற்கா நாடு | கையர் | (வஞ்சர்) |
| 5. வேணாடு | கிழார் | (தோட்டம்) |
| 6. பூழி நாடு | பாழி | (சிறுகுளம்) ; |
| | ஞமலி | (நாய்) |
| 7. பன்றி நாடு | செய் | (வயல்) |
| 8. அருவா நாடு | கேணி | (சிறுகுளம்) |
| 9. அருவாவடதலைநாடு | எகின் | (புளி) |
| 10. சீதநாடு | எலுவன் | (தோழன்); |
| | இகுளை | (தோழி) |
| 11. மலாடு | இகுளை | (தோழி) |
| 12. புனல்நாடு | ஆய் | (தாய் ) |

### 2.5.1.4 வடசொல்

'கமலம்', 'பாவம்', 'புண்ணியம்', 'புஷ்பம்' முதலான சொற்கள் சமஸ்கிருத மொழியிலிருந்து தமிழ்மொழியில் வந்து வழங்குகின்றன. இவை போன்ற சொற்கள் வடசொற்கள் எனப்படும்.

**எ.கா:**

கமலம் – தாமரை
விஷம் (அ) விடம் – நஞ்சு
புஷ்பம் (அ) புட்பம் – மலர்
அர்ச்சனை – மலரிட்டு வழிபடுதல்
சுதந்திரம் – விடுதலை
விவாகம் – திருமணம்

**தற்சமம்**

வடமொழிச் சொற்கள், தமிழ் மொழியில், தமிழ்ச்சொற்கள் போலவே வந்து வழங்குவது தற்சமம்.

**எ.கா:** புண்ணியம் – பாவம் – கமலம் – உருவம் போன்றவை.

**தற்பவம்**

வடமொழிக்கே உரிய சிறப்பு எழுத்துகளாகிய **ஜ, ஷ, ஸ, ஹ, க்ஷ** ஆகிய ஐந்தும் தமிழ்மொழியில் வந்து வழங்கும்போது, தமிழ்மொழி இயல்புக்கு ஏற்ப தமிழ் எழுத்துகளாய் ஒலி மாற்றம் பெறுகின்றன. இவ்வாறு வடமொழிச் சொற்கள் தமிழ் ஒலிக்கு ஏற்ப மாறித் திரிவது தற்பவம் எனப்படும்.

**எ. கா :**

| | | |
|---|---|---|
| கஜம் | – | கசம் |
| ஸரஸ்வதி | – | சரசுவதி |
| வருஷம் | – | வருடம் |
| தேஹம் | – | தேகம் |
| பக்ஷி | – | பட்சி |

### 2.5.2 இலக்கண வகைச் சொற்கள்

இலக்கண வகைச் சொற்கள் நான்கு வகைப்படும். அவை பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பனவாகும். இவற்றை இலக்கண நூல்கள் தெளிவாக விளக்குகின்றன.

#### 2.5.2.1 பெயர்ச்சொல்

ஒன்றன் பெயரைக் குறிப்பிட்டுச் சொல்வது பெயர்ச்சொல் ஆகும். அம்பு, கண்ணாடி, தாமரை முதலியன பெயர்ச்சொற்கள் ஆகும். பெயர்ச்சொற்களுக்கு இருவகையாக இலக்கணம் சொல்லப்படுகிறது.

- பெயர்ச்சொல் வேற்றுமையை ஏற்கும்.
- பெயர்ச்சொல் காலம் காட்டாது.

முருகன் என்பது ஒரு பெயர்ச்சொல். இதனுடன் வேற்றுமை உருபுகள் சேர்ந்து பின்வருமாறு அமையும்.

முருகன் + ஐ = முருகனை – (இரண்டாம் வேற்றுமை)

முருகன் + ஒடு = முருகனொடு – (மூன்றாம் வேற்றுமை)

முருகன் + கு = முருகனுக்கு – (நான்காம் வேற்றுமை)

முருகன், கல், மரம், முதலிய பெயர்ச்சொற்கள் காலத்தைக் காட்டவில்லை.

பொருள் விளங்கச் சொல்வது பெயர்ச்சொல்.

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் என்னும் ஆறின் அடிப்படையில் பெயர்ச்சொற்கள் தோன்றும்.

1. பொருட்பெயர்
2. இடப்பெயர்
3. காலப்பெயர்
4. சினைப்பெயர்
5. பண்புப்பெயர்
6. தொழிற்பெயர்

**எ.கா:**

1. பொருட்பெயர் : பசு, புத்தகம், இறைவன், மனிதன்.
2. இடப்பெயர் : தஞ்சாவூர், தமிழகம், வானம், நிலம்.
3. காலப்பெயர் : மணி, ஆண்டு, நாள், மாதம், நாழிகை.
4. சினைப்பெயர் : கண், காது, கை, தலை, கிளை, பூ.
5. பண்புப்பெயர் : இனிமை, நீலம், சதுரம், வட்டம், ஏழு.
6. தொழிற்பெயர் : படித்தல், உண்ணுதல், உறங்குதல், நடை, ஆடல்.

இளங்கோவடிகள் சிறந்த புலவர்.

யானை காட்டில் வாழ்கிறது.

வீட்டுக்கு ஒரு மரம் வளர்ப்போம்.

இத்தொடர்களிலுள்ள, இளங்கோவடிகள், யானை, மரம் ஆகிய சொற்கள் பெயர்களைக் குறிக்கின்றன. இவ்வாறு பெயரைக் குறிக்கும் சொல் பெயர்ச்சொல் – Noun எனப்படும். இத்தகைய பெயர்ச்சொற்களைப் பொதுநிலையில் இடுகுறிப் பெயர், காரணப்பெயர் எனப் பிரித்து வகைப்படுத்துவர்.

**இடுகுறிப் பெயர்**

'கல்', 'மண்' ஆகிய சொற்கள் எவற்றை உணர்த்துகின்றன என்பது நமக்குத் தெரியும். ஆனால், அப்பெயர்கள் ஏற்படக் காரணம் என்ன என்பது தெரியாது. காரணம் எதுவும் இல்லாமல் நம் முன்னோர் வழங்கியவாறே நாமும் வழங்கி வருகிறோம். இவ்வாறு, காரணம் கருதாமல், இப்பொருளுக்கு இந்தப் பெயர், எனத் தொன்றுதொட்டு இட்டு வழங்கி வரும் பெயர் 'இடுகுறிப்பெயர்' எனப்படும்.

**காரணப் பெயர்**

'நாற்காலி', 'முக்கண்ணன்', 'முக்கோணம்' இவை எவற்றை உணர்த்துகின்றன என்பதும், என்ன காரணத்தால் அப்பெயர் பெற்றன என்பதும் நமக்குத் தெரியும்.

நான்கு கால் உடைய காரணத்தால், நாற்காலி என்ற பெயரைப் பெற்றது; மூன்று கண் உடையவனாதலால் முக்கண்ணன் எனப்பட்டான். மூன்று கோணங்களை உடையதால் முக்கோணம் ஆயிற்று. இவையெல்லாம் காரணம் கருதி இடப்பட்ட பெயர்கள் என்பதை அறியலாம். இவ்வாறு, காரணங்கருதி இட்டு வழங்கும் பெயர் காரணப்பெயர் எனப்படும்.

மேற்கண்ட பெயர் வகைகளோடு ஆகுபெயர், ஆக்கப்பெயர், பண்புப்பெயர், வினையாலணையும் பெயர், தொழிற்பெயர் ஆகியவற்றையும் அறிந்துகொள்வோம்.

**ஆகுபெயர்**

ஆகுபெயர் எனப்படுவது, ஒரு சொல் அதன் பொருளைக் குறிக்காமல் அச்சொல்லோடு தொடர்புடைய வேறு ஒரு பொருளைக் குறிக்கும். எனவே, ஒன்றினது இயற்பெயர் அதனோடு தொடர்புடைய வேறொன்றிற்கு ஆகி வருவதே ஆகுபெயராகும்.

**குறிப்பு – ஆகுபெயர் அனைத்தும் பெயர்ச்சொற்களே. ஆனால், எல்லாப் பெயர்ச்சொற்களும் ஆகுபெயராகா.**

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகியவற்றுடன் சொல், தானி, கருவி, காரியம் வினைமுதல் என்னும் இவை முதலாக வரும் பெயர்களுள் ஒரு பொருளினது இயற்பெயரால் அதனோடு தொடர்புடைய பிறபொருளைத் தொன்றுதொட்டுக் கூறி வருபவை ஆகுபெயராகும்.

- நெல் அறுத்தான் – உண்மையில் அறுக்கப்பட்டது கதிர். நெல் என்பது இங்கு ஆகுபெயரானது.
- உலகம் சிரித்தது.
- என் பள்ளி வென்றது.

- இவற்றில் உலகம், பள்ளி என்னும் இடப்பெயர்கள் இடத்தை உணர்த்தாமல் முறையே உலகிலுள்ள மக்களையும் பள்ளியிலுள்ள மாணவர்களையும் உணர்த்துகின்றன. எனவே இவை ஆகுபெயர் எனப்பட்டன.

வெற்றிலை நட்டான் – நடப்பட்டது வெற்றிலைக் கொடி. இங்கு வெற்றிலைக் கொடிக்காக வெற்றிலை ஆகுபெயரானது.

**ஆகுபெயர்கள் பதினாறு – வகை**

1. பொருளாகு பெயர்
2. இடவாகு பெயர்
3. காலவாகு பெயர்
4. சினையாகு பெயர்
5. பண்பாகு பெயர்
6. தொழிலாகு பெயர்
7. எண்ணலளவையாகு பெயர்
8. எடுத்தலளவையாகு பெயர்
9. முகத்தலளவையாகு பெயர்
10. நீட்டலளவையாகு பெயர்
11. சொல்லாகு பெயர்
12. தானியாகுபெயர்
13. கருவியாகு பெயர்
14. காரியவாகு பெயர்
15. கருத்தாவாகு பெயர்
16. உவமையாகு பெயர்

**1. பொருளாகுபெயர்**

முதல் பொருளின் பெயர், அதனோடு தொடர்புடைய இன்னொரு (உறுப்பு) பொருளுக்கு ஆகி வருதல்.

**(எ.கா)** மல்லிகை சூடினாள்.

இங்கு மல்லிகை கொடியைக் (முல்லை) குறிக்காமல் 'சூடுதல்' என்னும் வினையால் பூவைக் (சினையை) குறித்தது.

**2. இடவாகு பெயர்**

இடத்தின் பெயர் இடத்தோடு தொடர்புடைய இன்னொன்றிற்காக ஆகி வருவது.

**(எ.கா)** உலகம் வியந்தது

இதில் உலகம் என்பது மண்ணுலகத்தைக் குறிக்காமல், அதில் வாழும் மக்களைக் குறித்தது (மக்களுக்கு ஆகி வந்தது). இது இடவாகு பெயர்.

**3. காலவாகு பெயர்**

காலப்பெயர் அதனுடன் தொடர்புடைய ஒன்றிற்குப் பெயராக ஆகிவருவது காலவாகு பெயராகும்.

**(எ.கா)**

கார் அறுத்தான் – இங்கு, 'கார்' என்ற மழைக்காலத்தின் பெயர், அக்காலத்தில் விளையும் நெல்லுக்கு ஆகிவருவதை உணர்த்துகிறது.

திசம்பர் சூடினாள்– திசம்பர் என்பது மாதத்தைக் குறிக்காமல் திசம்பர் மாதத்தில் பூக்கும் பூக்களைக் குறிக்கிறது.

**4. சினையாகு பெயர்**

ஒரு சினைப் பொருளின் பெயர் அதன் முதற்பொருளுக்கு ஆகி வருவது சினையாகு பெயர் எனப்படும்.

**(எ.கா)** தலைக்குப் பத்து ரூபாய் கொடு.

இதில் தலை என்னும் சினைப் பொருளின் பெயர், பத்து ரூபாய் கொடு என்னும் குறிப்பால் அந்தத் தலையை உடைய மனிதனுக்கு ஆகி வந்துள்ளது.

**5. பண்பாகு பெயர்**

ஒரு பண்பின் பெயர், அப்பண்பையுடைய பொருளுக்கு ஆகி வருவது பண்பாகு பெயர்.

**(எ.கா)** வீட்டிற்கு வெள்ளை அடித்தான்:

'வெள்ளை' என்னும் நிறத்தின் பெயர், அந்நிறத்தையுடைய சுண்ணாம்புக்கு ஆகி வந்தது. இங்கு 'வெள்ளை' என்பது ஆகுபெயர். இதனைப் பண்பாகுபெயர் என்பர்.

**6. தொழிலாகு பெயர்**

தொழிற்பெயர்கள் செயல் அல்லது தொழிலைக் குறிக்காமல் அதனுடன் தொடர்புடைய ஒன்றிற்குப் பெயராக ஆகிவருவது தொழிலாகு பெயராகும்.

**(எ.கா)** புழுங்கல் வெந்தது

இங்குப் 'புழுங்கல்' என்று புழுங்குதலாகிய தொழிலைக் குறிக்காமல் அரிசிச்சோறு என்னும் பெயரைக் குறித்ததால் தொழிலாகுபெயர்.

**7. எண்ணல் அளவையாகு பெயர்**

ஓர் எண்ணல் அளவையின் பெயர் அந்த எண்ணிக்கையில் உள்ள பொருளுக்கு ஆகி வருவது எண்ணல் அளவையாகு பெயர் எனப்படும்.

**(எ.கா)** ஒன்று பெற்றால் ஒளி மயம்.

இரண்டுக்கும் மேல் எப்போதும் வேண்டா

இவற்றில் ஒன்று, இரண்டு என்னும் எண்ணல் அளவைப் பெயர்கள் அந்த எண்ணுள்ள பொருளுக்கு (குழந்தைக்கு) ஆகி வந்திருப்பதால் எண்ணல் அளவையாகு பெயர் எனப்பட்டன.

**8. எடுத்தல் அளவையாகு பெயர்**

ஓர் எடுத்தல் அளவையின் பெயர் அந்த அளவுள்ள பொருளுக்கு ஆகி வருவது எடுத்தல் அளவையாகு பெயர் எனப்படும். கிலோ, கால் கிலோ, அரைக் கிலோ என்று சொல்வது.

**(எ.கா)** மூன்று கிலோ வாங்கி வா.

இவற்றில் கிலோ என்னும் எடுத்தல் அளவைப் பெயர் அந்த அளவுள்ள பொருளுக்கு ஆகி வந்துள்ளது.

**9. முகத்தல் அளவையாகு பெயர்**

திரவப் பொருளை முகந்து அளப்பது முகத்தல் அளவை ஆகும். ஒரு முகத்தல் அளவையின் பெயர் அந்த அளவுள்ள பொருளுக்கு ஆகி வருவது முகத்தல் அளவையாகு பெயர் எனப்படும்.

**(எ.கா)** ஐந்து லிட்டர் வாங்கி வா.

நான்குபடி கறக்கும்

இவற்றில் லிட்டர், படி என்னும் முகத்தல் அளவைப் பெயர்கள் அந்த அளவுள்ள பொருளுக்கு ஆகி வந்துள்ளன.

**10. நீட்டல் அளவையாகு பெயர்**

நீட்டி அளப்பது நீட்டல் அளவை ஆகும். ஒரு நீட்டல் அளவையின் பெயர் அந்த அளவுள்ள பொருளுக்கு ஆகி வருவது நீட்டல் அளவையாகு பெயர் எனப்படும்.

**(எ.கா)** இரண்டு மீட்டர் கொடுங்கள்.

ஐந்து முழம் வாங்கி வந்தான்.

இவற்றில் மீட்டர், முழம் என்னும் அளவையின் பெயர்கள் அந்த அளவுள்ள பொருளுக்கு ஆகி வந்துள்ளன.

**11. சொல்லாகு பெயர்**

ஏதோ ஒன்றுக்காகச் சொல் கருவி ஆகி வருவது. சொல் என்னும் சொல் சொன்னவற்றிற்கும் பிறவற்றிற்கும் ஆகுபெயராக வருவதால் அது சொல்லாகு பெயர் ஆகும்.

**(எ.கா)** இந்தப் பாட்டு என் சிந்தனையைத் தூண்டியது.

இங்கே பாட்டின் பொருள்தான் சிந்தனையைத் தூண்டியது. பொருளுக்காகப் பாட்டு என்ற சொல் கருவி ஆகி வந்தது.

**மேலும் –** சொல் தவறாதே

சொல்லுக்குக் கட்டுப்படு

**12. தானியாகு பெயர்**

பாலை இறக்கு.

இதில் பாலின் பெயர், பாலைக் குறிக்காமல் பாத்திரத்தைக் குறிக்கிறது. ஓர் இடத்தில் உள்ள ஒரு பொருளின் பெயர் (தானி), அது சார்ந்திருக்கும் இடத்திற்குப் (தானத்திற்கு) பெயராகி வருவது தானியாகு பெயர் ஆகும்.

**13. கருவியாகு பெயர்**

ஒரு கருவியின் பெயர் அக்கருவியால் ஆகும் பொருளுக்கு ஆகி வருவது கருவியாகு பெயர் எனப்படும்.

**(எ.கா)** நான் குறள் படித்தேன்.

யாழ் இனிது குழல் இனிது

புல்லாங்குழல் கேட்டு மகிழ்ந்தாள்

இவற்றில் குறள் என்பது குறள் வெண்பாவைக் குறிக்கும் சொல். ஆனால் இங்கே குறள் வெண்பாவால் ஆக்கப்பட்ட பாக்களைக் குறிக்கிறது.

யாழும் குழலும் புல்லாங்குழலும் கருவிப்பெயர்கள். அந்தக் கருவியில் தோன்றும் இசைக்குப் பெயராக வந்துள்ளன.

**14. காரியவாகு பெயர்**

ஒரு காரியத்தின் பெயர் அதன் காரணத்திற்கு (கருவிக்கு) ஆகி வந்தால் காரியவாகு பெயர் எனப்படும்.

**(எ.கா)** நான் அலங்காரம் கற்றேன்.

பல நாள்கள் தேடி இன்றுதான் அகத்தியம் வாங்கினேன்.

இவற்றில் அலங்காரம் என்னும் சொல் அலங்காரத்தைக் (அணியை) கற்பிக்கும் நூலுக்கு ஆகி வந்துள்ளது. அதைப்போன்று அகத்தியம் என்னும் சொல் அகத்தியம் என்ற நூலிற்கு ஆகிவந்துள்ளது.

**15. கருத்தாவாகு பெயர்**

ஒருவர் செய்த பொருளின் பெயர், செய்தவரின் பெயருக்கே ஆகிவருவது.

**(எ.கா)** வைரமுத்துவைப் படி.

இங்கு, வைரமுத்து எழுதிய கவிதைக்காக வைரமுத்து என்கின்ற கருத்தா ஆகி வருகிறது.

**16. உவமையாகு பெயர்**

ஓர் உவமைப் பெயர், அதனால் உவமிக்கப்படுகின்ற பொருளுக்கு ஆகிவருவது, உவமையாகுபெயர்.

**(எ.கா)** மயில் ஆடினாள்

மயில் ஆடினாள் – இதில் மயில் என்னும் உவமை மயில்போன்ற ஒரு பெண்ணுக்கு ஆகிவந்ததால் இது உவமையாகு பெயர்.

**ஆக்கப்பெயர்**

ஒரு சொல்லிலிருந்து உருவாக்கப்படும் பெயரை ஆக்கப்பெயர் என்கிறோம். இக்காலத்தில், ஆக்கப்பெயர் உருவாக்கம் இன்றியமையாததாக உள்ளது. சமூகப் பயன்பாட்டில் மொழியின் தேவை மிகும்போதெல்லாம், அங்கே ஆக்கப்பெயர்களின் தேவையும் மிகுதியாகிறது. 'தொழில்' என்னும் பெயர்ச்சொல்லுடன் 'ஆளி' என்னும் விகுதி சேர்ந்து, தொழிலாளி என மாறுகிறது. இதேபோன்று தேவைகளின் அடிப்படையில் காலந்தோறும் ஆக்கப்பெயர்கள் உருவாக்கப்பட்டு வருகின்றன. ஆக்கப்பெயரைப் பெயரடி ஆக்கப்பெயர், வினையடி ஆக்கப்பெயர் என இருவகையாகக் காணலாம்.

**பெயரடி ஆக்கப்பெயர்**

பெயர்ச்சொல்லுடன் பெயராக்க விகுதிகள் சேர்ந்து, பெயரடி ஆக்கப்பெயர் உருவாகிறது. பின்வரும் எடுத்துக்காட்டுகள் வாயிலாக இவற்றை அறிந்துகொள்ளலாம்.

**ஆளி**

படைப்பாளி, உழைப்பாளி, முதலாளி, கொடையாளி, செலவாளி, அறிவாளி

**ஆளன்**

எழுத்தாளன், பண்பாளன், நெசவாளன், ஆய்வாளன்

**ஆளர்**

சொல்லாளர், வில்லாளர், கல்வியாளர், காசாளர், பகுத்தறிவாளர்

**காரன்**

பால்காரன், வீட்டுக்காரன், வேலைக்காரன், பாட்டுக்காரன்

**காரி**

பூக்காரி, வீட்டுக்காரி, புரட்சிக்காரி

**சாலி**

திறமைசாலி, பலசாலி, புத்திசாலி

**வாதி**

சீர்திருத்தவாதி, புரட்சிவாதி

**தனம்**

குழந்தைத்தனம், ஈனத்தனம், சுட்டித்தனம்

**இயல்**

அறிவியல், தத்துவவியல், கல்வியியல், ஆய்வியல், தமிழியல்

**தாரர்**

விளம்பரதாரர், பங்குதாரர், விண்ணப்பதாரர்

**வினையடி ஆக்கப்பெயர்**

வினையடியுடன் விகுதிகளைச் சேர்ப்பதால், வினையடி ஆக்கப்பெயர் உருவாகும். இது, தொழிற்பெயராகும்.

**ஐ**

விடை, கொடை, தடை, எடை, படை, மடை, நடை

**மதி**

ஏற்றுமதி, இறக்குமதி, வெகுமதி

**சி**

பயிற்சி, முயற்சி, காட்சி, மீட்சி, ஆட்சி

**ச்சி**

உணர்ச்சி, தாழ்ச்சி, வீழ்ச்சி, தளர்ச்சி, எழுச்சி

**சல்**

உடைசல், விரிசல், கிழிசல்

**ச்சல்**

விளைச்சல், காய்ச்சல், பாய்ச்சல், துணிச்சல், எரிச்சல்

**ப்பு**

உழைப்பு, சிரிப்பு, காய்ப்பு, மலைப்பு, விடுப்பு, எடுப்பு, தொடுப்பு, அறிவிப்பு

**க்கை**

வாழ்க்கை, வழுக்கை, படுக்கை, அறிக்கை

**க்காடு**

விழுக்காடு, நோக்காடு, பூக்காடு

பெயரடி ஆக்கப்பெயர்களும் வினையடி ஆக்கப்பெயர்களும் வேற்றுமை உருபேற்றல் முதலான எல்லா இலக்கணங்களையும் பெற்று வரும்.

**பண்புப்பெயர்**

ஒரு பொருளில் காணப்படும் நிறம், பண்பு ஆகியவற்றைக் குறிப்பது, பண்புப்பெயர். பண்புப் பெயருக்கெனச் சில விகுதிகள் உள்ளன.

**மை**

வெண்மை, கருமை, செம்மை, மென்மை

**ஐ**

தொல்லை

**சி**

மாட்சி

**பு**

கறுப்பு

**உ**

மழவு

**கு**

நன்கு

**றி**

நன்றி

**று**

நன்று

**அம்**

நலம்

கருமை, செம்மை, இனிமை, நன்மை போன்ற சொற்களைப் பண்புப்பெயர்கள் என்றும் செங்கோட்டை, கருங்கடல், நற்பண்பாளர் போன்ற சொற்கள் பண்பைத் தம்முள் கொண்டுள்ளதால், பண்புகொள் பெயர்கள் என்றும் கூறப்படுகின்றன.

**வினையாலணையும் பெயர்**

செயலைக் குறிக்காமல், செயல் செய்தவரைக் குறித்து வருவது வினையாலணையும் பெயர். இது, வேற்றுமை உருபுகளை ஏற்று வரும். மேலும், எதிர்மறை வினையாலணையும் பெயர்களும் உள்ளன.

இளங்கோ வேகமாக ஓடினான்

இதில் இளங்கோ பெயர்ச்சொல். அவன் செய்த செயல், ஓடினான் என்பதாகும். இளங்கோ என்ற பெயர்ச்சொல்லிற்கு அவன் செய்த செயலாலேயே பெயர் சூட்டலாம்.

- இளங்கோ வேகமாக ஓடினான்.
- ஓடினவனுக்குப் பரிசு கிடைத்தது.

இப்போது இளங்கோ ஓடினவன் என்று பெயர் பெற்றுவிட்டான். அதாவது ஒரு பெயர்ச்சொல் அதன் வினையால் அணைந்துகொண்டு பெயர் பெற்றுவிட்டது. எனவே இது வினையாலணையும் பெயர் எனப்பட்டது.

**வினைச்சொல் – வினையாலணையும் பெயர்**

- எழுதினான் – எழுதியவன்
- படிக்கின்றான்– படிக்கின்றவன்
- வளர்த்தான் – வளர்த்தவன்
- சேர்ந்தார் – சேர்ந்தவரை

முருகன் எழுதினான், எழுதியவன் பரிசு பெற்றான் – இவற்றில் எழுதினான் என்பது வினைச்சொல். எழுதியவன் என்பது எழுவாயாக நின்று பெயர்ச்சொல்லின் தன்மையைப் பெற்றுள்ளது. எழுதுதல் என்னும் தொழிலையும் இறந்தகாலத்தையும் காட்டுவதால் வினைச்சொல்லின் தன்மையையும் பெற்றுள்ளது. இவ்வாறு வருவதும் வினையாலணையும் பெயர் ஆகும்.

**தொழிற்பெயர்**

எழுத்தாளரின் தொழில் எழுதுதல், தையல்காரரின் தொழில் தைத்தல் இத்தொடர்களில் எழுதுதல், தைத்தல் என்பன செயல்களைக் குறிப்பன. இவற்றைத் தொழிற்பெயர் என்பர். இவ்வாறு ஒரு பொருளின் செயலை அதாவது தொழிலைக் குறிப்பதாக அமைவது தொழிற்பெயர் எனப்படும். இவற்றில் எண், இடம், காலம், பால் ஆகியன வெளிப்படுவதில்லை. படர்க்கை இடத்தில் மட்டும் வரும்.

எ.கா. – பொறுத்தல், படித்தல், ஆடுதல், நடித்தல், எழுதுதல்

| **தொழிற்பெயர்** | **வினையாலணையும் பெயர்** |
|---|---|
| 1. தொழிலுக்குப் பெயராக வரும் | தொழிலைச் செய்த கருத்தாவிற்குப் பெயராக வரும் |
| 2. படர்க்கை இடத்தில் மட்டும் வரும் | மூவிடத்திலும் வரும் (தன்மை, முன்னிலை, படர்க்கை) |
| 3. காலம் காட்டாது | காலம் காட்டும் |

### 2.5.2.2 வினைச்சொல்

ஒரு செயலைக் குறிக்கும் சொல் **வினைச்சொல்** எனப்படும்.

வந்தான், போகிறான், உண்டார் முதலியன வினைச் சொற்கள் ஆகும். தொழிலின் காலம் காட்டும் சொல் வினைச்சொல் ஆகும்.

பாரதியார் பாஞ்சாலி சபதத்தை இயற்றினார்.
குமுதா பள்ளிக்கூடம் சென்றாள்.
விளக்கு எரிந்தது.

இத்தொடர்களில் உள்ள, இயற்றினார், சென்றாள், எரிந்தது என்பவை, பாரதியார், குமுதா, விளக்கு முதலான பெயர்களின் வினையை அல்லது செயலைக் குறிக்கின்றன.

இவ்வாறு, வினையைக் குறிக்கும் சொல் வினைச்சொல் – Verb எனப்படும்.

1. வினைச்சொல் வேற்றுமையை ஏற்காது.

2. வினைச்சொல் காலம் காட்டும்.

இது மூவகைப்படும்.

1. இறந்தகாலம் – படித்தான், நடித்தான், சென்றாள், உறங்கினார்.
2. நிகழ்காலம் – படிக்கின்றார், நடிக்கிறார், செல்கின்றாள், உறங்குகிறார்.
3. எதிர்காலம் – படிப்பான், நடிப்பான், செல்வாள், உறங்குவாள்.

முடிவு பெற்ற வினைச்சொல் முற்று எனப்படும். முடிவு பெறாத வினைச்சொல் எச்சம் எனப்படும்.

- **முற்று**

ஒரு தொழிலைக் குறித்து வந்து முற்றுப்பெற்ற சொல் வினைமுற்று எனப்படும். அது திணை, பால், எண், இடம், காலம் காட்டும். பயனிலையாக வரும். வேற்றுமை உருபு ஏற்காது.

எ.கா. அவள் பாடினாள், இதில் பாடினாள் என்பது இறந்தகாலம், திணை – உயர்திணை, பால் – பெண்பால், எண் – ஒருமை, இடம் – படர்க்கை.

தெரிநிலை வினைமுற்று, குறிப்பு வினைமுற்று, ஏவல் வினைமுற்று, வியங்கோள் வினைமுற்று என வினைமுற்று பலவகைப்படும்.

**1. தெரிநிலை வினைமுற்று**

செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் ஆகியவற்றை உணர்த்துவது தெரிநிலை வினைமுற்று ஆகும்

எ.கா: 1: செல்வி மாலை தொடுத்தாள்

1. செய்பவள் – செல்வி
2. கருவி – பூ, நார் முதலியன
3. நிலம் – வீடு அல்லது கடை
4. செயல் – தொடுத்தல் ( பூ கட்டுதல்)
5. காலம் – இறந்தகாலம்
6. செய்பொருள் – மாலை

இவ்வாறு ஒரு வினைமுற்று திணை, பால், காலம், முதலியவற்றோடு செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் ஆகிய ஆறனையும் வெளிப்படையாகத் தெரிவிப்பது தெரிநிலை வினைமுற்று ஆகும்.

எ.கா: 2: இனியன் உணவு சமைத்தான். இந்தத் தொடரில் சமைத்தான் – என்னும் சொல் தெரிநிலை வினைமுற்று ஆகும்.

செய்பவன் – இனியன்

கருவி – சமையல் பாத்திரங்கள்

நிலம் – வீடு (அல்லது) அடுப்பு

செயல் – சமைத்தல்

காலம் – இறந்தகாலம்

செய்பொருள் – உணவு

## 2. குறிப்பு வினைமுற்று

பொருள், இடம், காலம், சினை, குணம், தொழில் ஆகிய ஆறின் அடிப்படையில் தோன்றி செய்பவன், கருவி, நிலம், செயல், காலம், செய்பொருள் என்னும் ஆறினுள் செய்பவனை மட்டும் விளக்குவது குறிப்பு வினைமுற்று ஆகும்.

எ.கா :

1. அவன் பொன்னன் – பொருள்
2. அவன் சென்னையான் – இடம்
3. அவன் சித்திரையான் – காலம்
4. அவன் கண்ணன் – சினை
5. அவன் இனியன் – குணம்
6. அவன் நடிகன் – தொழில்

மேற்சொன்ன சான்றுகளில் செய்பவன் என்பதை மட்டும் வெளிப்படையாக உணர்த்தி, மற்றவற்றைக் குறிப்பாக உணர்த்தும் வினைமுற்று குறிப்பு வினைமுற்று ஆகும். இது அறுவகைப் பெயர்களின் அடிப்படையில் பிறக்கும். இதில் காலம் குறிப்பாக வரும்.

**(எ.கா)**

| | |
|---|---|
| பொருள் குறிப்பு வினைமுற்று | பொன்னன், மணியன் |
| இடக்குறிப்பு வினைமுற்று | ஊரன், தென்னாட்டான் |
| காலக்குறிப்பு வினைமுற்று | ஆதிரையான், காரான் |
| சினைக்குறிப்பு வினைமுற்று | கண்ணன், பல்லன் |
| பண்புக் (குணம்) குறிப்பு வினைமுற்று | கரியன், தீயன் |
| தொழில் குறிப்பு வினைமுற்று | நடிகன் |

| **தெரிநிலை வினைமுற்று** | **குறிப்பு வினைமுற்று** | **அறுவகைப் பெயர்** |
|---|---|---|
| செய்தான் மகன் | பெரியன் மகன் | பொருள் |
| குளிர்ந்தது நிலம் | வலியது நிலம் | இடம் |
| வந்தது கார் | நல்லது கார் | காலம் |
| குவிந்தது கை | சிறியது கை | சினை |
| ஒளிர்ந்தது வெண்மை | நல்லன் இவன் | குணம் |
| முடிந்தது உழவு | இன்சொல்லன் இவன் | தொழில் |

- **எச்சம்**

முற்றுப் பெறாமல் எஞ்சி நிற்கும் வினை, **எச்ச வினை** எனப்படும்.

தமிழன் **வந்து** போனான்.

மரத்திலிருந்து **உதிர்ந்த** பழம்.

இந்தத் தொடர்களில் உள்ள 'வந்து' என்ற வினையும் 'உதிர்ந்த' என்ற வினையும் முற்றுப் பெறாமல் உள்ளன. எனவே இவை எச்ச வினை எனப்படும். எச்ச வினை பெயரைக் கொண்டும் முடியும்; வினையைக் கொண்டும் முடியும்.

- **பெயரெச்சம்**

பெயரெச்சம் என்பது **முற்றுப்பெறாத வினைச் சொற்கள்** பெயரைக் கொண்டு முடிவுறும். பெயரெச்சம் தெரிநிலை பெயரெச்சம், குறிப்புப் பெயரெச்சம் என இருவகைப்படும்.

**தெரிநிலைப் பெயரெச்சம்**

செயலையும் காலத்தையும் உணர்த்திப் பெயரைச் சார்ந்து முடியும் எச்சம்.
எ.கா: ஆடிய ஆட்டம்

**குறிப்புப் பெயரெச்சம்**

செயலையும் காலத்தையும் உணர்த்தாமல் பண்பை மட்டும் உணர்த்தும் பெயரெச்சம்.

எ.கா: நல்ல குடும்பம்

- **வினையெச்சம்**

**வினையெச்சம் என்பது காலங்காட்டுகின்ற, முற்றுப்பெறா வினைச்சொற்கள் வினைமுற்றினைக் கொண்டு முடிவது ஆகும்.** வினையெச்சம் தெரிநிலை வினையெச்சம், குறிப்பு வினையெச்சம் என இருவகைப்படும்.

தெரிநிலை வினையெச்சம் – எழுதி முடித்தார். எழுதி என்னும் முற்றுப்பெறாத எச்சம் 'முடித்தார்' என்ற வினைச்சொல்லைக் கொண்டு முடிந்துள்ளது. இது காலத்தை வெளிப்படையாக உணர்த்தியதால் தெரிநிலை வினையெச்சம் ஆகும்.

குறிப்பு வினையெச்சம் – காலத்தை வெளிப்படையாக உணர்த்தாமல் குறிப்பாக உணர்த்தும் வினையெச்சம் குறிப்பு வினையெச்சம் ஆகும்.

எ. கா : மெல்லப் பேசினான்.

**தெரிந்து கொள்வோம்**

வினையெச்ச வாய்பாடுகள் 12 வகைப்படும்.

| | | |
|---|---|---|
| இறந்தகாலம் | – | செய்து, செய்பு, செய்யா, செய்யூ, செய்தென |
| நிகழ்காலம் | – | செய |
| எதிர்காலம் | – | செயின், செய்யிய, செய்யியர், வான், பான், பாக்கு |

### 2.5.2.3 இடைச்சொல்

இடை என்ற சொல்லுக்கு இடம் என்றும், இடையில் (நடுவில்) என்றும் பொருள்கள் உள்ளன. தனித்து இயங்காமல் பெயருடன் அல்லது வினையுடன் சேர்ந்து வரும் சொற்கள் **இடைச்சொற்கள்** எனப்படும். இடைச்சொற்கள் தனித்துப் பொருள் தருவதில்லை. இவை பெயருக்கும் வினைக்கும் அடுத்த நிலையில் பயன்பாடுடைய சொற்கள் ஆகும்.

அணிகலன் செய்ய பொன்னுக்கு இடையே இருந்து உதவும் இடைக்கருவிகள் போலப் பெயர்ச்சொல்லுக்கும் வினைச்சொல்லுக்கும் இடைநிற்பது இடைச்சொல்

அ + ஊர் = அவ் வூர்

அ என்ற சுட்டு இடைச்சொல் சொல்லின் முதலில் வந்தது.

1. அவன் + ஐ = அவனை
   ஐ உருபாகிய இடைச்சொல் சொல்லின் இறுதியில் வந்தது.

2. போ + வ் + ஆன் = போவான்
   வ் என்ற எதிர்கால இடைநிலை சொல்லின் இடையில் வந்தது.

கல்வியால் அறிவும் பண்பும் பெறுவோம். இச்சொற்றொடரில், 'அறிவும் பண்பும்' என்பனவற்றில் உள்ள 'உம்' (அறிவு+உம், பண்பு+உம்) 'பெறுவோம்' என்பதில் உள்ள 'ஓம்' (பெறு+ஓம்) இவை யாவும் பெயர்ச் சொல்லையும் வினைச் சொல்லையும் இடமாகக் கொண்டு வருகின்றன.

இவ்வாறு, பெயரையும் வினையையும் இடமாகக் கொண்டு வரும் சொல் இடைச்சொல் – Conjunctions or Particles எனப்படும். இடைச் சொற்கள் பல இருக்கின்றன. அவற்றுள் எட்டு வகையான இடைச்சொற்களைப் பார்ப்போம்.

**1. வேற்றுமை உருபுகள்**

**பெயர்ச்சொற்களில் இறுதியில் பொருள் வேறுபாட்டிற்காக வரும் வேற்றுமை உருபுகள் இடைச்சொற்கள் தன்மையை உடையன.** முதல் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் உருபுகள் இல்லை. இரண்டாம் வேற்றுமை முதல் ஏழாம் வேற்றுமை வரை உள்ள ஆறு வேற்றுமைக்கும் உருபுகள் உண்டு. அவை,

| | | |
|---|---|---|
| இரண்டாம் வேற்றுமை | – | ஐ |
| மூன்றாம் வேற்றுமை | – | ஆல் |
| நான்காம் வேற்றுமை | – | கு |
| ஐந்தாம் வேற்றுமை | – | இன் |
| ஆறாம் வேற்றுமை | – | அது |
| ஏழாம் வேற்றுமை | – | கண் |

**2. காலம் காட்டும் இடைநிலைகளும் விகுதிகளும்.**

வினைச் சொற்களில் வரும் காலம் காட்டுகின்ற இடைநிலைகளும் விகுதிகளும் இடைச் சொற்கள் ஆகும். கிறு, கின்று, ஆநின்று முதலியவை காலம் காட்டும் இடைநிலைகள். அன், ஆன் முதலியவை விகுதிகள்.

எ. கா – கொடுத்தான் – கொடு +த்+ஆன்

த் – இறந்தகாலம் காட்டியது. ஆன் – திணை, பால், எண், இடம் காட்டியது.

**3. உவம உருபுகள்**

இரு பொருள்களுக்கு இடையே ஒப்புமை காட்ட உதவுவன. போல, அன்ன, அனைய, ஒப்ப, புரைய என்பன உவம உருபுகள் ஆகும்.

உவமைத் தொடர்களில் உவம உருபுகள் வரும்.

எ. கா – மலர் **போல்** அழகிய முகம்.

இதில் போல் என்பது உவம உருபு.

**4. சாரியைகள்**

சந்தி இலக்கணத்தில் வரும் சாரியைகள் இடைச்சொற்களாகும்.

எ. கா – ஆல்+**அம்**+கட்டி = ஆலங்கட்டி

என்பதில் அம் சாரியை இடையில் வந்துள்ளது.

**5. தத்தம் பொருளை உணர்த்தி வருபவை**

ஏ, ஓ, உம் முதலிய இடைச்சொற்கள் தத்தம் பொருளை உணர்த்தி வருபவை.

எ. கா :

அவளே கொண்டாள் – ஏ

அவளோ கொண்டாள் – ஓ

அவளும் வந்தாள் – உம்

**6. இசைநிறை**

ஏ, ஒடு, ஓ, மார், ஆன முதலிய இடைச்சொற்கள் செய்யுளில் பொருள் இன்றி இசைநிறைவு செய்ய வருவன. இவை இசைநிறை சொற்கள் ஆகும்.

எ. கா :

ஏஏ இவள் ஓர் அழகியே – ஏ

இவனொடு – ஒடு

கொல்லோ – ஓ

செல்லுமார் – மார்

வயினான – ஆன

**7. அசைநிலை**

மன், மற்று, கொல் ஆகிய இடைச்சொற்கள் செய்யுளில் பொருள் இன்றி அசையாகவும் பயன்படுகின்றன.

எ. கா :

உடையேன்மன் – மன்

இதுவும்மற்று – மற்று

புலிகொல் யானை – கொல்

**8. குறிப்பால் பொருள் உணர்த்துபவை**

'கலகலவென', 'நிலமென' இவற்றில் வரும் 'என' என்பது குறிப்புப் பொருள் உணர்த்தும் இடைச்சொல் ஆகும். மேலே காட்டியவாறு இடைச்சொல் எட்டு வகையாக வரும்.

### 2.5.2.4 உரிச்சொல்

பல வகைப்பட்ட பண்புகளையும் உணர்த்தி வருவது உரிச்சொல் ஆகும். (பண்பு – குணம்) இது பெயர்ச்சொல்லையும் வினைச்சொல்லையும் சார்ந்து வரும். செய்யுளுக்கு உரியதாய் வரும். மருவி நிற்கும் சொல்லோடு மருவாத சொல்லை உரிமையோடு சேர்த்துச் சொல்வதை உரிச்சொல் என்பர்.

**எ.கா.**

கடிமனை.
நனி சிரித்தான்.

'மனை' என்னும் பெயர்ச்சொல்லையும் 'சிரித்தான்' என்னும் வினைச்சொல்லையும் சார்ந்து நின்று, முறையே, 'காவல் மிகுந்த மனை(வீடு)' (கடி–காவல்) 'மிகவும் மகிழ்ந்தான்' (நனி–மிகவும்) என அவற்றின் தன்மையை எடுத்துரைக்கின்றன. மேலும், செய்யுளுக்கே உரியதாகவும் விளங்குகின்றன. ஆதலால் இவை (கடி, நனி) உரிச்சொற்கள் எனப்படுகின்றன. (Attributive)

உரிச்சொல்லானது, ஒரே பொருள் தரும் பல உரிச்சொல் எனவும், பல பொருள் தரும் ஓர் உரிச்சொல் எனவும் இரு வகைப்படும்.

அ. ஒரே பொருள் தரும் பல உரிச்சொல்

சால, உறு, தவ, நனி, கூர், கழி இவை யாவும் 'மிகுதி' என்னும் ஒரே பொருள் தருவன.

எ. கா : சாலப் பேசினான். உறு புகழ். தவச் சிறந்தது. நனி தின்றான்.

ஆ. பல பொருள் தரும் ஓர் உரிச்சொல்

'கடி' என்னும் சொல்லானது காப்பு, கூர்மை, மணம், விளக்கம் அச்சம், சிறப்பு, விரைவு, மிகுதி, புதுமை, ஆர்த்தல், வரைவு, மன்றல், கரிப்பு ஆகிய பல பொருள்களைத் தரும்.

## 2.6 சொற்களஞ்சியம்

சொற்களஞ்சியம் என்பதைச் சொற்களின் தொகுப்பு எனக் கூறலாம். நாம் காலை முதல் இரவு வரை பல சொற்களைக் கேட்கிறோம். பலரிடம் பேசுகின்றோம். பல சொற்களைப் படிக்கின்றோம். எழுதவும் செய்கிறோம். அவற்றுள் பல சொற்கள் நமக்கு நன்கு தெரிந்தவையாகவும் சில சொற்கள் புதியவையாகவும் இருக்கலாம். நமக்குத் தெரிந்த சொற்களை மட்டுமே மீண்டும் மீண்டும் பயன்படுத்துவோமானால், அஃது பயன்படுத்தும் சொற்களஞ்சியத்திலுள்ள சொற்களாகவே இருக்கும். அவ்வாறின்றிப் புதிய சொற்களை நாம் அறிந்திருந்தாலும் அவற்றை அடிக்கடி பயன்படுத்தாமல் இருந்தால், அவை அறிந்த சொற்களஞ்சியத்திலுள்ள சொற்களாக மட்டுமே இருக்கும்.

**சிந்தனை வினா:**

**கவின்** – இச்சொல் அறிந்த சொற்களஞ்சியமா? பயன்படுத்தும் சொற்களஞ்சியமா?

**பேசினான், சொன்னான், கூறினான்** என்ற சொற்களை நாம் அடிக்கடி பயன்படுத்துகிறோம். ஆகையால், இத்தகைய சொற்கள் நம் பயன்பாட்டிலுள்ளதால், இவை பயன்படுத்தும் சொற்களஞ்சியம் ஆகும். **பகர்ந்தான், இயம்பினான், நவின்றான், மொழிந்தான்** இவை போன்ற சொற்களை நாம் நூலில் படித்திருக்கலாம் அல்லது ஏதேனும் சொற்பொழிவில் கேட்டிருக்கலாம். இவை நமக்குத் தெரிந்திருந்தாலும் நம்முடைய பேச்சில் அதிகமாகப் பயன்படுத்தமாட்டோம். ஆகையால், இவை அறிந்த சொற்களஞ்சியம் அளவிலேயே நின்றுவிடுகின்றன.

அறிந்த சொற்களஞ்சியத்திலுள்ள சொற்களை நாம் கட்டாயம் அறிந்துகொள்ள வேண்டுமா? இந்த வினாவுக்குக்கான விடை, 'ஆம்' என்பதே. மற்றவர் பேச்சில் வெளிப்படும் புதிய சொற்களை அறிந்துகொள்ளவும் பல நூல்களைப் படித்துப் பொருள் உணர்ந்துகொள்ளவும் நமக்கு அறிந்த சொற்களஞ்சியத்திலுள்ள சொற்கள் தேவை. அவற்றைப் பயன்படுத்தும்போதுதான் அவை பயன்படுத்தும் சொற்களஞ்சியம் ஆகும்.

நாம் படைப்பாற்றல் திறன் மிக்கவர்களாக இருந்தால், நம்முடைய எழுத்தில் பல சொற்களைப் பயன்படுத்துவோம் அல்லவா! உலகப் புகழ் நாடக ஆசிரியராக விளங்கிய ஷேக்ஸ்பியர், தாம் புனைந்த நாடக உரையாடல்களில் புதிய சொற்கள் பலவற்றைப் பயன்படுத்தியுள்ளார். அச்சொற்களின் தொகுப்பைக் கொண்டு ஓர் அகராதியே உருவாக்கலாம் என அறிஞர்கள் கூறியுள்ளனர். ஆகவே கதை, கவிதை, கட்டுரை, உரையாடல் எனப் பல இலக்கிய வடிவங்களை வெளியிட, சொற்களஞ்சியம் தேவை. இத்தகைய சொற்களஞ்சியத்தைப் பெருக்கும் வழிமுறைகள் என்னென்ன என்பதை இனிக் காணலாம்.

### சொற்களஞ்சியப் பெருக்கம்

சொற்களஞ்சியத்தைப் பெருக்குவதற்குப் பல்வேறு செயல்பாடுகள் உள்ளன. அவற்றுள் சிலவற்றை இங்கு அறிந்துகொள்வோம்.

### விளையாட்டு முறை

புதிய சொற்களை அறிமுகப்படுத்தும் வகையில், விளையாட்டு முறையின் மூலம் சொற்களஞ்சியத்தைப் பெருக்கலாம்.

### படங்கள் அல்லது பொருள்கள்

நம்மைச் சுற்றிக் காணப்படும் உண்மைப்பொருள்கள் அல்லது அவற்றின் படங்கள் வாயிலாகச் சொற்களஞ்சியத்தை உருவாக்கலாம். எடுத்துக்காட்டாகத் தாவரங்கள், விலங்குகள், பறவைகள் போன்றவற்றைக் கூறலாம்.

**நூல்களிலிருந்து புதிய சொற்கள்**

நாம் படிக்கும் பாடல், உரைப்பகுதி, கதை, கட்டுரை முதலியவற்றில் இடம்பெற்றுள்ள புதிய சொற்களை அறிந்துகொள்வதோடு, அவற்றைப் பயன்பாட்டு நிலையில் இருக்குமாறும் பார்த்துக்கொள்ளல் வேண்டும்.

**மயங்கொலிச் சொற்களின் பொருள் வேறுபாடு**

மயங்கொலி எழுத்துகளில் ஓர் எழுத்து வரவேண்டிய இடத்தில் வேறோர் எழுத்து வந்துவிட்டால், பொருள் மாறிவிடும். இதனைப் புரிந்துகொண்டு பல சொற்களின் சரியான பொருளை அறிந்துகொள்ள முடியும்.

**ஒரே பொருள் தரும் பல சொல்**

அழகு என்னும் பொருளைத் தரும் கவின், பொலிவு, வனப்பு முதலிய சொற்களை அறிந்து கொள்ளலாம். நிலவு என்பதைக் குறிக்க மதி, திங்கள், சந்திரன், அம்புலி, நிலா முதலிய சொற்களை அறிந்துகொள்வதால், தாம் உருவாக்கும் படைப்புகளில் அவற்றைப் பயன்படுத்தலாம்.

**சிந்தனை வினா**

முந்நீர், ஆழி, பரவை, தடாகம், குளம், கேணி, கிணறு, ஊருணி சுனை, பொய்கை முதலிய சொற்கள் எல்லாம் நீர்நிலை என்னும் ஒரே பொருளைக் குறிக்கின்றன. இப்பட்டியலில் 'ஆறு' சேருமா? சேராது எனில், காரணம் கூறுக.

**பல பொருள் தரும் ஒரு சொல்**

மா என்ற சொல்லுக்கு மாமரம், மாம்பழம், மாவு, குதிரை, பெருமை எனப் பல பொருள் உண்டு. ஒளி என்று சொல்லுக்கு விளக்கு, புகழ், பெருமை, அழகு, சூரியன், சந்திரன், விண்மீன் எனப் பல பொருள் உண்டு. இத்தகைய சொற்களை அறிந்துகொள்வதால், சொற்களஞ்சியத்தைப் பெருக்கிக் கொள்வதோடு, இடம் நோக்கிப் பொருத்தமுறப் பேசவும் எழுதவும் செய்யலாம். இதனால், பிழையான சொற்களும் பொருள் மாறுபாடான சொற்களும் தவிர்க்கப்படும்.

**தொகைச்சொற்கள்**

தொகுத்துச் சொல்லும் சொற்கள் தொகைச்சொற்கள். தொகைச் சொற்களைப் பிரித்தும் விரித்தும் கூறுவதால், சொற்களஞ்சியம் பெருகும். இருவினை என்னும் தொகைச்சொல்லைப் பிரித்தால் இரண்டு வினை எனவும் அவற்றை விரித்தால், நல்வினை/ தீவினை எனவும் கூறலாம். மேலும், இலக்கண அடிப்படையில் செய்வினை/ செயப்பாட்டு வினை, தன்வினை/ பிறவினை எனவும் விரித்துக் கூறலாம்.

முத்தமிழ், நானிலம், ஐந்திலக்கணம், அறுசுவை, ஏழிசை, நவதானியங்கள், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினாறு பேறு என இவை போன்ற தொகைச் சொற்களைப் பிரித்தும் விரித்தும் காணும்போது, பல்வேறு புதிய சொற்களை அறிந்துகொள்ளலாம்.

**சொல்லிலிருந்து சொல்**

ஒரு சொல்லுக்குள் உள்ள எழுத்துகளை இடம் மாற்றி, வேறு பல புதிய சொற்களைக் கண்டறியலாம். இதன் வாயிலாகப் புதிய சொற்களை அறிந்துகொள்ளவும் அவற்றை அன்றாட வாழ்வில் பயன்படுத்தவும் இயலும். எடுத்துக்காட்டாக, 'கவிதை' என்னும் சொல்லிலிருந்து கவி, கதை, விதை, தை முதலான சொற்களை அறிந்துகொள்ளலாம். இந்தப் பயிற்சியை மேற்கொள்வதால், எழுத்துப்பிழை, பொருளற்ற சொற்கள் தவிர்க்கப்படுகின்றன.

**முதல், இடை, கடை எழுத்து மாற்றம்**

ஆடல் – இந்தச் சொல்லின் முதலெழுத்தை மாற்றி மூடல், பாடல், ஓடல், தேடல், கூடல், வாடல் எனப் பல சொற்களை உருவாக்கலாம்.

பாடம் – இந்தச் சொல்லின் இடையெழுத்தை மாற்றிப் பாலம், பாதம், பாகம், பாரம், பாவம், பாசம், பாளம், பானம் முதலிய சொற்களை அமைக்கலாம்.

பதவி – இச்சொல்லின் இறுதியெழுத்தை மாற்றிப் பதர், பதம், பதறு, பதடி முதலிய சொற்களை அமைக்கலாம். இதனால், சொற்களஞ்சியம் பெருகும்.

**வேர்ச்சொல்லிலிருந்து புதிய சொற்கள்**

கால் என்னும் சொல்லிலிருந்து காற்றாடி, காற்று, காற்றாலை உருவாகின்றன.

சூர் என்னும் சொல்லிலிருந்து சூரியன், சூரன் உருவாகின்றன.

இதேபோன்று, ஒரு வினையடியிலிருந்து அதன் மற்ற வடிவங்களையும் உருவாக்கலாம்.

எடுத்துக்காட்டாக, கல் என்னும் வினையடியிலிருந்து கற்றான் – கற்க– கற்ற பெண் – கற்று மகிழ் – கற்றவனை – கற்பாய் – கற்றுக் கொண்டான் என உருவாக்கலாம்.

**மரபுச்சொற்கள்**

தமிழில் தொன்றுதொட்டுச் சில மரபுச்சொற்கள் பயன்பாட்டில் உள்ளன. அவற்றை உரிய இடத்தில் பயன்படுத்தும்போது பிழை நேராமல் காக்கலாம்.

எடுத்துக்காட்டாக, மயில் அகவும், குயில் கூவும், ஆந்தை அலறும், கோழி கொக்கரிக்கும் போன்ற ஒலி மரபுகள் ஒவ்வொரு பறவைக்கும் உரித்தாகின்றன.

மேலும் கழுதை கத்தும், குதிரை கனைக்கும், சிங்கம் முழங்கும், நரி ஊளையிடும், நாய் குரைக்கும், புலி உறுமும், யானை பிளிறும் போன்ற விலங்குகளின் ஒலிமரபையும் அறிந்துகொள்ளலாம்.

ஒலிமரபு மட்டுமின்றிப் பனையோலை, மாவிலை போன்ற தாவர உறுப்புப் பெயர் மரபுகளையும் மான் கன்று, நாய்க்குட்டி, அணிற்பிள்ளை, கிளிக்குஞ்சு போன்ற இளமைப் பெயர் மரபுகளையும் அறிந்துகொண்டு முறையாகப் பயன்படுத்தலாம்.

பெயர் மரபு, ஒலி மரபு ஆகியவற்றுடன் வினைமரபும் இக்காலத்தில் பயன்பாட்டிலுள்ளது.

நீர் குடித்தான், பால் அருந்தினான், உணவு உண்டான் என்பன போன்றும் காற்று வீசியது, மேகம் திரண்டது, மின்னல் மின்னியது, இடி இடித்தது, மழை பெய்தது, பனி கொட்டியது என்பன போன்றும் ஒவ்வொரு செயலைக் குறிக்க ஒரு மரபுச் சொல் வழங்கிவருவதையும் அறிந்துகொண்டு, சரியாகப் பயன்படுத்தலாம்.

**இணைமொழிகள்**

நம்முடைய பேச்சிலும் எழுத்திலும் இணைமொழிகளின் பயன்பாடு மிகுதியாகவே உள்ளது. அவற்றையெல்லாம் தொகுத்து வைத்தால், பொருத்தமாகப் பயன்படுத்த அறியலாம். இணைமொழிகளைப் பொருள் அடிப்படையில் நேரிணை, எதிரிணை, செறியிணை என மூன்றாக வகைப்படுத்துவர்.

ஒரே பொருள் தரும் இருசொல் அடுத்தடுத்து வருவது நேரிணை.

(எ.கா.) பேரறிஞர் அண்ணா **பேரும்புகழும்** பெற்று விளங்கினார்.

எதிர்மறைப்பொருள் தரும் இருசொல் அடுத்தடுத்து வருவது எதிரிணை.

(எ.கா.) கபிலன் **இரவுபகல்** பாராது அயராது உழைத்தான்.

ஒரு பொருளின் செறிவை (அடர்த்தியை) வெளிப்படுத்துமாறு ஒரே சொல் அடுத்தடுத்து வருவது, செறியிணை.

(எ.கா.) புல்தரை **பச்சைப்பசேலெனக்** காட்சியளித்தது.

**துறைதோறும் வழங்கும் சொற்கள்**

ஒவ்வொரு துறையிலும் பல சொற்கள் வழக்கத்தில் உள்ளன. புதிய புதிய சொற்களும் ஆக்கம் பெறுகின்றன. அண்மைக்காலத்தில் வளர்ச்சி பெற்றுக் கோலோச்சுவது, கணினித் துறை. இத்துறை சார்ந்த சொற்கள் மொழியாக்கம் செய்யப்பட்டும் மொழிபெயர்ப்பு, ஒலிபெயர்ப்பு செய்யப்பட்டும் வழங்குகின்றன. சுட்டி, இணையம், உலவி, புலனம், கீசகம், விரலி, செயலி, மின்னஞ்சல் என்பன அவற்றுள் சிலவாகும். இதுபோன்று பல துறைகளிலும் வழங்கும் சொற்களை அறிந்துகொண்டால் அவற்றைப் பயன்படுத்துவதோடு, சொற்களஞ்சியத்தையும் பெருக்கிக் கொள்ளலாம்.

**மரபுத்தொடர், பழமொழி, உவமை பயன்பாடு**

நாம் எழுத விரும்பும் உரைப்பகுதிகள், கட்டுரைகள் முதலியவற்றில் மரபுத்தொடர், பழமொழி, உவமைத் தொடர்கள் ஆகியவற்றைப் பொருத்தமாகப் பயன்படுத்துவதால் சரியான கருத்து வெளிப்படும்.

முருகனின் குடும்பம், வாழையடிவாழையாக வேளாண்மைத் தொழில் செய்து வருகிறது. (மரபுத்தொடர்)

தாயைக் காணாத குழந்தையின் முகம் மழை காணாத பயிர்போல வாடியது. (உவமைத்தொடர்)

வேலையின்றிச் சோம்பித் திரிந்த கண்ணன் உணவின்றி வாடியதால், உழைப்பே உயர்வு என்பதை உணர்ந்துகொண்டான். (பழமொழி)

**தொடரை நீட்டித்து எழுதுதல்**

ஒரு தொடரில் புதிய சொற்களை இணைப்பதன் மூலம், தொடரை நீட்டிக்கலாம். இதனால், பல சொற்களின் பயன்பாட்டையும் அவற்றை எந்தெந்த இடங்களில் பயன்படுத்த வேண்டும் என்பதையும் அறிந்துகொள்ளலாம்.

(எ.கா.) நான் வரைந்தேன்

நான் படம் வரைந்தேன்

நான் மயில் படம் வரைந்தேன்

நான் அழகான மயில் படம் வரைந்தேன்

நான் நேற்று அழகான மயில் படம் வரைந்தேன்

நான் நேற்று மாலை அழகான மயில் படம் வரைந்தேன்

என இவ்வாறு தொடரை நீட்டித்து அமைப்பதால், சொற்களஞ்சியம் பெருகும்.

## 2.7 பொருண்மைச் சூழல்

நாம் பேசும்போது, பல சொற்களை அவற்றின் தன்மை உணர்ந்து பயன்படுத்துகிறோமா என்று உணர்வதில்லை. குறிப்பிட்ட ஒரு சொல், ஒவ்வொரு தொடரிலும் வெவ்வேறு பொருள் தருவதனை எப்போதாவது அறிந்திருக்கிறோமா? கீழ்க்காணும் எடுத்துக்காட்டுகளைக் கவனியுங்கள்.

| தொடர்கள் | உணர்த்தும் பொருள் |
|---|---|
| • '**கை** வலிக்கிறது' | – உடலின் ஓர் உறுப்பு |
| • '**கையூட்டு** கொடுப்பதும் வாங்குவதும் குற்றம்' | – உழைப்பின்றி வரும் பணம் |

- 'தன் **கை**யே தனக்கு உதவி' – உழைப்பின் மேன்மை
- '**கை**க்கு எட்டியது வாய்க்கு எட்டவில்லை' – அருகில் என்னும் பொருள்
- கள்வனைக் **கை**யும்களவுமாகப் பிடித்தனர் – ஒரு செயலை நேரடியாகப் பார்த்தல்
- முருகன், வள்ளியைக் **கை**பிடித்தான் – திருமணம் புரிதல்
- கண்ணனை ஒரு **கை** பார்த்துவிடவேண்டும் – சரியான பாடம் கற்பித்தல்
- ஆட்டத்தில் ஒரு **கை** குறைகிறது – ஓர் ஆள் (எண்ணிக்கை) தேவை

படித்தீர்களா? எத்தனை கைகள்? என்னென்ன பொருள்களைத் தருகின்றன? மேற்குறிப்பிட்ட ஒவ்வொரு தொடரிலும் 'கை' என்னும் சொல், ஒவ்வொரு பொருள் தருவதை உணர்ந்திருப்பீர்கள். இதே சொல்லைப் பயன்படுத்தி உங்களாலும் வேறு சில தொடர்களை உருவாக்கமுடியும் அல்லவா!

'கை' என்பதன் அகராதிப் பொருள், மனித உடலின் ஓர் உறுப்பு. 'கை' என்பது, அடிப்படையில் ஒரு பெயர்ச்சொல். இதே சொல், உணர்வுப் பொருளாகவும் பயன்பாட்டுப் பொருளாகவும் சூழலுக்கேற்பப் பொருள் மாறுகின்றது.

**சூழல் கோட்பாடு – ( Contextual Theory)**

ஒரு மொழியிலுள்ள சொற்கள், தொடர்கள் ஆகியன சமுதாயச் சூழல்களைத் தழுவியே பொருண்மைகளை உணர்த்துகின்றன. சூழல்கோட்பாடு என்பது, ஒலிச் சூழல், உருபன் இணைப்புச் சூழல், இலக்கணச் சூழல், சொல் இணைப்புச் சூழல், பேச்சுச் சூழல் என ஐவகைப்படும். அவற்றை எடுத்துக்காட்டுகள்வழிக் காண்போம்.

**அ) ஒலிச் சூழல்**

பலகை – பல கை

பலகை என்னும் சொல், ஒரு சொல்லாகத் தனித்து ஒலிக்கும்போது, மரப்பலகை என்னும் பொருளையும், பல சொல்லாகத் தொடர்ந்து ஒலிக்கும்போது, பல கைகள் என்னும் பொருளையும் தருகின்றது. இவ்வாறு வரும் சொற்களைப் பொதுமொழி எனப் படித்திருப்பீர்கள்.

**ஆ) உருபன் இணைப்புச் சூழல்**

ஆறு – ஆற்றை (ஆறு + ற்+ ஐ) ஆறை (ஆறு+ஐ)

ஆறு என்னும் சொல்லுடன் ஐ என்னும் உருபன் சேரும்போது, சூழலுக்கேற்பப் பொருள் மாற்றம் பெறுகிறது. ஆறு + கடந்தான் எனக் கூறும்போது, ஐ உருபனுடன் ஒற்று இரட்டித்து, ஆற்றைக் கடந்தான் எனவும், ஐந்துடன் ஆறு என்ற எண்ணைக் கூட்டு என வரும்போது, ஐ உருபன் மட்டுமே இணைந்து ஆறைக் கூட்டு எனவும் பொருள் தருகிறது.

**இ) இலக்கணச் சூழல்**

ஆடு – ஆடு

ஆடு என்னும் சொல், பெயர்ச்சொல்லாகவும் வரும். வினைச்சொல்லாகவும் வரும். வயலில் ஆடு மேய்கிறது எனச் சொல்லும்போது, ஆடு என்பது, ஒரு விலங்கின் பெயரைக் குறிக்கும் பெயர்ச்சொல். இசைக்கேற்ப நடனம் ஆடு எனச் சொல்லும்போது, ஆடு என்பது ஆடுதல் என்னும் தொழிலைக் குறிக்கும் வினைச்சொல்.

**ஈ) சொல் இணைப்புச் சூழல்**

சவுக்கு – சவுக்கு மரம் – சவுக்கடி

சவுக்கு என்னும் சொல்லுடன் வெவ்வேறு சொற்கள் இணையும்போது, வெவ்வேறு பொருளைத் தருகின்றன. சவுக்குமரம் என்று கூறும்போது, ஒரு வகை மரத்தைக் குறிப்பிடுகிறது. சவுக்கடி கிடைத்தது என்று கூறும்போது, சவுக்கால் அடித்ததைக் குறிப்பிடுகிறது.

**உ) பேச்சுச் சூழல்**

இது, பொருள் மயக்கம் கொண்ட மொழிக்கூறுகளைச் சார்ந்தது. அதனால், அதனதன் பொருள்களைத் தனித்தனியாகப் பிரித்துப் பொருள் உணரவேண்டும். இதனைப் பேச்சுநடை, வட்டாரவழக்கு, கதைநடை, கவிதைநடை போன்ற பல்வேறு மொழிக் கூறுகளில் உணரலாம்.

எடுத்துக்காட்டாக,

நான் மதுரை

என்னும் தொடர் பொருள் தெளிவில்லாமல்,

1. நான் மதுரையைச் சார்ந்தவன்
2. நான் மதுரைக்குப் போகிறவன்
3. நான் மதுரையிலிருந்து வருபவன்

எனப் பல பொருள்களைத் தரக்கூடிய வகையில் உள்ளது. இப் பொருள் மயக்கங்கள் பேச்சுச் சூழலினால் தெளிவுபடும். அதாவது நடத்துநரிடம், பயணி தான் போகவேண்டிய இடத்தைக் குறிப்பிடும்போதும், தான் எங்கிருந்து வருகிறேன் என்பதைக் குறிப்பிடும்போதும், தன் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவரிடம் தன் சொந்த ஊர் இன்னதென்பதைச் சுட்டிக்காட்டவும் எனப் பல நிலைகளில் "நான் மதுரை" என்னும் தொடர் பயன்படுகிறது.

### 2.7.1 சொற்பொருள் மாற்றம்

பொருளை உணர்த்துவதற்குச் சொற்கள் கருவிகளாக உள்ளன. அவை, எவ்வாறெல்லாம் மாற்றம் பெற்றுள்ளன என்பதைப் பின்வரும் தலைப்புகளில் காண்போம்.

### ஒரு சொல்லுக்கு ஒரு பொருள்

பேச்சுமொழியில் ஒரு சொல், ஒரு பொருளை உணர்த்தும். சிலபோது, வேறொரு பொருளையும் உணர்த்தும். அவ்வாறு உணர்த்தும்போது, ஒரு பொருள் நிலைபெற்றும் மற்றொரு பொருள் வழக்கிழந்தும் போகலாம். எடுத்துக்காட்டாகக் 'கவலை' என்னும் சொல்லுக்கு இரண்டாகப் பிரியும் இடம் என ஒரு பொருளும் மனவருத்தம் என மற்றொரு பொருளும் உள்ளன. இப்போது, 'கவலை' என்பது, மனவருத்தம் என்ற ஒரு பொருளை மட்டுமே குறிக்கிறது.

நீங்களும் இவை போன்ற சொற்களைத் தொகுத்துப் பட்டியல் உருவாக்கலாம்.

### ஒரு பொருளுக்கு ஒரு சொல்

ஒரு பொருளை உணர்த்த, ஒரு சொல்லே போதுமானது. அவ்வாறின்றி ஒரு பொருளைக் குறிக்க, இரண்டு அல்லது இரண்டுக்கும் மேற்பட்ட சொற்கள் இருக்குமானால், ஒன்று நிலைபெற மற்றவை வழக்கிழக்கும். எடுத்துக்காட்டாக, 'வீடு', 'இல்', 'மனை' போன்ற சொற்கள் 'இல்லம்' (வீடு) என்னும் ஒரே பொருளைக் குறித்தன. இப்போதைய வழக்கில் 'இல்' என்னும் சொல்லை, இலக்கியத்தில் மட்டுமே காணமுடிகிறது. 'மனை' என்னும் சொல்லோ, 'வீடு கட்டுவதற்குரிய இடம்' என்னும் பொருளைத் தருகிறது. பேச்சுவழக்கில், ஒருவர் 'நான் மனை வாங்கியுள்ளேன்' என்று கூறினால், அவர் வீடு வாங்கியுள்ளதாகப் பொருளன்று, வீடு கட்ட இடம் வாங்கியுள்ளார் என்பதையே உணர்த்துகிறது.

### உயர்பொருட்பேறு

இழிந்த பொருளில் வழங்கி வந்த சொற்கள், காலப்போக்கில் உயர்ந்த பொருள்களைத் தருவதாகவும் மாற்றமடைந்துள்ளன. இவ்வாறு வருவனவற்றை 'உயர்பொருட்பேறு' எனக் குறிப்பிடுகின்றனர். முன்பு, கள்ளுண்டு களித்தல் என்பதைக் 'களிப்பு' என்றனர். இன்று, 'களிப்பு' என்பது, 'மனமகிழ்ச்சி' என்னும் உயர்பொருளில் வழங்குகிறது.

### இழிபொருட்பேறு

முன்பு, உயர்ந்த பொருளில் வழங்கிவந்த சொல், காலப்போக்கில் இழிந்த பொருளைத் தருவதும் உண்டு. அவ்வாறு வருவனவற்றை 'இழிபொருட்பேறு' எனக் குறிப்பிடுகின்றனர். எடுத்துக்காட்டாக, 'நாற்றம்' என்னும் சொல், முன்பு 'நறுமணம்' என்னும் பொருளைத் தந்தது. இப்போது, 'துர்நாற்றம்' (விரும்பத்தகாத வாசனை) என்னும் இழிந்த பொருளைத் தருகிறது.

### சிறப்புப் பொருட்பேறு

முன்னர் பலவற்றிற்கும் பொதுவாக வழங்கிய சொற்கள், அவற்றுள் ஒன்றை மட்டுமே குறிப்பதாக வருவனவற்றைச் சிறப்புப் பொருட்பேறு என்கிறோம். எடுத்துக்காட்டாக, எள்ளின் நெய், பாலின் நெய் என்பனவற்றைக் குறித்த 'நெய்' என்னும் சொல், இப்போது, பாலின் நெய்யை மட்டும் குறிக்கிறது. விலங்குகளைப் பொதுவாகக் குறித்த 'மான்' என்னும் சொல் இப்போது, மான் என்னும் ஒரு விலங்கினத்தை மட்டுமே குறிக்கிறது.

இவைபோன்ற பல சொற்களைத் திரட்டித் தொகுப்பேடு உருவாக்குங்கள்.

**பொதுப்பொருட்பேறு**

முன்பு, ஒருவகைப் பெயருக்கு வழங்கிவந்த பெயர், பின்னர் அதனைப்போன்ற பலவற்றிற்கும் பொதுப்பெயராக வழங்குவதைப் பொதுப்பொருட்பேறு என்கிறோம். எடுத்துக்காட்டாக, எள்ளினின்று எடுக்கப்பட்டதனை, 'எண்ணெய்' என்றனர். இன்றோ தேங்காய் எண்ணெய், மண்ணெண்ணெய், விளக்கெண்ணெய் எனப் பொதுப்பெயராக வழங்குகின்றனர். தண்மை (குளிர்ச்சி) பொருந்திய நீரே 'தண்ணீர்' எனப்பட்டது. இப்போது கஞ்சித்தண்ணீர், சீரகத்தண்ணீர், மிளகுத்தண்ணீர், காப்பித்தண்ணீர் (Coffee) எனப் பொதுவாகக் கூறுகின்றனர்.

**சொற்பொருள் மாற்றம் குறித்த ஆய்வின் பயன்கள்**

சொற்பொருள் மாற்றம் பற்றிய ஆய்வு, தமிழில் சொற்களின் நிலை, பொருண்மை அடிப்படையில் அவை எவ்வாறு பின்னிப் பிணைந்துள்ளன என அறிந்துகொள்ள வழிவகுக்கும். பலவகைப்பட்ட அகராதிகளை உருவாக்குவதற்குத் துணைபுரியும்.

## 2.8 தொகுப்புரை

தமிழில் சொற்கள் எவ்வாறு உருவாகின்றன, அவற்றின் வகைகள் என்னென்ன என்பன பற்றி இந்தப் பாடத்தில் அறிந்துகொண்டோம். ஒரு சொல்லிலுள்ள உறுப்புகளின் பெயர்கள், அவை எந்தெந்த இடங்களில் இடம்பெறும் என்பது குறித்தும் தெரிந்துகொண்டோம். பொருள் அடிப்படையில் தனிமொழி, தொடர்மொழி, பொதுமொழி குறித்தும் புரிந்துகொண்டோம். இலக்கிய வகையிலும் இலக்கண வகையிலும் சொற்களின் வகை, தமிழில் பிறமொழிச் சொற்கள் கலந்துள்ள நிலை முதலிய செய்திகளை இந்தப் பாடத்தின் வாயிலாக அறிந்துகொண்டோம். ஆகவே, நம்முடைய பேச்சிலும் எழுத்திலும் பொருளுடைய சொற்களைப் பிழையின்றிப் பயன்படுத்துவோம். பிறமொழிச் சொற்கள் கலக்காமல் தூய தமிழ்ச்சொற்களை அடையாளம் கண்டு அவற்றை நடைமுறை பயன்பாட்டில் பின்பற்றுவோம்.

## பயிற்சிகள்

**அ) பின்வரும் தொடரில் விடுபட்ட இடத்திற்குப் பொருத்தமான சொல்லைக் கண்டறிக.**

1. மல்லிகைப் பூ ________பூக்கும். (கொடியில்/ செடியில்)
2. ஆற்றின் இருபுறமும் ________இருக்கும். (கறை/ கரை)
3. நாலெழுத்தால் ஆகிய சொல் ________ (வெள்ளி/ வெண்மதி)
4. பகுபதச் சொற்களுள் ஒன்று ________ (பொன்/ பொன்னன்)
5. சாரியை இடம்பெறாத சொல்________ (நடந்தனள்/ நடந்தாள்)

**ஆ) பொருத்துக.**

| சொல் | – | வகை |
|---|---|---|
| 1. யானை | – | திசைச்சொல் |
| 2. ஆழி | – | வடசொல் |
| 3. சாவி | – | இயற்சொல் |
| 4. கமலம் | – | திரிசொல் |

**இ) படத்திற்குரிய சொல்லைக் கண்டறிந்து, இடுகுறிப்பெயரா, காரணப் பெயரா எனக் கூறுக.**

1.  ______________
2.  ______________
3.  ______________
4.  ______________
5.  ______________

**ஈ) பின்வரும் உரைப்பகுதியில் அடிக்கோடிட்ட சொற்களை இலக்கிய வகைப்படுத்துக.**

நான் **நேற்று** **சினிமா**வுக்குச் சென்றேன். என்னுடன் **ஜோதி**யும் வந்தாள். இருவரும் **ஐம்பது** **ரூபாய்** கொடுத்து **நுழைவுச்சீட்டு** வாங்கினோம். நாங்கள் பார்த்த **திரைப்படம்** **சுவாரசியமாக** இருந்தது. ஜோதி படம் நன்றாக இருந்ததென **இயம்பினாள்**. படம் முடிந்ததும் அருகிலிருந்த **பஜாருக்குச்** சென்றோம். பின்னர், **வீட்டிற்கு** வந்தோம்.

**உ) பின்வரும் உரையாடலிலிருந்து ஆகுபெயர்களைக் கண்டறிக.**

**மணிமொழி** : நேற்று பெய்த மழையால் நம் ஊரே மகிழ்ந்தது, தெரியுமா?

**கனிமொழி** : ஆமாம். காய்ந்திருந்த பயிர்கள் இனி வாடாமல் இருக்குமல்லவா. அப்போதுதானே உரிய காலத்தில் நெல் அறுக்கமுடியும்?

**மணிமொழி** : சரியாகச் சொன்னாய். அதுசரி, இன்று நம் பள்ளிக்கு விடுமுறையா?

**கனிமொழி** : ஆமாம். நேற்று பெய்த மழையால் நம் பள்ளிக்குள் மழைநீர் தேங்கியுள்ளதாம். அதனால்தான்.

**மணிமொழி** : ஓ! அப்படியா? நல்லவேளை. நான் தமிழ்த் தேர்வுக்குத் தயாராக நேரம் கிடைத்தது. குறள் படிக்க வேண்டும். வீட்டிற்குச் செல்கிறேன்.

**மணிமொழி** : நானும் கம்பரைப் படிக்க வேண்டும். நாளை பள்ளியில் சந்திப்போம்.

**ஊ) ஓரிரு தொடரில் விடை கூறுக.**

1. ஒரு சொல்லைப் பகுபதம், பகாப்பதம் என எதன் அடிப்படையில் கூறுகிறோம்?
2. முக்கோணம் – இச்சொல், எப்படிக் காரணப்பெயராகும்?
3. நிலவைக் குறிக்கும் வேறு சொற்களைக் கூறுக. இவை எவ்வகைச் சொற்களாகும்?
4. 'எட்டு' – இச்சொல், தனிமொழியா? பொதுமொழியா? காரணம் கூறுக.
5. 'பஸ்ஸில் ஏறியதும் கண்டக்டர் டிக்கட் வாங்கச் சொன்னார்'. – இத்தொடரில் இடம்பெற்றுள்ள திசைச்சொற்களைக் கண்டறிந்து, அவற்றிற்கு இணையான தமிழ்ச்சொற்களைக் கூறுக.

6. பின்வரும் படத்திலிருந்து எவையேனும் எட்டுச் சொல்லைக் கண்டறிந்து, அவற்றை இலக்கணவகைச் சொற்களாக வகைப்படுத்துக.



7. பின்வரும் படத்திற்குப் பொருத்தமான தொடரை உருவாக்குக. அத்தொடரிலிருந்து தெரிநிலை வினைமுற்றைக் கண்டறிந்து, அது வெளிப்படையாக உணர்த்தும் ஆறு பொருளையும் கூறுக.



8. **பின்வரும் உரைப்பகுதியிலிருந்து பெயரெச்சம், வினையெச்சம் கண்டறிக.**

அப்பா வீட்டிற்குள் நுழைந்ததும் நானும் என் தம்பியும் பாடம் படிக்கத் தொடங்கினோம். தம்பி விரைவாகப் படித்து முடித்தான். நான் விளையாடிய விளையாட்டை எண்ணிச் சிரித்துக் கொண்டிருந்தேன். சிறிதுநேரம் கழித்து, அப்பா எங்களை அழைத்தார். படித்த பாடத்திலிருந்து கேள்வி கேட்டார். நான் திருதிருவென விழித்தேன். தம்பி கடகடவென விடை சொன்னான். அவனைப் பாராட்டிய அப்பா, என்னையும் ஊக்குவித்தார். இருவருக்கும் புதிய எழுதுகோல் தந்தார். அன்றுமுதல், கவனத்துடன் படிக்கவேண்டும் என்பதை நான் உணர்ந்துகொண்டேன்.

## விடைகள்

### அ) சரியான சொல்

1. கொடியில் 2. கரை 3. வெண்மதி 4. பொன்னன் 5. நடந்தாள்

### ஆ) பொருத்துக.

| சொல் | – | வகை |
|---|---|---|
| 1. யானை | – | இயற்சொல் |
| 2. ஆழி | – | திரிசொல் |
| 3. சாவி | – | திசைச்சொல் |
| 4. கமலம் | – | வடசொல் |

### இ) இடுகுறிப்பெயர்

கல், முயல்

**காரணப்பெயர்**

மரம் (தரையோடு மருவி நிற்பதால்)

நாற்காலி (நான்கு கால் இருப்பதால்)

வானவூர்தி (வானில் ஊர்ந்து செல்வதால்)

### ஈ) இலக்கிய வகைச் சொற்கள்

இயற்சொல் – நேற்று, ஐம்பது, நுழைவுச்சீட்டு, திரைப்படம், வீட்டிற்கு
திரிசொல் – இயம்பினாள்
திசைச்சொல் – சினிமா, ரூபாய், பஜார்
வடசொல் – ஜோதி, சுவாரசியம்

### உ) ஆகுபெயர்கள்

| | | |
|---|---|---|
| ஊரே மகிழ்ந்தது | – | இடவாகுபெயர் |
| நெல் அறுத்தல் | – | பொருளாகுபெயர் |
| பள்ளிக்கு விடுமுறை | – | இடவாகுபெயர் |
| குறள் படிக்கவேண்டும் | – | கருவியாகுபெயர் |
| கம்பரைப் படிக்கவேண்டும் | – | கருத்தாவாகுபெயர் |

**ஊ) ஓரிரு தொடரில் விடை**

1. பிரிக்கக்கூடிய சொல், பகுபதம். பிரிக்க இயலாத சொல், பகாப்பதம்.
2. மூன்று பக்கமும் கோணம் உள்ளதால் முக்கோணம் காரணப்பெயராகும்.
3. நிலவு – மதி, திங்கள், சந்திரன், அம்புலி
4. எட்டு – இச்சொல், பொதுமொழி, ஏனெனில், எள் + து – எள்ளை உண் எனவும் எட்டு – ஓர் எண் எனவும் இருபொருள் தருகிறது.
5. பஸ் – பேருந்து, கண்டக்டர் – நடத்துநர், டிக்கட் – நுழைவுச்சீட்டு
6. இலக்கண வகைச் சொற்கள்

   யெர்ச்சொல் – சிறுவர்கள், மீன், மலை, மரம், ஆறு, கூடை, தூண்டில்

   வினைச்சொல் – தூண்டில் போடு, மீன் பிடி, காற்று வீசுகிறது, இலை அசைகிறது

   இடைச்சொல் – சிறுவர்கள் இருவரும் மீன் பிடிக்கின்றனர்.

   உரிச்சொல் – மாமலை, உறுமீன்
7. **சிறுமி படம் வரைகிறாள்**

| | | |
|---|---|---|
| செய்பவள் | – | சிறுமி |
| கருவி | – | எழுதுகோல் |
| நிலம் | – | வீடு |
| செயல் | – | வரைதல் |
| காலம் | – | நிகழ்காலம் |
| செய்பொருள் | – | படம் |

8. **பெயரெச்சம்**

   விளையாடிய விளையாட்டு, படித்த பாடம், பாராட்டிய அப்பா, புதிய எழுதுகோல்

   **வினையெச்சம்**

   படிக்கத் தொடங்கினோம், படித்து முடித்தான், சிரித்துக் கொண்டிருந்தேன்

## பாடம் – 3

## தொடர் அமைப்பு

### 3.0 முன்னுரை

எழுத்துகள் ஒன்றோ பலவோ சேர்ந்து பொருள் தரும்போது சொல்லாகிறது. சொற்கள் பல சேர்ந்து தொடர்கள் உருவாகின்றன. பல சொல் சேர்ந்து வந்தாலும், பொருள் முடிவுபெற்று வந்தால் மட்டுமே அவை தொடர்கள் எனப்படும். தொடருக்கும் (Sentence) சொற்றொடருக்கும் (Phrase) சிறு வேறுபாடு உண்டு. எடுத்துக்காட்டாக, "வட்டமான நிலா" என்பது, ஒரு சொற்றொடர். "நான் வட்டமான நிலாவைக் கண்டேன்" என்பது பொருள் முடிவுபெற்ற தொடர். நம்முடைய பேச்சிலும் எழுத்திலும் இவ்விரண்டுமே பயன்பாட்டில் உள்ளன. தொடர் உருவாவதற்கு எழுவாய், செயப்படுபொருள், பயனிலை தேவை. இவை மூன்றனுள் ஏதேனும் ஒன்று இல்லாமல்கூடத் தொடர் அமையலாம். அவற்றைப் பற்றி விரிவாக இப்பாடத்தில் அறிந்துகொள்வீர்கள். பலவகைத் தொடர்களையும் அவற்றின் பயன்பாடுகளையும் இந்தப்பாடம் உங்களுக்கு எடுத்துரைக்கிறது. இதன்மூலம், தமிழில் பயின்று வரும் தொடர்களை அடையாளம் காணவும் அவற்றைப் பிழையின்றிப் பயன்படுத்தவும் இந்தப்பாடம் உங்களுக்கு உதவும்.

### 3.1 எழுவாய்

சொற்கள் பல தொடர்ந்து வந்து ஒரு கருத்தை உணர்த்தினால் அது தொடர் எனப்படும். ஒரு தொடருக்கு எழுவாய், பயனிலை, செயப்படுபொருள் ஆகிய மூன்றும் இன்றியமையாதவை. செயப்படுபொருள் இல்லாமலும் தொடர் அமையலாம். ஒரு தொடரில் முதலில் எழுவாயும் இறுதியில் பயனிலையும் வரும். சில தொடரின் இறுதியில் செயப்படுபொருளும் வரும். சில தொடர்களில் வைப்புமுறை மாறியும் வரும்.

தொடர் அல்லது சொற்றொடர் என்னும் தமிழ்ச்சொல்லுக்கு இணையான வடமொழிச் சொல் வாக்கியம் என்பதாகும். தொடர் என்றாலும் வாக்கியம் என்றாலும் ஒரே பொருளைத்தான் உணர்த்தும்.

ஒரு தொடர் உருவாவதற்குக் காரணமாக அமைவது எழுவாய். அல்லது ஒரு தொடரில் யார், எது, எவை, யாவர் எனும் வினாக்களுக்கு விடையாக வரும் சொல்லே எழுவாய் ஆகும். எழுவாய் வெளிப்படையாக வருவதும் உண்டு. மறைந்து வருவதும் உண்டு. அப்படி மறைந்து வரும் எழுவாயைத் தோன்றா எழுவாய் என அழைப்பர்.

எழுவாய் எப்போதும் ஒன்றின் பெயரைக் குறிக்கும் சொல்லாக மட்டுமே வரும். இஃது உயர்திணையையும் குறிக்கும்; அஃறிணையையும் குறிக்கும்; ஒருமையாகவும், பன்மையாகவும் வரும். செயலைக் குறிக்கும் வினைச்சொல்லாக எழுவாய் வராது.

**எடுத்துக்காட்டு – 1 (வெளிப்படையாக வரும் எழுவாய்)**

1. **கவிதா** கவிதை எழுதினாள். (யார்)
2. **மாணவர்கள்** பாடம் படித்தனர் (யாவர்)
3. **நாய்** வீட்டைக் காக்கும் (எது)
4. **பறவைகள்** இரை தேடின (எவை)

"கவிதா கவிதை எழுதினாள்" இந்தத் தொடரில் செயலைச் செய்தது யார்? என்னும் வினாவை எழுப்பும்போது கவிதா என்னும் சொல் விடையாகக் கிடைக்கின்றது. கவிதா கவிதை எழுதினாள் என்னும் தொடரில் எழுவாய் "கவிதா" ஆகும். இது வெளிப்படையாக வந்துள்ள எழுவாய்.

**எடுத்துக்காட்டு – 2 (மறைந்து வரும் எழுவாய் / தோன்றா எழுவாய்)**

- பாடம் படி
- அறம் செய விரும்பு

“பாடம் படி“ இந்தத் தொடரில் செயலைச் செய்வது யார்? என்னும் வினாவை எழுப்பும்போது பாடம் படி என்பதில் நீ என்னும் எழுவாய் மறைந்து வந்துள்ளது. எனவே இங்கு 'நீ' என்பது தோன்றா எழுவாய் ஆகும்.

### 3.2 பயனிலை

ஒரு தொடரில் என்ன செயல் நிகழ்கிறது எனக் கேள்வி கேட்கப்படும்போது அதற்கான விடையாக அமைவது பயனிலை. பயனிலை வினைச் சொல்லாக அமையும். பயனிலையை மூவகையாகப் பிரிக்கலாம். அவை பின்வருமாறு,




### 3.3 செயப்படுபொருள்

ஒரு தொடரில் எதை, யாரை, எதனை, எவற்றை எனக் கேட்கப்படும் வினாவுக்கு விடையாக வரும் சொல்லே செயப்படுபொருள் ஆகும். செயப்படுபொருள் என்பது எழுவாயினால் செய்யப்படுகின்ற பொருளாகும். இஃது இரண்டாம் வேற்றுமை உருபினை ஏற்று வரும். சில தொடர்களில் செயப்படுபொருள் இல்லாமலும் வரும்.

**எடுத்துக்காட்டு – 1**

**குயவன் பானை வனைந்தான்**

இத்தொடரில் குயவன் – எழுவாய், பானை – செயப்படுபொருள், வனைந்தான் – பயனிலை. எதனைச் செய்தான் என்னும் வினாவிற்குப் பானை என்னும் சொல் விடையாகக் கிடைக்கிறது.

இவ்வாறு செயப்படுபொருள் பெற்றுவரும் வினைச் சொற்களைச் "செயப்படுபொருள் குன்றா வினை" என அழைப்பர்.

**எடுத்துக்காட்டு – 2**

**பனை விழுந்தது**

இத்தொடரில் பனை – எழுவாய், விழுந்தது – பயனிலை. செயப்படுபொருள் இல்லை. இவ்வாறு செயப்படுபொருள் இல்லாமலும் ஒருதொடர் வரலாம். இவ்வாறு செயப்படுபொருள் பெறாத வினைச் சொற்களைச் "செயப்படுபொருள் குன்றியவினை" என அழைப்பர்.

### 3.4 தொடர் அமைப்பு

| எழுவாய் | செயப்படுபொருள் | பயனிலை |
|---|---|---|
| அம்மா | பாடல் | பாடுகிறார் |
| யாழினி | படம் | வரைகிறாள் |
| ஆனந்தி | பள்ளி | செல்கிறாள் |

### 3.5 தொடரமைப்பு சிறப்பு

எழுவாய் – செயப்படுபொருள் – பயனிலை

- நான் பாடத்தைப் படித்தேன்

செயப்படுபொருள் – எழுவாய் – பயனிலை

- பாடத்தை நான் படித்தேன்

பயனிலை – எழுவாய் – செயப்படுபொருள்

- படித்தேன் நான் பாடத்தை

எழுவாய் – பயனிலை – செயப்படுபொருள்

- நான் படித்தேன் பாடத்தை

செயப்படுபொருள் – பயனிலை – எழுவாய்

- பாடத்தைப் படித்தேன் நான்

இவ்வாறான தொடர் சிறப்பு என்பது தமிழ்மொழிக்கு மட்டுமே உரிய சிறப்பாகக் கருதப்படுகிறது. வேறெந்த மொழிக்கும் இச்சிறப்பு இல்லை. ஆயினும் தமிழில் எல்லாத் தொடர்களையும் இவ்வாறு மாற்ற இயலாது.

எ.கா. பறவைகள் இரை தேடின.

தொடர் அல்லது சொற்றொடரை அதன் அமைப்பு அடிப்படையில் மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம். அவை பின்வருமாறு,




### 3.5.1 கருத்துவகைத் தொடர்கள்

கருத்துவகைத் தொடரை நால்வகையாகப் பிரிக்கலாம். அவை பின்வருமாறு,

#### 3.5.1.1 செய்தித் தொடர்

ஒரு செய்தியைத் தெளிவாகக் கூறும் தொடர் செய்தித் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- கம்பர் இராமாயணத்தை இயற்றினார்
- இராஜராஜன் தஞ்சைப் பெரிய கோவிலைக் கட்டினான்
- முதல்வர் துபாய் சென்றார்
- செழியன் அயராது படித்துத் தேர்வில் வெற்றி பெற்றான்
- கண்ணதாசன் சிறுகூடல்பட்டியில் பிறந்தார்

#### 3.5.1.2 வினாத் தொடர்

வினாப் பொருளைத் தரும் தொடர் வினாத்தொடர் எனப்படும். அதாவது, என்ன? ஏன்? எங்கு? எவ்வாறு? யார்? போன்ற வினாக்களுக்கு விடையாக வரும் தொடர் வினாத் தொடராகும்.

- செழியா என்ன சாப்பிட்டாய்?
- கவிதா நீ ஏன் நேற்று உடற்பயிற்சி செய்யவில்லை?
- அமுதன் எங்கு வேலை செய்கிறான்?
- இந்த இடத்தில் தவறு எவ்வாறு நடந்தது?
- தொலைபேசியைக் கண்டுபிடித்தவர் யார்?
- அவர்தாம் தமிழ் ஆசிரியரா?
- இதைக் கூறியவர் யாரோ?
- தமிழினி எங்கே செல்கிறாய்?
- குணா பள்ளிக்குப் போவாயா?
- வளவன் எங்கே சென்றான்?

### 3.5.1.3 விழைவுத் தொடர்

விழைவுத் தொடரை நால் வகையாகப் பிரிக்கலாம். அவை பின்வருமாறு :




**1. கட்டளைத் தொடர் (ஏவல்)**

ஒருவர் மற்றொருவரைப் பார்த்து ஒரு செயலைச் செய்யும்படி கட்டளையிடுவது கட்டளைத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

பாடம் படி.

இத்தொடர் ஆசிரியர், மாணவனைப் பார்த்துப் பாடத்தை நன்றாகப் படி எனக் கட்டளை இடுவதாக அமைந்துள்ளது. கட்டளைத் தொடரின் இறுதியில் கட்டாயம் முற்றுப்புள்ளி (.) வரவேண்டும்.

- கதை சொல்
- பள்ளிக்கூடத்திற்குப் போ.
- விரைந்து வா.
- விரைவாகச் செல்.
- தொலைபேசியை எடு.
- சொன்னதைக் கேள்.
- பார்த்து நட.

- மெதுவாக உண்.
- பாடத்தைக் கவனி.

**2. வேண்டுகோள்**

ஒருவர் மற்றொருவரைப் பார்த்து எனக்கு இந்தப் பொருளைத் தருக என வேண்டுவது வேண்டுகோள் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- எனக்குப் பசிக்கிறது சோறு தருக.
- எனக்குத் தாகமாக இருக்கிறது தண்ணீர் தருக.
- எழுதுவதற்கு எழுதுகோல் தருக.
- படிக்கத் தமிழ் நூல் தருக.
- வசிக்க இடம் தருக.

இத்தொடர்களில் தருக எனும் சொல் வேண்டுதல் பொருளில் அமைந்துள்ளது. வேண்டுகோள் தொடரின் இறுதியில் முற்றுப் புள்ளி(.) இட வேண்டும்.

**3. வாழ்த்துதல்**

ஒருவர் மற்றொருவரைப் பார்த்து வாழ்த்தும் பொருட்டு அமையும் தொடர் வாழ்த்துதலாகும்.

**எடுத்துக்காட்டு**

- மணமக்கள் பல்லாண்டு வாழ்க!
- நீடூழி வாழ்க!
- நோய், நொடியின்றி வாழ்க!
- தமிழ் வாழ்க!
- பதினாறும் பெற்றுப் பெருவாழ்வு வாழ்க!

வாழ்த்துத் தொடரின் இறுதியில் ஆச்சரியக் குறி (!) சேர்ந்து வரவேண்டும்.

**4. வைதல் (திட்டுதல்)**

நமக்கு ஒரு செயல் பிடிக்காமல் இருக்கலாம். அல்லது நமக்குப் பிடிக்காத செயலை ஒருவர் செய்யலாம். அப்போது நாம் என்ன செய்வோம்? அவரைக் கடிந்துகொள்வோம் அல்லவா? அப்படிக் கூறுவதுதான் வைதல் அதாவது, திட்டுதல் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- கல்லாமை ஒழிக!
- மது ஒழிக!
- தீமை கெடுக!
- வறுமை ஒழிக!

- தீண்டாமை ஒழிக!
- பெண்ணடிமை ஒழிக!
- ஆணவம் அழிக!

ஒழிக என்னும் சொல்லின் இறுதியில் உணர்ச்சிக்குறி (!) கட்டாயம் வரவேண்டும். 'ஒழிக' என்னும் சொல்லின் பொருள் வைதல் பொருட்டு வந்துள்ளது.

### 3.5.1.4 உணர்ச்சித் தொடர்

உணர்ச்சி தோன்ற கூறும் தொடரை உணர்ச்சித் தொடர் என்பர். இவ்வுணர்ச்சித் தொடரை நால்வகையாகப் பிரிக்கலாம். அவை பின்வருமாறு,




1. **மகிழ்ச்சித் தொடர்**

ஒருவர் சொல்லும் சொல் அல்லது கருத்து மற்றவரின் மனத்தில் மகிழ்ச்சியை ஏற்படுத்துமானால் அது மகிழ்ச்சித் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- இரண்டு ஆண்டுகளுக்குமுன் வெளிநாடு சென்ற அண்ணன் இன்று ஊருக்கு வருகிறார். (மகிழ்ச்சி)
- தேசிய அளவில் நடைபெற்ற சிலம்பம் போட்டிகளில் மாணவர்கள் கலந்துகொண்டு பதக்கங்களைக் குவித்தனர். (பள்ளிக்குப் பெருமை)
- நகைக்கடன், பயிர்க்கடன் முற்றிலும் தள்ளுபடி. (உழவர்களுக்கு மகிழ்ச்சி)

2. **துன்பத் தொடர்**

ஒருவர் சொல்லும் சொல் அடுத்தவர் மனத்தைத் துன்பப்படுத்துமானால் அது துன்பத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- விபத்தில் சிக்கிய இருவருக்குப் பலத்த காயம் (துன்பம்).
- ஒடிசாவுக்குப் புயல் எச்சரிக்கை 3 நாளுக்கு 95 விரைவு இரயில் ரத்து (துன்பம்).
- பயிர்கள் நீரில் மூழ்கின. விவசாயிகள் கவலை (துன்பம்).

**3. அச்சத் தொடர்**

ஒருவர் சொல்லும் சொல் அல்லது செய்யும் செயல் அடுத்தவர் மனத்தை அச்சம் கொள்ளச் செய்யுமானால் அது அச்சத்தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- ஐயோ, பாம்பு! பாம்பு! (அச்சம்).
- ஜவாத் புயல் தமிழகத்தில் பெரும் பாதிப்பை ஏற்படுத்தும் (அச்சம்).
- மீனவர்கள் கடலுக்குள் மீன் பிடிக்கச்செல்ல வேண்டா. வானிலை மையம் எச்சரிக்கை (அச்சம்).

**4. பெருமிதத் தொடர்**

ஒருவர் சொல்லும் சொல் அல்லது செய்யும் செயல், பார்க்கும் காட்சி, அடுத்தவர் மனத்தைப் பெருமைப்படுத்துமானால் அது பெருமிதத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- தமிழரின் சிறப்பு, தஞ்சை பெருவுடையார் கோவில்! (பெருமிதம்).
- தாஜ்மகாலின் அழகுதான் என்னே! (பெருமிதம்).
- என்னே! வள்ளுவர் கோட்டத்தின் அழகு! (பெருமிதம்).
- கரிகாலனின் கல்லணை காலத்தின் வரலாறு! (பெருமிதம்).

### 3.5.2 அமைப்புவகைத் தொடர்

அமைப்புவகைத் தொடரை மூவகையாகப் பிரிக்கலாம். அவை பின்வருமாறு,




### 3.5.2.1 தனிநிலைத் தொடர்

ஓர் எழுவாயோ ஒன்றுக்கும் மேற்பட்ட எழுவாயோ வந்து ஒரே பயனிலையைக் கொண்டு முடிவது தனிநிலைத் தொடர் எனப்படும். பயனிலை என்பது முடிக்கும் சொல். எழுவாய், செயப்படுபொருள் இல்லாமலும் தொடர் அமையும்.

**எடுத்துக்காட்டு**

**செழியன் ஓவியம் வரைந்தான்**

இதில் செழியன் என்பது எழுவாய் வரைந்தான் என்பது பயனிலை

இஃது ஓர் எழுவாய் ஒரு பயனிலைக் கொண்டு முடிந்த தனிநிலைத் தொடராகும்.

- கவிதா பாடம் படித்தாள்.
- சேகர் சிரித்தான்.
- நேற்று வயலில் ஆடுகள் மேய்ந்தன.
- பாம்பு படமெடுத்து ஆடியது.

இவை ஓர் எழுவாய், ஒரு பயனிலை அமைப்பு கொண்ட தனிநிலைத் தொடர்களாகும்.

செழியன், அமுதன், யாழினி மூவரும் பரிசு பெற்றனர்.

இதில் செழியன், அமுதன், யாழினி என்ற பெயர்கள் மூன்றும் எழுவாய்கள், பெற்றனர் என்பது பயனிலை. இது பல எழுவாய்கள் ஒரு பயனிலையைக் கொண்டு முடிந்த தனிநிலைத் தொடர் ஆகும்.

- மா, பலா, வாழை என்பன முக்கனி.
- காரி, பாரி, ஓரி முதலானோர் வள்ளல்கள் ஆவர்.
- கோப்பெருஞ்சோழனும் பிசிராந்தையாரும் சிறந்த நண்பர்கள்.
- சிவகங்கை, இராமநாதபுரம், புதுக்கோட்டையில் கன மழை.
- பள்ளி, கல்லூரிகளுக்கு இன்று விடுப்பு.

இவை பல எழுவாய்கள், ஒரு பயனிலை அமைப்பு கொண்ட தனிநிலைத் தொடர்களாகும்.

### 3.5.2.2 தொடர்நிலைத்தொடர் அல்லது கூட்டுத்தொடர்

ஓர் எழுவாய் பல பயனிலைகளைப் பெற்று வருவது தொடர்நிலைத்தொடர் அல்லது கூட்டுத்தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

தமிழர்கள் கொடைப்பண்பில் சிறந்தவர்கள்; வந்தாரை வாழவைக்கும் பண்பாளர்கள்; ஒழுக்கத்தை உயிரினும் மேலாக மதிப்பவர்கள்.

இதில் 'தமிழர்கள்' என்னும் எழுவாய், சிறந்தவர்கள்; பண்பாளர்கள்; ஒழுக்கத்தை மதிப்பவர்கள் ஆகிய பல பயனிலைகளைக் கொண்டு முடிகிறது. ஓர் எழுவாய் தொடர்ந்து வந்து பல பயனிலைகளுடன் கூடுவதால் இது தொடர்நிலைத்தொடர் அல்லது கூட்டுத்தொடர் எனப்படும்.

வினைமுற்று, எழுவாய்க்குப் பயனிலையாய் அமையும்; முக்காலத்தில் ஒன்றை உணர்த்தும்; திணை, பால், எண் இடங்களைக் காட்டும்.

(எ.கா.) ஜோதி முனைவர் பட்டம் பெற்றாள். இதில் 'பெற்றாள்' என்பது வினைமுற்று. இஃது உயர்திணை, பெண்பால், ஒருமை, படர்க்கை இடம் ஆகியவற்றைச் சுட்டுகிறது.

பெரியார் சமூக முரண்களை எதிர்த்தவர்; மூடநம்பிக்கைகளை முறியடித்தவர்; தொலைநோக்குப் பார்வையுடையவர்; பகுத்தறிவுக்குப் பொருந்தாதவற்றை அறவே ஒதுக்கியவர்; சமூக மாற்றத்தை விரும்பியவர்; பெண்கள் சமூகத்தின் கண்கள் எனக் கருதியவர்; பெண்களை அடிமைத்தனத்திலிருந்து மீட்டவர். (இதில் பெரியார் என்பது எழுவாய்)

மாதவி படித்தாள்; முதல் மதிப்பெண் பெற்றாள்; தங்கப்பதக்கம் வென்றாள்; நாளிதழுக்கும் தொலைக்காட்சிக்கும் பேட்டியளித்தாள். (இதில் மாதவி என்பது எழுவாய்)

### 3.5.2.3 கலவைத் தொடர்

ஒரு தனிநிலைத் தொடரானது ஒன்று அல்லது ஒன்றுக்கும் மேற்பட்ட துணைத் தொடர்களுடன் கலந்து வருவது கலவைத் தொடர் எனப்படும்.

கலவைத் தொடரில் உள்ள தனிநிலைத் தொடரானது துணைத் தொடர் அல்லது சார்புத் தொடர் இல்லாதபோதும் பொருள் முற்றுப்பெறும்; தனித்து இயங்கும் தன்மை கொண்டது.

இதில் வரும் துணைத் தொடர் முற்றுப்பெறாமல் நிற்கும்; தனிநிலைத் தொடரின் பொருளுக்குத் துணையாக நிற்கும்; இது தனித்துச் செயல்படாது.

**எடுத்துக்காட்டு**

- சென்னையில் கனமழை பெய்ததால் ஏரி, குளங்கள் நிரம்பின.

இதில் "ஏரி, குளங்கள் நிரம்பின" என்பது தனிநிலைத் தொடராகும்.

"கனமழை பெய்ததால்" என்பது துணைத் தொடராகும்.

- எவர், இரவும் பகலும் அயராது படிக்கிறாரோ, அவரே நல்ல மதிப்பெண் பெறுவர். இதில் "அவரே நல்ல மதிப்பெண் பெறுவர்" என்பது தனிநிலைத் தொடராகும். "எவர், இரவும் பகலும் அயராது படிக்கிறாரோ" என்பது துணைத் தொடராகும்.

### 3.5.3 வினைவகைத் தொடர்

வினைவகைத் தொடர்களை எட்டு வகையாகப் பிரிக்கலாம் அவை பின்வருமாறு :

**வினைவகைத் தொடர்**

1. உடன்பாட்டுவினைத் தொடர்
2. எதிர்மறைத் தொடர்
3. செய்வினைத் தொடர்
4. செயப்பாட்டுவினைத் தொடர்
5. தன்வினைத் தொடர்
6. பிறவினைத் தொடர்
7. நேர்கூற்றுத் தொடர்
8. அயற்கூற்றுத் தொடர்

### 3.5.3.1 உடன்பாட்டுவினைத் தொடர்

ஒரு செயல் அல்லது தொழில் நிகழ்வதைக் குறிப்பது உடன்பாட்டுத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- மழை பெய்ததால் பயிர் விளைந்தது.
- படித்ததால் தேர்ச்சி பெற்றான்.
- பயிற்சியால் வெற்றி பெற்றான்.
- அறத்தால் உயர்ந்தான்.

### 3.5.3.2 எதிர்மறைத் தொடர்

செயல் அல்லது தொழில் நிகழாமையைக் குறிப்பது எதிர்மறைத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- மழை பெய்யாததால் பயிர் விளையவில்லை.
- படிக்காததால் தேர்ச்சி பெறவில்லை.
- முயற்சி செய்யாததால் வெற்றி பெறவில்லை.
- அறம் இல்லாததால் தாழ்ந்து போனான்.

### 3.5.3.3 செய்வினைத் தொடர்

எழுவாயே செயலைச் செய்வதாகக் கூறுவது செய்வினைத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- கம்பர் இராமாயணத்தை இயற்றினார்.
- திருவள்ளுவர் திருக்குறளை இயற்றினார்.
- தவளை தன் வாயால் கெட்டது.

### 3.5.3.4 செயப்பாட்டுவினைத் தொடர்

செயப்படுபொருளை எழுவாயாகப் பெற்றும், எழுவாயோடு மூன்றாம் வேற்றுமை உருபைப் பெற்றும், பயனிலையோடு 'படு' என்பதைப் பெற்றும் வருகின்ற தொடர் செயப்பாட்டுவினைத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- திருக்குறள் திருவள்ளுவரால் இயற்றப்பட்டது.
- கம்பராமாயணம் கம்பரால் இயற்றப்பட்டது.
- வெற்றிபெற்றோர்க்குப் பரிசுகள் வழங்கப்பட்டன.
- கல்லணை கரிகாலனால் கட்டப்பட்டது.
- தேர்வு முடிவுகள் வெளியிடப்பட்டன.

### 3.5.3.5 தன்வினைத் தொடர்

எழுவாய் தானே செய்யும் செயலை உணர்த்துவது தன்வினைத் தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- செழியன் படித்தான்
- கயல்விழி ஓடினாள்
- கவிதா வரைந்தாள்
- வளவன் உணவு உண்டான்

### 3.5.3.6 பிறவினைத் தொடர்

எழுவாய் பிறரைக் கொண்டு தொழில் செய்விப்பதை உணர்த்துவது பிறவினைத்தொடர் எனப்படும்.

**எடுத்துக்காட்டு**

- தமிழாசிரியர் கற்பித்தார்.

### 3.5.3.7 நேர்கூற்றுத் தொடர்

ஒருவர் கூறியதை எவ்வித மாற்றமும் இல்லாமல் அப்படியே எடுத்துக் கூறுவது நேர்கூற்றுத் தொடர் எனப்படும். இந்நேர்கூற்றுத் தொடர் தன்மை, முன்னிலை இடங்களில் வரும்.

**எடுத்துக்காட்டு**

- "முகக்கவசம் அணியுங்கள்" எனத் தமிழக முதல்வர் மக்களுக்குக் கூறினார்.
- மணமக்களை "எல்லா வளமும் நலமும் பெற்று வாழவேண்டும்" எனச் சான்றோர் வாழ்த்தினார்.
- போருக்கு "இன்று போய் நாளை வா" என இராமன் கூறினார்.
- நாளை "தேர்வுக்குத் தயாராக வா" என ஆசிரியர் கூறினார்.
- இரமணன் "இன்று மழை பெய்யும்" எனக் கூறினார்.

### 3.5.3.8 அயற்கூற்றுத் தொடர்

ஒருவர் கூறியதை அப்படியே கூறாமல் அயலார் கூறுவது போல் கூறுவது அயற்கூற்றுத் தொடர் எனப்படும். தன்மை, முன்னிலை இடங்களில் வரும் எழுவாயைப் படர்க்கையில் அமைத்துக் கூறவேண்டும்.

1. நேர்கூற்றில் இடம்பெறும் காற்புள்ளி, மேற்கோள் குறி ஆகியவை அயற்கூற்றில் இடம் பெறாது.
2. 'என்று' 'என' ஆகிய இணைப்புச்சொற்கள் அயற்கூற்றில் வராது.
3. தன்மைப் பெயரையும் முன்னிலைப் பெயரையும் படர்க்கைப் பெயராக மாற்ற வேண்டும்.
4. படர்க்கைப் பெயர்கள் மாற்றமின்றி வரும்.

5. துணைத்தொடரில் வரும் விளிப்பெயர்கள் நான்காம் வேற்றுமை உருபை ஏற்கும்.
6. துணைத்தொடரில் வரும் பயனிலையுடன் 'ஆக' அல்லது 'ஆறு' என்னும் சொல்லைச் சேர்த்து அதனை முதன்மைத் தொடருடன் இணைக்கவேண்டும்.
7. இருதொடராகத் துணைத்தொடர்கள் இடம்பெற்றிருந்தால் எண்ணும்மை கொடுக்க வேண்டும்.
8. பாடல் அடிகள் மேற்கோளாய்த் துணைத்தொடரில் வரும்போது, அது எழுவாயாக மாறும். மேலும் நேர்கூற்று அயற்கூற்றாக மாறும்போது சில சொற்கள் மாற்றமடையும்.

**எடுத்துக்காட்டு**

- வரியைச் செலுத்தும்படி மக்களுக்குத் துண்டறிக்கை தரப்பட்டது.
- மங்கை தோழியிடம், தான் தின்பண்டம் கொண்டு வருவதாகக் கூறினாள்.
- மாநகராட்சி குப்பைகளைத் தரம் பிரித்துத் தருமாறு மக்களிடம் கேட்டுக்கொண்டது.
- பருவத் தேர்வுக்குரிய விவரங்கள் மாணவர்களுக்குக் கொடுக்கப்பட்டன.
- இசை ஆசிரியர் மாணவர்களிடம் நாள்தோறும் பாடிப் பழகும்படி கூறினார்.
- சித்த மருத்துவர்கள் கபசுரக் குடிநீர் குடிக்குமாறு மக்களுக்கு அறிவுறுத்தினர்.

### 3.6 வழு, வழாநிலை, வழுவமைதி

ஒவ்வொரு நாளும் நம் காதுகளில் சொற்களும் தொடர்களும் கேட்டுக்கொண்டே இருக்கின்றன. யாரோ ஒருவர் அல்லது நமக்குத் தெரிந்த ஒருவர் நம்மிடையே பேசிக்கொண்டே இருக்கிறார். இப்படித்தான் பேசவேண்டும், இப்படித்தான் எழுதவேண்டும் என்று நாம் ஆராய்வதில்லை. கருத்துத் தெளிவு உள்ளதா, நம்மால் பிறருடைய பேச்சைப் புரிந்துகொள்ள முடிகிறதா என்பதுதான் நமக்குத் தேவையாக இருக்கிறது. ஆயினும், மொழிக்கெனச் சில வரம்புகளும் கட்டுப்பாடுகளும் உள்ளன. அவற்றை மீறும்போது, வழுநிலை ஏற்படுகிறது.

வழு என்பதன் பொருள், 'குற்றம்'. என்ன குற்றம்? இங்குச் சொற்குற்றத்தைத்தான் வழு என்கிறோம். எடுத்துக்காட்டாக, யானையின் இளமைப்பெயர் கன்று என்பது. யானைக்கன்று என்று சொல்லாமல், யானைக்குட்டி என்று சொல்வது வழு. நாய்க்கன்று என்று யாராவது சொல்லிக் கேட்டிருக்கிறோமா? இல்லையே. நாய்க்குட்டி என்றுதானே கூறுகிறார்கள்.

நம்முடைய வழக்கில் அடிக்கடி பயன்படுத்தும் சொற்களில் பிழை ஏற்படுவதில்லை. நாய் வீட்டுவிலங்கு. நம் கண்ணில் அடிக்கடி தென்படும் விலங்கு. ஆனால், யானையை எப்போதாவதுதான் நேரிலே காண்கின்றோம். அதனால், அதன் இளமைப்பெயரை மறந்திருக்கக்கூடும். காலப்போக்கில் மறைந்து நாய்க்குட்டி, பூனைக்குட்டி என்பதுபோல, தவறாக யானைக்குட்டி என்று கூறியிருக்கலாம். எவ்வாறாயினும், மொழி மரபை மீறாமல் இருந்தால், மொழி காக்கப்படும்.

இன்றைய நிலையில் ஊடகம் தவறான மரபுச்சொல்லையே பயன்படுத்தி வருகின்றது. ஒரு செய்தித்தாளில், 'தாயைப் பிரிந்து வழி தவறி நின்ற குட்டியானை' என்று தலைப்புச் செய்தி இடம்பெற்றுள்ளது. யானைக்குட்டியே தவறான மரபுச்சொல் என்று கூறும்போது, குட்டியானையை மட்டும் என்னவென்று சொல்வது? இதுவும் தவறான மரபுச்சொல்லே.

சில நேரங்களில் மரபு மீறப்பட்டாலும் அது சரியானதாக ஏற்றுக்கொள்ளப்படும் சூழலும் உண்டு. இஃது ஒருவகையிலான உடன்பாடுதான். தாய் தன் மகனை ஆசையுடன் கொஞ்சுகிறாள். எப்படித் தெரியுமா? "வாடி என் கண்ணே!" இங்கு, தன் மகனைப் பெண்பிள்ளையைப் போல் அழைத்து மகிழ்கிறாள். இப்படி வரும் தொடர்களை வழுவமைதி என்கிறோம். இத்தகைய தொடர்கள் பண்டுதொட்டே வழக்கில் உள்ளன. இவற்றைப் பற்றிச் சற்று விரிவாகப் பார்ப்போம்.

### 3.6.1 வழுநிலை

நம் பேச்சிலும் எழுத்திலும் சுட்டிக்காட்டப்படும் பிழைகளை வழுக்கள் என்கிறோம். எடுத்துக்காட்டாக,

**கலையரசி பாடம் படித்தது (திணை வழு)**

இத்தொடரில், கலையரசி என்னும் உயர்திணைப் பெண்பாற்பெயர், படித்தது என்னும் அஃறிணைக்குரிய ஒன்றன்பால் விகுதியைக் கொண்டு முடிந்தது. இது திணை வழுவாகும்.

**கண்ணன் வேலை செய்தாள் (பால் வழு)**

இத்தொடரில் கண்ணன் என்னும் ஆண்பால் 'வந்தாள்' என்னும் பெண்பால் வினை கொண்டு முடிந்துள்ளது இது பால் வழுவாகும்.

**நாங்கள் வந்தார்கள் ( இட வழு)**

இத்தொடரில் 'நாங்கள்' என்பது 'தன்மை' இடப்பெயர். 'வந்தார்கள்' என்னும் 'படர்க்கைப் பலர்பால்' கொண்டு முடிந்துள்ளது. இது இட வழுவாகும்.

**அக்கா நாளை வந்தாள் ( கால வழு)**

இத்தொடரில் நாளை என்னும் எதிர்காலப் பெயரோடு வந்தான் என இறந்தகால வினைமுற்று வந்துள்ளது. இது கால வழுவாகும்.

**முட்டையிட்டது சேவலா? பெட்டையா? (வினா வழு)**

இத்தொடரில் முட்டையிட்டது சேவலா? பெட்டையா? என்ற வினா கேட்கப்பட்டுள்ளது. இது பொருந்தாத வினா. இது வினா வழுவாகும்.

**நாளை மழை பெய்யுமா? என்ற வினாவிற்கு என் அக்கா நலமில்லை என்று**

**விடையளிப்பது (விடை வழு)**

**மயில் கத்தும் (மரபு வழு)**

இத்தொடரில் 'மயில் கத்தும்' என்பது மரபு வழு. 'மயில் அகவும்' என்பது பிழையற்ற ஒலி மரபாகும். இது மரபு வழுவாகும்.

இவ்வாறு ஏற்படும் வழுக்கள் திணை, பால், இடம், காலம், வினா, விடை, மரபு என வருமிடங்களில் மயங்கிவரும்.

### 3.6.2 வழாநிலை

திணை, பால் முதலானவற்றில் பிழைகள் ஏதுமின்றி அமையும் தொடர்கள் வழாநிலையைச் சார்ந்தவை. வழாநிலை என்பது, சொற்குற்றம் இல்லாத நிலை ஆகும்.

இளந்தென்றல் வீசியது.

பறவைகள் வானில் வட்டமிட்டன.

மயில் அகவ குயில் கூவியது.

என்பன போன்ற தொடர்களில் எவ்வித வழுவும் இல்லை. இவ்வாறு திணை, பால், இடம், காலம், வினா, விடை, மரபு ஆகியவற்றைக் கொண்டு அமையும் தொடர்கள் பிழையின்றி அமைந்தால் அவை வழாநிலைத் தொடர்களாகும்.

### 3.6.3 வழுவமைதி

திணை முதலாகக் கூறப்பட்டவற்றுள் ஒன்று வேறொன்றாக மயங்கி வந்தாலும், சான்றோரால் ஏற்றுக்கொள்ளக் கூடியதாயின், அவை வழுவமைதி ஆகும். வழுவமைதி என்பது, வழுவாயினும் ஏதேனும் ஒரு காரணத்தால் உடன்பட்டுப் பொருத்தமாகக் கொள்ளுதல் ஆகும். ஒருவன், தன் பசுமாட்டைப் பார்த்து "என் லட்சுமி மூன்று லிட்டர் பால் தருவாள்" என்று கூறுவது, அஃறிணையை உயர்திணையாய்க் கருதிக் கூறுதலாகும். இவ்வாறு கூறினாலும், உயர்வு கருதி ஏற்றுக்கொள்ளப்படுகிறது. இதுபோன்று ஏழு வகையில் வழுவமைதியைக் காணலாம்.

**திணை வழுவமைதி**

அஃறிணையை உயர்திணையாகக் கூறுவதும் உயர்திணையை அஃறிணையாகக் கூறுவதும் திணை வழுவமைதி ஆகும். மகிழ்ச்சி, உயர்வு, மிகுதி, சிறப்பு, சினம், இழிவு முதலிய காரணங்களால் திணை வழுவமைதி ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

**உயர்வு**

நத்தையாரே நத்தையாரே எங்கே போறீங்க? (அஃறிணை, உயர்திணை ஆயிற்று)

**இழிவு**

மூடனோடு நாயும் வந்தது. (உயர்திணை, அஃறிணை ஆயிற்று)

**பால் வழுவமைதி**

ஆண்பாலைப் பெண்பாலாகவும் பெண்பாலை ஆண்பாலாகவும் கூறுவது பால் வழுவமைதி. மகிழ்ச்சி, உயர்வு, சிறப்பு, சினம், இழிவு முதலிய காரணங்களால் பால் வழுவமைதி ஏற்றுக்கொள்ளப்படுகிறது.

**மகிழ்ச்சி**

"இதோ, என் அப்பனுக்குத் தங்க வளையல்" (பெண்பாலுக்கு ஆண்பால் )

**சிறப்பு**

"தாய்க்குத் தாயாகிய இறைவன்" (ஆண்பாலுக்குப் பெண்பால்)

**இடவழுமைதி**

தன்மை, முன்னிலை, படர்க்கை ஆகிய மூவிடத்திற்குரிய சொற்கள் இடம் மாறி அமைந்தாலும் ஏற்றுக் கொள்ளப்பட்டால், அஃது இடவழுவமைதி ஆகிறது. சூழல் காரணமாக இடவழுவை ஏற்றுக் கொள்வது, இடவழுவமைதி ஆகும்.

"வீரனின் தாய் அழுவேனா?"

இத்தொடரில், வீரனின் தாய் என்ற படர்க்கைப் பெயர், தன்மை எழுவாய்ப் பொருளில் வந்து இடவழுவமைதி ஆயிற்று.

"ஐயாவுக்கு எப்போதுமே வெற்றிதான்"

ஐயாவுக்கு எப்போதுமே போட்டியில் வெற்றிதான் (வழுவமைதி) (ஒருவன் தன்னைத் தானே படர்க்கை இடத்தில் வைத்துக் கூறுவதால்)

**கால வழுவமைதி**

முக்காலத்தினுள் ஒன்று மற்றொன்றாக மயங்கி வந்தாலும் ஏற்றுக்கொள்ளப்படுமாயின் அது கால வழுவமைதி ஆகும். விரைவு, மிகுதி, தெளிவு, இயல்பு ஆகிய காரணங்களால் முக்காலம் ஒன்று மற்றொன்றாக மயங்கிவரும்.

ஒருவர் தன்னை அழைக்கும்போது, தயாராக இல்லையாயினும் உடனே விடையளிக்கும் பொருட்டு, "இதோ வந்துவிட்டேன்" என்று கூறுவது காலவழுவமைதி ஆகும். இத்தொடரில், எதிர்கால நிகழ்வை இறந்த காலத்தில் சொல்வதாகும். இத்தொடர், விரைவு காரணமாக எழுந்தது.

**மரபு வழுவமைதி**

காலம் காலமாகப் பின்பற்றப்படும் மரபு மீறப்பட்டாலும் அஃது ஏற்றுக்கொள்ளப்படுமாயின் மரபு வழுவமைதியாக ஆகும்.

ஒருவன் தான் வரைந்த ஓவியத்தைக்காட்டி,"இந்த ஓவியம் நான் வரைந்தது" என்று கூறுகிறான். இத்தொடரில் மரபு வழு உள்ளது. இருப்பினும், மரபு வழுவமைதியாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது.

இந்த ஓவியம் என்னால் வரையப்பட்டது என்பது வழாநிலை. அவ்வாறின்றி, இத்தொடரில் செயப்படுபொருளாகிய ஓவியமே வரைதல் என்னும் செயலைச் செய்ததுபோலப் பேச்சு வழக்கில் வருகிறது. ஆகையால் மரபு வழு, மரபு வழுவமைதியானது.

### 3.7 தொகுப்புரை

தொடர்கள் எவ்வாறு உருவாகின்றன, அவை அமைவதற்குரிய இன்றியமையாத உறுப்புகள், பலவகைத் தொடர்களும் அவற்றின் பயன்பாடுகளும் குறித்து, இந்தப் பாடத்தில் விரிவாக அறிந்துகொண்டீர்கள். இவற்றை உங்களுடைய எழுத்திலும் பேச்சிலும் பிழையில்லாமல் பயன்படுத்த வேண்டும். நாம் மற்றவரிடம் பேசும்போது, தொடர்களாகத்தாம் பேசுகிறோம். எழுத்துகளாவோ சொற்களாகவோ பேசுவதில்லை. ஆகையால், ஒருவர் பேசும் தொடரைக் கொண்டு, அதன் வகைப்பாட்டை உங்களால் பிரித்தறிய இயலும். ஒரு தொடரை மற்றொரு தொடராக மாற்றவும் நீங்கள் அறிந்து கொண்டீர்கள். ஆகவே, தமிழ் கற்றல் – கற்பித்தலில் பிழைநேராமல் காத்துக்கொள்ளலாம். சிறு சிறு உரைப்பகுதிகளையோ கட்டுரைகளையோ நீங்களே உருவாக்கும்போது, தொடர்களின் இன்றியமையாத கூறுகளை நினைவிற்கொண்டு செம்மையாகப் பயன்படுத்துங்கள். பன்முறை பயிற்சி, உங்கள் பேச்சிலும் எழுத்திலும் பிழை ஏற்படுவதைத் தவிர்க்கும்.

## பயிற்சிகள்

**அ) கோடிட்ட இடத்தில் பொருத்தமான சொல்லை நிரப்புக.**

9. ஒரு தொடர் எழுவதற்குக் காரணமாக அமைவது________ (பயனிலை/ எழுவாய்)
10. 'உயரமான இமயமலை'– இத்தொடரில் ________இல்லை. (எழுவாய்/ பயனிலை)
11. 'நீடுழி வாழ்க' என்பது ________தொடர். (வாழ்த்துதல்/ வேண்டுகோள்)
12. 'ஆசிரியர் கற்பித்தார்' – இது ________தொடராகும். (தன்வினை/ பிறவினை)
13. 'பாடம் படி' – இத்தொடரில் ________இல்லை. (எழுவாய்/ செயப்படுபொருள்)

**ஆ) பின்வரும் சொற்றொடர்களில் பொருத்தமான எழுவாய்/ பயனிலைச் சொற்களை இணைத்து முழுமையாக்குக.**

(எ.கா. )

அழகான தாமரை மலர்.
அழகான தாமரை மலர் பூத்திருந்தது.

1. மின்னுக்குப் பின்னெல்லாம் மழை.
2. கடிதம் எழுது.
3. வயலில் ஆடுகள்.
4. திரைப்படம் பார்த்தோம்.
5. பானை வனைந்தான்.

**இ) பொருத்துக.**

| **தொடர்** | **தொடர்வகை** |
|---|---|
| நான் கற்றேன் | – வினாத்தொடர் |
| இரவில் நெடுநேரம் கண்விழிக்காதே | – உணர்ச்சித்தொடர் |
| இந்தப் புத்தகம் என்ன விலை? | – தன்வினைத்தொடர் |
| பந்து உருட்டப்பட்டது | – கட்டளைத்தொடர் |
| என்னே! தாஜ்மகாலின் அழகு! | – பிறவினைத்தொடர் |

**ஈ) பின்வரும் படத்திற்குப் பொருத்தமாக வினாத்தொடர்கள் உருவாக்குக.**



1. ____________________________________________
2. ____________________________________________
3. ____________________________________________
4. ____________________________________________
5. ____________________________________________

**உ) பின்வரும் தொடர்களை அடைப்புக்குறிக்குள் உள்ளவாறு மாற்றுக.**

1. வள்ளி கட்டுரை எழுதினாள். (செயப்பாட்டுவினைத் தொடர்)
2. இளமையில் கல். (செய்தித்தொடர்)
3. மழை பெய்யாததால் பயிர்கள் விளையவில்லை. (உடன்பாட்டுத் தொடர்)
4. "நான் நாளை வருவேன்" என்று முகிலன் கூறினான். (அயற்கூற்றுத் தொடர்)
5. கண்ணன் வேலை செய்கிறான். (வினாத்தொடர்)

**ஊ) பின்வரும் உரையாடலில் இடம்பெற்றுள்ள தொடர்களைக் கண்டறிந்து வகைப்படுத்துக.**

**பயணி** : மெரினா கடற்கரை செல்ல ஒரு சீட்டு கொடுங்க.

**நடத்துநர்** : இந்தப் பேருந்து மெரினா செல்லாது. அண்ணாசாலை வரைதான் செல்லும்.

**பயணி** : அண்ணாசாலையிலிருந்து நான் மெரினாவுக்கு எப்படிச் செல்ல வேண்டும்?

**நடத்துநர்** : நீங்கள் இறங்கும் நிலையத்தில் 27H வரும். அதில் ஏறிச் செல்லுங்கள்.

**எ) ஓரிரு தொடரில் விடை கூறுக.**

1. ஒரு தொடரில் இடம்பெறவேண்டிய இன்றியமையாத உறுப்புகள் யாவை?
2. 'நான் சிரித்தேன்' – இத்தொடரைச் செயப்பாட்டு வினைத் தொடராக மாற்ற இயலுமா? இயலாதெனில் காரணம் கூறுக.
3. கண்ணன் மிதிவண்டி ஓட்டினான் – இத்தொடரைப் பொருள் மாறாமல் எதிர்மறைத் தொடராக்குக.
4. கலைவாணி பாடல் பாடினாள்.– இத்தொடரிலுள்ள எழுவாய், செயப்படுபொருள், பயனிலை மூன்றிலும் வினா எழுத்தைப் பயன்படுத்தி, வினாத்தொடர்கள் உருவாக்குக.
5. பின்வருவனவற்றுள் எது பிழையான தொடர்?

    அ) பறவைகள் பறந்து சென்றன.

    ஆ) பறவைகள் பறந்து சென்றது.
6. ஓர் எழுவாய், ஒரு பயனிலையைக் கொண்டு முடிவது எத்தகைய தொடர்?
7. ஓர் எழுவாய், பல பயனிலையைக் கொண்டு முடிவதற்கு எடுத்துக்காட்டு தருக.
8. தோன்றா எழுவாய்க்கு இரண்டு எடுத்துக்காட்டு தருக.
9. நேர்கூற்றுத் தொடர் ஒன்றை உருவாக்கி, அதனை அயற்கூற்றாக மாற்றிக்காட்டுக.
10. நீங்கள் அறிந்துகொண்ட தொடர்வகைகள் இடம்பெறுமாறு சிறு உரைப்பகுதி ஒன்று எழுதுக.

## விடைகள்

**அ) பொருத்தமான சொல்.**

1. எழுவாய் 2. பயனிலை 3. வாழ்த்துதல் 4. பிறவினை 5. எழுவாய்

**ஆ) பொருத்தமான எழுவாய்/ பயனிலை.**

1. மின்னுக்குப் பின்னெல்லாம் மழை வரும்
2. நீ கடிதம் எழுது
3. வயலில் ஆடுகள் மேய்ந்தன
4. நாங்கள் திரைப்படம் பார்த்தோம்
5. குயவன் பானை வனைந்தான்

**இ) பொருத்துக.**

| தொடர் | தொடர்வகை |
|---|---|
| நான் கற்றேன் | தன்வினைத்தொடர் |
| இரவில் நெடுநேரம் கண்விழிக்காதே | கட்டளைத்தொடர் |
| இந்தப் புத்தகம் என்ன விலை? | வினாத்தொடர் |
| பந்து உருட்டப்பட்டது | பிறவினைத்தொடர் |
| என்னே! தாஜ்மகாலின் அழகு! | உணர்ச்சித்தொடர் |

**ஈ) வினாத்தொடர் உருவாக்குதல்**

1. படத்திலுள்ள நிகழ்வு எங்கு நடைபெறுகிறது?
2. படத்திலுள்ள மரம் எந்த வடிவத்தில் உள்ளது?
3. படத்தில் எத்தனை சறுக்கு மரங்கள் உள்ளன?
4. சறுக்கு மரங்கள் ஒரே வண்ணத்தில் உள்ளனவா?
5. சிறுவன் அணிந்திருக்கும் தொப்பியின் நிறம் என்ன?

**உ) தொடர் மாற்றம்**

| | | |
|---|---|---|
| 1. | செயப்பாட்டுவினைத் தொடர் | கட்டுரை வள்ளியால் எழுதப்பட்டது. |
| 2. | செய்தித்தொடர் | இளமையில் கற்கவேண்டும். |
| 3. | உடன்பாட்டுத் தொடர் | மழை பெய்ததால் பயிர்கள் விளைந்தன. |
| 4. | அயற்கூற்றுத் தொடர் | தான் நாளை வருவதாக முகிலன் கூறினான். |
| 5. | வினாத்தொடர் | கண்ணன் வேலை செய்கிறானா? |

**ஊ) உரையாடலில் இடம்பெற்றுள்ள தொடர்கள்**

| | |
|---|---|
| மெரினா கடற்கரை செல்ல ஒரு சீட்டு கொடுங்க. | விழைவுத்தொடர் |
| இந்தப் பேருந்து மெரினா செல்லாது. | எதிர்மறைத்தொடர் |
| அண்ணாசாலை வரைதான் செல்லும். | உடன்பாட்டுத்தொடர் |
| அண்ணாசலையிலிருந்து நான் மெரினாவுக்கு எப்படிச் செல்லவேண்டும்? | வினாத்தொடர் |
| நீங்கள் இறங்கும் நிலையத்தில் 27H பேருந்து வரும். அதில் ஏறிச் செல்லுங்கள். | செய்தித்தொடர் |

**எ) ஓரிரு தொடரில் விடை கூறுக.**

1. எழுவாய், செயப்படுபொருள், பயனிலை
2. செயப்பாட்டுவினைத் தொடராக மாற்ற இயலாது. ஏனெனில், இத்தொடரில் செயப்படுபொருள் இல்லை. இது, செயப்படுபொருள் குன்றிய வினைத்தொடராகும்.
3. கண்ணன் மிதிவண்டி ஓட்டாமலில்லை.
4. அ) கலைவாணியா பாடல் பாடினாள்?

   ஆ) கலைவாணி பாடலா பாடினாள்?

   இ) கலைவாணி பாடல் பாடினாளா?
5. ஆ) பறவைகள் பறந்து சென்றது – இத்தொடரில் பிழை உள்ளது. ஏனெனில் எழுவாய்க்கேற்ற வினைமுற்று இல்லை. 'பறவைகள்' என்ற பன்மை எழுவாய்க்குச் 'சென்றன' என்னும் (பலவின்பால்) பயனிலையே சரியானது.
6. தனிநிலைத் தொடர்.

7. உழவன் விடியற்காலையில் எழுந்தான்; காளைகளை ஏரில் பூட்டினான்; வயலுக்குச் சென்றான்.

(வேறு தொடர்களைப் பொருத்தமாக எழுதியிருந்தாலும் ஏற்றுக்கொள்ளலாம்.)

8. தோன்றா எழுவாய்

அ) படம் வரை

ஆ) நடனம் ஆடினாள்

9. நேர்கூற்றுத் தொடர்– "கவின், மாம்பழம் சுவையாக உள்ளதா?" என அம்மா கேட்டாள்.

அயற்கூற்றுத் தொடர் – அம்மா, கவினிடம் மாம்பழம் சுவையாக உள்ளதா என்று கேட்டாள்.

10. நீங்கள் அறிந்துகொண்ட தொடர்வகைகள் இடம்பெறுமாறு சிறு உரையாடல் ஒன்று எழுதுக.

(கற்பவர் எண்ணத்திற்கேற்ப, எந்த உரையாடல் வேண்டுமானாலும் அமையலாம். இங்கு மாதிரிக்காக ஓர் உரையாடல் தரப்படுகிறது.)

மாணவர்: ஐயா, எனக்கு மொழி வரலாறு நூல் வேண்டும்.

நூலகர்: தருகிறேன். யாருடைய நூல் வேண்டும்?

மாணவர்: மு. வரதராசனார் எழுதிய நூலைத் தாருங்கள்.

நூலகர்: இதோ தருகிறேன். மிகவும் எளிய நடையில் உள்ள நூல் இது.

மாணவர்: ஆம், ஐயா. என் ஆசிரியரும் அப்படித்தான் கூறினார்.

## பாடம் – 4

## புணர்ச்சிகள்

### 4.0 முன்னுரை

ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட சொற்கள் சேர்ந்து வருவதனைப் புணர்ச்சி என்கிறோம். நீங்கள் சிறுவகுப்பில் சேர்த்தெழுது, பிரித்தெழுது முதலிய பயிற்சிகளைச் செய்திருப்பீர்கள். அவைதாம் புணர்ச்சி என அப்போது உங்களுக்கு யாரும் சொல்லியிருக்க வாய்ப்பில்லை. அவற்றை, இப்போது நினைவுகூருங்கள்.

செய்யுட்பகுதிகளில் பிரித்தெழுத வேண்டிய சொற்கள் உண்டு. உரைநடையில் பெரும்பாலும் அவ்வாறு வருவதில்லை. எளிய சொற்றொடர்களே கையாளப்படுகின்றன. செய்யுள் அடிகள் யாப்பின் அடிப்படையில் அசை, சீர், தளை என அமைந்துள்ளன. அதனால், அவை புணர்ச்சி விதியின்படி அமைகின்றன. ஆயினும், பாடலடிகளிலுள்ள சில சொற்களைப் பொருள் விளங்கும்படி பிரித்துப் படித்தால், எளிதாகப் புரிந்துகொள்ள முடியும். அதேபோன்று, சில சொற்களைச் சேர்த்தே படிக்கவேண்டும். அவற்றைப் பிரித்தால் பொருள் மாறுபடும். அவ்வாறு பிரித்துப் படிப்பதற்கும் சேர்த்துப் படிப்பதற்கும் புணர்ச்சி தேவைப்படுகிறது.

"…. பாரி ஒருவனு மல்லன்

மாரியும் உண்டீண் டுலகுபுரப் பதுவே"

புறநானூற்றில் இடம்பெற்றுள்ள இப்பாடல் அடிகளை எளிதாகப் பொருள் புரியும்படி,

"…..பாரி ஒருவனும் அல்லன்

மாரியும் உண்டு ஈண்டு உலகு புரப்பதுவே"

எனப் பிரித்துப் படித்தால், பொருள் நன்கு விளங்குகிறது. இங்கு நாம் பிரித்துள்ள சொற்கள் புணர்ச்சியின் அடிப்படையில் சேர்ந்துள்ளன. இவ்வாறு ஒரு சொல் மற்றொரு சொல்லுடன் சேர்ந்தும் பிரிந்தும் நாம் காணும் சொற்களைப் புணர்ச்சி என்கிறோம்.

### 4.1 ஒருமை, பன்மை

ஒரு பொருளின் எண்ணிக்கையைக் குறிப்பிடுவதற்கு ஒருமையும் பன்மையும் பயன்படுகின்றன. ஒரு பொருளை மட்டும் குறிப்பது, ஒருமை. ஒன்றிற்கு மேற்பட்ட பொருளைக் குறிப்பது, பன்மை. ஒருமைச் சொற்களுடன் விகுதி சேர்த்துப் பன்மையாக்கலாம். நூல் என்பது ஒருமையானால், நூல்கள் என்பது பன்மையாகும். இவ்வாறு ஒருமையைப் பன்மையாக்க சில விதிமுறைகள் உள்ளன. பின்வரும் எடுத்துக்காட்டுகள்வழி புரிந்துகொள்ளலாம்.

1. பொதுவாக ஒருமைச் சொற்கள் பன்மையாகும்போது "கள்" விகுதி ஏற்கும்.

கலை + கள் = கலைகள்

மாடு + கள் = மாடுகள்

ஆறு + கள் = ஆறுகள்

2. 'ம்' என்கிற எழுத்துடன் 'கள்' சேரும்போது 'ங்கள்' ஆக மாறும்.

படம் + கள் = படங்கள் ('ம்' முன் கள் சேர–ங்கள் ஆகியது)

சக்கரம் + கள் = சக்கரங்கள்

வண்ணம் + கள் = வண்ணங்கள்

3. 'ல்' என்கிற எழுத்துடன் 'கள்' சேரும் போது 'ற்கள்' ஆக மாறும்.

பல் + கள் = பற்கள் ('ல்' முன் கள் சேரும்போது 'ல்' – 'ற்' ஆக மாறியது)

கல் + கள் = கற்கள்

சொல் + கள் = சொற்கள்

4. 'ள்' என்கிற எழுத்துடன் 'கள்' சேரும் போது 'ட்கள் ' ஆக மாறும்.

முள் + 'கள்' = முட்கள் ('ள்' முன் கள் சேரும்போது 'ள்' – 'ட்' ஆக மாறியது)

ஆள் + கள் = ஆட்கள்

புள் + கள் = புட்கள்

5. ஓரெழுத்து ஒருமொழியுடன் 'கள்' சேரும் போது 'க்' தோன்றும்.

பூ + கள் = பூக்கள்

ஈ + கள் = ஈக்கள்

பா + கள் = பாக்கள்

6. நெடில் எழுத்தில் முடியும் சொல்லுடன் 'கள்' சேரும் போது 'க்' தோன்றும்.

புறா + கள் = புறாக்கள்

விழா + கள் = விழாக்கள்

வெண்பா + கள்= வெண்பாக்கள்

### 4.1.1 தொடர்களில் ஒருமை, பன்மை மயக்கம்

தனிச்சொற்களில் ஒருமை, பன்மை எவ்வாறு வரும் என்பதை அறிந்தோம். தொடர்களிலும் ஒருமை, பன்மைச் சொற்கள் இடம்பெறும்போது, அவற்றைப் பிழையின்றி எழுதவேண்டும். ஒருமையில் தொடங்கும் சொல்லுக்கு ஒருமை முடிபு தரப்பட வேண்டும். அதேபோல் பன்மையில் தொடங்கும் சொல்லுக்குப் பன்மை முடிபு தரப்பட வேண்டும்.

சிலருடைய பேச்சில் இத்தகைய ஒருமை, பன்மைப் பிழைகளை உங்களால் கண்டறிய இயலும். எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? நாம் பேசும்போது, எழுத்துத் தமிழில் பேசுவதில்லை. பேச்சுத்தமிழில்தான் பேசுகிறோம். இஃது எளிமை கருதி நிகழ்கிறது. இப்படிப் பேசுவதால், இதில் ஒருமை, பன்மைப் பிழை ஏற்படுவதாகக் கூறமுடியாது. பேச்சுத் தமிழாக இருந்தாலும் ஒருமை, பன்மை சரியாக இருக்கவேண்டும்.

"அங்க நாலுபேரு பேசிக்கிட்டு இருக்காங்க" என்றுதான் பேச்சுத்தமிழிலும் ஒருமை, பன்மைப் பிழையின்றிப் பேசுகிறோம்.

"அங்க நாலுபேர்கள் பேசிக்கிட்டு இருக்கான்" என்று நாம் பேச்சிலும்கூடப் பிழையாகக் கூறுவதில்லை.

நெல்லிக்காய் விற்கும் பெண்ணொருத்தி, "பத்து நெல்லிக்கா அஞ்சு ரூபா" என்று கூவி விற்கிறாள். இந்தத் தொடரில் பிழை உள்ளதா? பிழை இல்லை. அவள் இலக்கணம் படிக்கவில்லை. ஆனால், சரியாகத்தான் சொல்கிறாள். எப்படி?

ஒன்றிற்கு மேற்பட்ட பொருள்களைக் குறிக்கும்போது, பன்மைச் சொல்லாக்க விகுதிகள் சேர்க்கவேண்டும் என்றும் பார்த்தோம். இங்கு, ஒரே ஒரு நெல்லிக்காயைக் குறிக்க, நெல்லிக்காய் என்று கூறினால் போதுமானது. ஒன்றிற்கு மேற்பட்டு இருக்கும்போது, நெல்லிக்காய்கள் என்று கூற வேண்டும். சரியாகத்தான் புரிந்துகொண்டுள்ளோம். ஆனால், பத்து நெல்லிக்காய் – இது சரியா, தவறா? சரிதான்.

ஒரு பொருளுக்குமுன் எண்ணுப்பெயர் அடையாக வரும்போது, ஒன்றிற்கு மேற்பட்ட எண்ணிக்கையைக் குறித்தால், அச்சொல்லைப் பன்மையாக்க வேண்டுவதில்லை.

| | | |
|---|---|---|
| இரண்டு மலர்கள் | – | தவறு |
| இரு மலர் | – | சரி |
| பத்துப் பாட்டுகள் | – | தவறு |
| பத்துப்பாட்டு | – | சரி |

இக்காலத் தமிழ் மரபில், தேவையில்லாமல் 'கள்' விகுதி சேர்த்தே எழுதவும் பேசவும் செய்கின்றனர். முத்தமிழை, 'முத்தமிழ்கள்' என்று நாம் கூறுவதில்லை. எட்டுத்தொகையை 'எட்டுத்தொகைகள்' என்றா கூறுகிறோம்? ஆனால், சிலர், இதனைப் புரிந்துகொள்ளாமல் 'மூவேந்தர்கள்','அறுசுவைகள்', என்றே பேசுகின்றனர். எழுதவும் செய்கின்றனர். இத்தகைய பிழைகளைக் கண்டறிந்து திருத்திக் கொள்ளலாம்.

**அறிவோம்! தெளிவோம்!**

**முக்கனி, முக்கனிகள் – எது சரி?**

**முக்கனி** என்பதே சரி.

கனி – கனிகள், சுவை – சுவைகள் இவை சரியான ஒருமை, பன்மைச் சொற்கள். ஆனால், முக்கனி என்பதே ஒன்றிற்கு மேற்பட்ட கனியைக் குறிப்பதால், இதனுடன் 'கள்' விகுதி சேர்த்து 'முக்கனிகள்' என்று பேசுவதும் எழுதுவதும் தவறாகும். (முக்கனி (மூன்று கனி) – மா, பலா, வாழை)

ஒருமை – பன்மை குறித்த புரிதல் எல்லாருக்கும் உண்டு. ஆனாலும் ஏன் இதில் தவறு வருகிறது? ஒரு தொடரில் ஒன்றுக்கும் மேற்பட்ட பெயர்ச்சொற்கள் இடம்பெறும்போது இந்த மயக்கம் ஏற்படக்கூடும். எடுத்துக்காட்டாக,

விஷக்காய்ச்சல் நாகை, கடலூர் ஆகிய மாவட்டங்களில் இருக்கும் மக்களிடையே பரவி வருகிறது.

இந்தத் தொடரில் விஷக்காய்ச்சல், மாவட்டங்கள், மக்கள், ஆகிய அனைத்துமே பெயர்ச்சொற்கள்தாம். இவற்றுள் விஷக்காய்ச்சல் என்பது ஒருமை. அடுத்த இரு சொல்லும் பன்மை. எனவே, பரவுதல் என்னும் வினைமுற்றுக்கு ஒருமையைப் பயன்படுத்துவதா, பன்மையைப் பயன்படுத்துவதா என்னும் குழப்பம் ஏற்படலாம்.

இங்கு நாம் நினைவிற்கொள்ள வேண்டியது எத்தனை பெயர்ச்சொற்கள் இருந்தாலும் எழுவாய் என்பது ஒன்றுதான். அதாவது, குறிப்பிட்ட வினையைச் செய்வது யார் அல்லது எது என்பதுதான் எழுவாய். இங்கே பரவுவது எது? மாவட்டங்களா, மக்களா, காய்ச்சலா? எனக் கேட்டால் காய்ச்சல் என்பது தெளிவாகத் தெரிகிறது. இஃது ஒருமை. எனவே வினைமுற்றிலும் ஒருமையைப் பயன்படுத்த வேண்டும்.

எந்தத் தொடராக இருந்தாலும் அதில் உள்ள செயலைச் (வினையை) செய்வது யார் அல்லது எது என்று பார்க்க வேண்டும். கொடுக்கப்படுகிறது / கொடுக்கப்படுகிறார் என்று வந்தால் எதற்கு / யாருக்கு என்பதைப் பார்க்க வேண்டும். அது ஒருமையா, பன்மையா எனப் பார்க்க வேண்டும். அதற்கேற்ப வினைமுற்றில் ஒருமையை அல்லது பன்மையைப் பயன்படுத்த வேண்டும்.

திட்டங்கள் தீட்டப்படுகின்றன.

விமானம் தரையிறங்குகிறது.

வண்டிகள் வரிசையாக நிற்கின்றன.

ஆசிரியர் பாடம் நடத்துகிறார்.

தந்தை தன் மகனையும் மகளையும் அழைத்தார் (இதில் அழைத்தல் என்னும் வினையைச் செய்பவர் தந்தை. இது ஒருமைச் சொல். எனவே வினைமுற்றில் அழைத்தார் என்று வருகிறது.)

கிராம வளர்ச்சிக்கு ஆண்களும் பெண்களுமாகச் சேர்ந்து பாடுபட்டனர். (பாடுபடுதல் என்னும் வினையைச் செய்பவர்கள் ஆண்களும் பெண்களுமாகப் பலர். (பலர் = பன்மை) எனவே வினைமுற்றில் பாடுபட்டனர் எனப் பன்மை முடிபு தரப்படுகிறது.)

விளையாட்டுத் திடல் பணியாளர்களால் தூய்மை செய்யப்பட்டது (இங்கு எழுவாய் பணியாளர்கள் அல்லர். விளையாட்டுத் திடல்தான். அஃது ஒருமை. எனவே வினைமுற்றிலும் ஒருமை வருகிறது).

மேற்கண்ட எடுத்துக்காட்டுகளைக் கவனமாகப் பார்க்கும்போது ஒருமை – பன்மை பயன்பாட்டின் இன்றியமையாத சில வகைகளை அறிந்துகொள்ள இயலும். அவை;

**1. ஒவ்வொரு என்று வந்தால் அதன் பிறகு ஒருமைதான் வரவேண்டும்.**

எடுத்துக்காட்டு:

ஒவ்வொரு வீட்டிலும்

ஒவ்வொரு மாநிலத்திலும்,

என எழுதுவதே சரி. மாறாக ஒவ்வொரு வீடுகளிலும் / மாநிலங்களும் என எழுதுவது தவறு.

**2. எல்லா என்று வந்தால் பன்மை வர வேண்டும்.**

எடுத்துக்காட்டு:

எல்லா உறுப்பினர்களும்,

எல்லா வீடுகளுக்கும்,

என எழுத வேண்டும். மாறாக எல்லா உறுப்பினரும் / வீட்டுக்கும் என எழுதுவது தவறு.

**3. எந்த என்று வந்தால் அதன் பிறகு ஒருமை வர வேண்டும்**

எடுத்துக்காட்டு:

எந்தப் புத்தகமும் (புத்தகங்களும் என்பது தவறு)

எந்த நாட்டிலும் (நாடுகளிலும் என்பது தவறு)

**பிழை வரும் இடங்கள்**

உள்ளது, இருக்கிறது என்னும் சொற்களின் ஒருமை – பன்மை வடிவங்கள் சில சமயங்களில் சரியாகப் பயன்படுத்தப்படுவதில்லை.

நிறைய பிரச்சினைகள் உள்ளது.

அங்கு கிழிந்த துணிகள் குவிந்திருக்கிறது.

இவ்விரு எடுத்துக்காட்டின் வினைமுடிபுகள் உள்ளன, இருக்கின்றன எனப் பன்மை பயன்படுத்தப்பட வேண்டும். ஏனெனில் பிரச்சினைகள், துணிகள் ஆகியவை பன்மை என்பதைக் கவனியுங்கள்.

புத்தகம், மேசை இரண்டும் அங்கே உள்ளன.

இங்கு, எழுவாய் (புத்தகம், மேசை) இரண்டு இருப்பதால், பன்மை வந்துவிடுகிறது. எனவே,

புத்தகம், மேசை ஆகியவை அங்கே உள்ளன என எழுத வேண்டும்.

### 4.1.2 தொடர்களில் ஒருமை, பன்மை முடிபுகள்

மாடு புல்லை மேய்கிறது. – ஒருமைக்கேற்ற ஒருமை முடிபு

மாடுகள் புல்லை மேய்கின்றன. – பன்மைக்கேற்ற பன்மை முடிபு

மேலே காட்டப்பட்ட தொடர்கள் சரியாக உள்ளன. அவ்வாறின்றி, 'மாடு புல்லை மேய்கின்றன' என்பதும் 'மாடுகள் புல்லை மேய்கிறது என்பதும் தவறான தொடரமைப்புகள் ஆகும். இங்கு நாம் கவனிக்க வேண்டிய ஒன்று, எழுவாய் (மாடு) ஒருமையில் இருப்பின், அதற்கேற்ற வினைமுடிபும் (மேய்கிறது) ஒருமையில் இருக்கவேண்டும். எழுவாய் (மாடுகள்) பன்மையில் இருப்பின் அவற்றிற்கேற்ற வினைமுடிபும் (மேய்கின்றன) பன்மையில் இருக்கவேண்டும் என்பதே. மேலும் சில எடுத்துக்காட்டுகள்.

கண்ணன் பாடம் படிக்கிறான்.

கீரையில் இரும்புச்சத்து உள்ளது.

மாணவர்கள் பள்ளிக்குச் செல்கிறார்கள்.

வெற்றி பெற்றவர்கள் பரிசு பெற்று மகிழ்ந்தார்கள்.

இவ்வாறு, ஒவ்வொரு தொடரிலும் ஒருமை, பன்மை அறிந்து பிழையின்றி எழுதிப் பழகவேண்டும்.

## 4.2 புணர்ச்சி – நிலைமொழி, வருமொழி

தமிழ் + மொழி = தமிழ்மொழி

மேற்கண்ட எடுத்துக்காட்டில், முதலில் உள்ள சொல் 'தமிழ்'. இது நிலையாக உள்ள சொல். அதனால், இதனை நிலைமொழி என்கிறோம். அடுத்துவரும் சொல் 'மொழி'. இச்சொல், தமிழ் என்னும் சொல்லைத் தொடர்ந்து வருகிறது. ஆகவே, இதனை வருமொழி என்கிறோம்.

மேலும், சில எடுத்துக்காட்டுகள்

| நிலைமொழி | வருமொழி | சொற்றொடர் |
|---|---|---|
| பொன் | மலர் | பொன்மலர் |
| வாழை | மரம் | வாழைமரம் |
| கண் | மணி | கண்மணி |

**குறிப்பு**

சேர்த்தல், இணைத்தல், புணர்த்தல் என்பன ஒருபொருள் தரும் சொற்கள். இவையாவும் புணர்தல் என்னும் பொருளையே தருகின்றன.

### 4.2.1 இயல்புப் புணர்ச்சி

பொன் + வளை = பொன்வளை.

மேலே கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டை நன்கு உற்றுக் கவனியுங்கள். நிலைமொழியும் வருமொழியும் புணரும்போது, ஏதேனும் மாற்றம் ஏற்பட்டுள்ளதா? இல்லை. இவ்வாறு, நிலைமொழியும் வருமொழியும் தம்முள் எந்த மாற்றமும் இன்றி, இயல்பாகப் புணர்ந்தால், அதனை இயல்புப் புணர்ச்சி என்கிறோம். பின்வரும் எடுத்துக்காட்டையும் கவனியுங்கள்.

தமிழ் + அன்னை = தமிழன்னை

மேலே நீங்கள் கண்ட எடுத்துக்காட்டில் இரு சொல் புணரும்போது, மாற்றம் ஏற்பட்டுள்ளதா? இல்லை. இங்கும் இயல்பாகத்தான் புணர்ந்துள்ளது. ஏனெனில், நிலைமொழி இறுதியிலுள்ள மெய்யெழுத்து, 'ழ்'. வருமொழி முதலில் உள்ள உயிரெழுத்து, 'அ'. உயிரும் மெய்யும் சேர்ந்து வருவதும் இயல்பான புணர்ச்சியே. 'உடல்மேல் உயிர்வந் தொன்றுதல் இயல்பே' என்னும் நன்னூல் விதியை நீங்கள் அறிந்திருப்பீர்கள். ஆகவே, மேலே கூறப்பட்ட எடுத்துக்காட்டுகள் இரண்டும் இயல்புப் புணர்ச்சிக்கு உரியனவாகும்.

### 4.2.2 விகாரப் புணர்ச்சி

திரு + குறள் = திருக்குறள்

மண் + குடம் = மட்குடம்

மரம் + வேர் = மரவேர்

மேலே கொடுக்கப்பட்ட எடுத்துக்காட்டுகளைச் சொல்லிப் பாருங்கள். என்னென்ன மாற்றங்கள் ஏற்பட்டுள்ளன?

முதல் எடுத்துக்காட்டில், நிலைமொழியும் வருமொழியும் புணரும்போது, புதிதாக ஓரெழுத்து தோன்றியுள்ளது. 'திருக்குறள்'. இது, 'தோன்றல்' விகாரம்.

இரண்டாவது எடுத்துக்காட்டில், நிலைமொழியின் இறுதியிலுள்ள எழுத்து, வேறோர் எழுத்தாகத் திரிந்துள்ளது. 'மட்குடம்'. இது, 'திரிதல்' விகாரம்.

மூன்றாவதாக உள்ள எடுத்துக்காட்டில், நிலைமொழியின் இறுதியிலுள்ள எழுத்து, மறைந்துள்ளது. 'மர(ம்)வேர். இது, 'மறைதல் அல்லது கெடுதல்' விகாரம்.

இவ்வாறு மாறுபட்டு வரும் புணர்ச்சி வடிவங்களை, விகாரப் புணர்ச்சி என்கிறோம்.

நாம் நாள்தோறும் பேசும்போதும் எழுதும்போதும் நம்மையறியாமலே, பல்வேறு புணர்ச்சி வடிவங்களைப் பயன்படுத்திக்கொண்டுதான் இருக்கிறோம். அவற்றைத் தவறாகப் பயன்படுத்தாமல் இருப்பதற்காகவே புணர்ச்சி விதிகள் உள்ளன. அவற்றில் நம் அன்றாட வாழ்வில் அடிக்கடி பயன்படுத்தும் சொற்றொடர்ப் புணர்ச்சிகளை அறிந்துகொள்வோம்.

### 4.3 உயிரீறு, மெய்யீறு

இரு சொல் இணைந்தால், புணர்ச்சி என்று பார்த்தோம். 'அணி' என்னும் சொல்லை ஒலித்துப் பாருங்கள். அச்சொல்லில் முதலில் உள்ள எழுத்து, 'அ'. ஈற்றில் (இறுதியில்) உள்ள எழுத்து, 'ணி'. அதாவது, ண் + இ. எனவே, அணி என்னும் சொல், உயிரெழுத்தை முதலாகக் கொண்டுள்ளது. அதன் ஈற்றெழுத்தும் உயிரெழுத்தில் முடிகிறது. ஆகையால், 'அணி' என்னும் சொல்லை உயிர்முதல் உயிர்ஈறு எனக் குறிப்பிடுவோம்.

'பொன்' என்னும் சொல்லையும் இவ்வாறே பிரித்தோமானால், முதலில் நிற்கும் 'பொ' என்னும் எழுத்து, ப் + ஒ என ஈரெழுத்தால் ஆனது. ஆகவே, ஒலிக்கும்போது முதலில் வரும் எழுத்து 'ப்'. அச்சொல்லின் இறுதியில் வரும் எழுத்து, 'ன்' என்னும் மெய்யெழுத்தால் ஆனது. எனவே, 'பொன்' என்னும் சொல்லை மெய்ம்முதல் மெய்யீறு எனக் குறிப்பிடுவோம். மேலும், சில எடுத்துக்காட்டுகளைக் கவனியுங்கள்.

உயிர்முதல் உயிர் ஈறு – அம்பு (அ + ம் + ப் + உ)

ஏணி (ஏ + ண் + இ)

ஔவை (ஔ + வ் + ஐ)

மெய்ம்முதல் மெய்யீறு – கடல் (க் + அ + ட + ல்)

தமிழ் (த் + அ + ம் + இ + ழ்)

வளம் (வ் + அ + ள + ம்)

இப்போது ஒவ்வொரு சொல்லையும் இவ்வாறு பிரித்துப் பார்த்தால், உயிரீறு, மெய்யீறு எது என எளிதாக அடையாளம் காண இயலும்.

**சிந்தனை வினா**

உங்களுடைய பெயர் உயிர்முதல் உயிரீறா, மெய்ம்முதல் மெய்யீறா எனக் கண்டுபிடியுங்கள்.

சொற்புணர்ச்சிக்கு இந்த உயிரீறும் மெய்யீறும் இன்றியமையாதவை. இவை எவ்வாறு புணர்ந்துவரும் என்பதற்கு விதிகள் உள்ளன. இதேபோல் குற்றியலுகரச் சொற்கள், பல சில என்னும் சொற்கள், திசைப்பெயர்கள், பூப் பெயர்கள், பண்புப்பெயர்கள் என்பன புணர்ந்து வருவதற்கும் புணர்ச்சி விதிகள் உள்ளன.

### 4.4 வேற்றுமைப் புணர்ச்சி

'படம் பார்த்தான்'

இத்தொடரில், இரண்டாம் வேற்றுமை உருபான 'ஐ' மறைந்துள்ளது. இதனை விரிவுபடுத்தும்போது,

'படத்தைப் பார்த்தான்'

என விரியும். இவ்வாறு, இரண்டுமுதல் ஏழுவரை கொண்ட வேற்றுமைகளின் பொருள் விளங்குமாறு நிலைமொழி ஈறும் வருமொழி முதலும் சேர்வதனை வேற்றுமைப் புணர்ச்சி என்கிறோம். (முதல் வேற்றுமைக்கும் எட்டாம் வேற்றுமைக்கும் உருபு இல்லை.)

***வேற்றுமையின் பொருள்பட, நிலைமொழியும் வருமொழியும்***

***புணர்வதே வேற்றுமைப் புணர்ச்சி.***

### 4.5 அல்வழிப் புணர்ச்சி

வேற்றுமை அல்லாதவழி, நிலைமொழியும் வருமொழியும் புணர்ந்து வருவது அல்வழிப் புணர்ச்சியாகும். (அல்வழி = அல்லாத வழி)

வேற்றுமைக்குரிய சொற்றொடர்கள் அல்லாமல், தொகைநிலை, தொகாநிலைத் தொடர்களின் புணர்ச்சியைக் கூறுவது, அல்வழிப் புணர்ச்சியாகும்.

#### 4.5.1 தொகைநிலைத் தொடர்கள்

தொகைநிலைத் தொடர்கள் ஆறு வகைப்படும்.

எடுத்துக்காட்டு:

| | | |
|---|---|---|
| ஆடுகொடி | – | வினைத்தொகை (முக்காலம் மறைந்துள்ளது.) |
| செந்தாமரை | – | பண்புத்தொகை (பண்பு உருபு மறைந்துள்ளது.) |
| மலர்ப்பாதம் | – | உவமைத்தொகை (உவமஉருபு மறைந்துள்ளது.) |
| தாய்தந்தை | – | உம்மைத்தொகை ('உம்' உருபு மறைந்துள்ளது.) |
| பூங்கொடி ஆடினாள் | – | அன்மொழித் தொகை |

இவை ஐந்தும் அல்வழிப் புணர்ச்சியின்கண் வரும் தொகைநிலைத் தொடர்கள். இவற்றின் நிலைமொழியும் வருமொழியும் புணர்ந்துவரும்.

### 4.5.2 தொகாநிலைத் தொடர்கள்

தொகாநிலைத் தொடர்கள் ஒன்பது வகைப்படும்.

| | | |
|---|---|---|
| எழுவாய்த்தொடர் | – | கவின் சிரித்தான் |
| விளித்தொடர் | – | தம்பீ, இங்கே வா. |
| பெயரெச்சத்தொடர் | – | மலர்ந்த மல்லிகை |
| வினையெச்சத்தொடர் | – | படித்து மகிழ்ந்தான் |
| தெரிநிலை வினைமுற்றுத்தொடர் | – | பார்த்தேன் தோட்டத்தை |
| குறிப்பு வினைமுற்றுத் தொடர் | – | நல்லன் இவன் |
| இடைச்சொற்றொடர் | – | மற்றொன்று |
| உரிச்சொற்றொடர் | – | நனிநன்று |
| அடுக்குத்தொடர் | – | வா வா வா வா |

மேற்கண்ட ஒன்பது தொகாநிலைத் தொடர்களில் நிலைமொழியும் வருமொழியும் அல்வழிப் புணர்ச்சியில் புணர்ந்துவரும்.

## 4.6 உடம்படுமெய்

ஓர் உடலில் எத்தனை உயிர் இருக்கும்? ஓர் உயிர்தானே இருக்கும். ஈருயிர் இருக்காது அல்லவா! அப்படியானால், இரு சொல் புணரும்போது, நிலைமொழியின் ஈறும் வருமொழியின் முதலும் உயிராகவே இருந்தால் என்ன செய்வது? அவ்விரண்டையும் எப்படி இணைப்பது? பின்வரும் எடுத்துக்காட்டைக் கவனியுங்கள்.

அணி + அழகு

மேற்கண்ட சொல்லில் நிலைமொழி, 'அணி'. வருமொழி, 'அழகு'. இவ்விருசொல்லும் இணையும்போது, நிலைமொழியின் ஈற்றிலுள்ள எழுத்து, ணி (ண்+இ) என உயிரெழுத்தில்

முடிகிறது. அதாவது, உயிர்முதல் உயிர்ஈறு. வருமொழியின் முதலில் அழகு என்னும் சொல், 'அ' என்னும் உயிரெழுத்தில் தொடங்குகிறது. ஆகவே, புணரும்போது உயிரும் (இ), உயிரும் (அ) புணரவேண்டும். (அ + ண் + இ) + (அ + ழ் + அ + க் + உ)

முன்னர்க் கூறியதனை இப்போது நினைவுபடுத்துங்கள். ஓர் உடலில் ஓர் உயிர் மட்டுமே. உயிரும் மெய்யும் இணைந்து உயிர்மெய்யாகும். ஆனால், இங்கு இரண்டு உயிரெழுத்து உள்ளன. எனவே, இவ்விரண்டு உயிரெழுத்தையும் உடன்படுத்துவதற்கு (இணைப்பதற்கு) நாம் புதிதாக ஓரெழுத்தை (மெய்யெழுத்தை)'ச் சேர்க்கிறோம். அதுதான் உடம்படுமெய்

அணி + அழகு

அணி + ய் + அழகு

அணி + யழகு

அணியழகு

மேற்கண்ட எடுத்துக்காட்டில், உடன்படுத்தும் மெய்யாக வந்த எழுத்து, 'ய்'. இதேபோல எல்லாச் சொற்களுக்கும் உடன்படுத்தும் மெய்யாக இதுதான் வருமா எனில், இல்லை. பின்வரும் மற்றோர் எடுத்துக்காட்டைப் பாருங்கள்.

மா + இலை

மா + வ் + இலை

மா + விலை

மாவிலை

மேற்கண்ட எடுத்துக்காட்டில், நிலைமொழியின் இறுதி, 'மா' (ம் + ஆ). வருமொழியின் முதல், 'இ'. ஆகவே, வண்ணமிட்ட உயிரெழுத்துகளை இணைக்க, இங்கு நாம் பயன்படுத்தும் உடம்படுமெய், 'வ்' என்னும் எழுத்து. மற்றுமோர் எடுத்துக்காட்டைக் கவனியுங்கள்.

சே + அடி

சே + ய் + அடி = சேவடி

சே + வ் + அடி = சேவடி

இங்கு, நாம் இரண்டு உடன்படுத்தும் மெய்களைப் பயன்படுத்தியுள்ளோம். அவை, 'ய்', 'வ்'. இதிலிருந்து நாம் ஒரு முடிவுக்கு வரலாம். சில எழுத்துகளுக்கு 'யகர' உடம்படுமெய்யும் சில எழுத்துகளுக்கு 'வகர' உடம்படுமெய்யும் வரும் எனவும் குறிப்பிட்ட ஓர் எழுத்து, இரண்டையும் பெற்று வரும் என அறிந்துகொள்ளலாம். இன்னொன்றையும் நினைவில் கொள்ளுங்கள். வருமொழி முதல் எழுத்து உயிரெழுத்தாக இருக்கவேண்டும்.

***நிலைமொழி இறுதியிலும் வருமொழி முதலிலும் வரும் உயிரெழுத்துகளை இணைக்கும் மெய்யெழுத்தே உடம்படுமெய்***

எந்தெந்த எழுத்துக்கு எந்த உடம்படுமெய் வரும்? பின்வரும் அட்டவணையைக் கவனியுங்கள்.

| நிலைமொழியின் இறுதி எழுத்துகள் | உடம்படுமெய் |
|---|---|
| நிலைமொழியின் இறுதி இ, ஈ, ஐ ஆகிய எழுத்துகளில் முடிந்தால், | 'ய்' உடம்படுமெய் வரும். |
| நிலைமொழியின் இறுதி அ, ஆ, உ, ஊ, எ, ஒ, ஓ, ஔ ஆகிய எழுத்துகளில் முடிந்தால், | 'வ்' உடம்படுமெய் வரும். |
| நிலைமொழியின் இறுதி 'ஏ' என்னும் எழுத்தில் முடிந்தால், | 'ய்', 'வ்' இரண்டுமே வரும். |

எடுத்துக்காட்டு,

**யகர உடம்படுமெய்**

| | | |
|---|---|---|
| இ | ய் | கனி (ன் + இ) + அமுது = கனி + ய் + அமுது = கனியமுது |
| ஈ | | தீ (த் + ஈ) + அணைப்பான் = தீ + ய் + அணைப்பான் = தீயணைப்பான் |
| ஐ | | பனை (ன் + ஐ) + ஓலை = பனை + ய் + ஓலை = பனையோலை |

**வகர உடம்படுமெய்**

| | | |
|---|---|---|
| அ | வ் | பல (ல் + அ) + அணி = பல + வ் + அணி = பலவணி |
| ஆ | | அப்பா (ப் + ஆ) + உடன் = அப்பா + வ் + உடன் = அப்பாவுடன் |
| உ | | திரு (ர் + உ) + அருள் = திரு + வ் + அருள் = திருவருள் |
| ஊ | | பூ (ப் + ஊ) + இதழ் = பூ + வ் + இதழ் = பூவிதழ் |
| எ | | |
| ஒ | | நொ (ந் + ஒ) + அழகு = நொ + வ் + அழகு = நொவ்வழகு |
| ஓ | | கோ (க் + ஓ) + இல் = கோ + வ் + இல் = கோவில் |
| ஔ | | |

**யகர, வகர உடம்படுமெய்கள்**

| | | |
|---|---|---|
| ஏ | ய் | சே (ச் + ஏ) + அடி = சே + ய் + அடி = சேயடி<br>சே (ச் + ஏ) + அழகு = சே + ய் + அழகு = சேயழகு |
| | வ் | சே (ச் + ஏ) + அடி = சே + வ் + அடி = சேவடி<br>சே (ச் + ஏ) + அழகு = சே + வ் + அழகு = சேவழகு |

### 4.7 குற்றியலுகரப் புணர்ச்சி

குற்றியலுகரச் சொற்கள் நிலைமொழியாக இருக்கும்போது, எவ்வாறு புணர்ந்து வரும் என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகளின் வழி காண்போம்.

பட்டு + ஆடை = பட்டாடை

மேற்கண்ட எடுத்துக்காட்டைக் கவனியுங்கள். 'பட்டு' என்னும் சொல், குற்றியலுகரம். இச்சொல், நிலைமொழி. இச்சொல்லுக்குமுன் வருமொழி முதல் உயிரெழுத்தாக (ஆ) உள்ளது. இவ்வாறு வரும்போது, குற்றியலுகரம் கெட்டுப் புணரும்.

குற்றியலுகரம் ஆறு வகைப்படும். அவையாவும் குற்றியலுகரப் புணர்ச்சியின்போது, நிலைமொழி உகரம் கெட்டுப் புணரும்.

| | | | |
|---|---|---|---|
| நெடில்தொடர் | காடு + ஆறு | = | காட்டாறு |
| ஆய்தத்தொடர் | எஃகு + ஆலை | = | எஃகாலை |
| உயிர்த்தொடர் | உலகு + ஆளும் | = | உலகாளும் |
| வன்தொடர் | தடுப்பு + அணை | = | தடுப்பணை |
| மென்தொடர் | பஞ்சு + ஆலை | = | பஞ்சாலை |
| இடைத்தொடர் | சால்பு + ஐ | = | சால்பை |

குற்றியலுகரச் சொல்லுக்குமுன் வருமொழிமுதல் உயிர் அல்லாத பிறசொற்கள் புணரும்போது, ஏற்படும் மாற்றங்களையும் பின்வருமாறு காணலாம்.

ஓடு + வீடு = ஓட்டுவீடு

கயிறு + கட்டில் = கயிற்றுக்கட்டில்

வாழ்த்து + பாடல் = வாழ்த்துப்பாடல்

என்பன போல் புணர்ந்துவரும்.

ஆறு + கரை = ஆற்றங்கரை

மேற்கண்ட எடுத்துக்காட்டிலுள்ள குற்றியலுகரச் சொல்லைக் கவனியுங்கள். இச்சொல், பல பொருள் தரும் ஒரு சொல்லாகும். 'ஆறு' என்னும் சொல், எண்ணைக் குறித்துவரும்போது, 'றகர' ஒற்று இரட்டிப்பதில்லை.

ஆறு + உடன் = ஆறுடன் (எண் 6) என்றுதான் புணருமேயன்றி, ஆற்றுடன் என்று புணராது.

இதுபோன்று சில சொற்கள் ஒற்று இரட்டிக்காமல் புணர்ந்து வருகின்றன.

### 4.7.1 குற்றியலுகர ஈற்றுத் திசைப்பெயர்ப் புணர்ச்சி

வடக்கு + கிழக்கு = வடகிழக்கு

வடக்கு + நாடு = வடநாடு

இவ்வாறு, 'கு' என்னும் ஈற்று உயிர்மெய்யும் அதன் அயலில் நின்ற ககர மெய்யும் (க்) கெடும்.

தெற்கு + கிழக்கு = தென்கிழக்கு

மேற்கு + காற்று = மேல்காற்று

என, ஈற்றுக்கு அயலிலுள்ள றகர மெய், னகர மெய்யாகவும் லகர மெய்யாகவும் திரியும்.

கிழக்கு + நாடு = கீழ்நாடு

என, 'கிழக்கு' என்பதிலுள்ள ஈற்று உயிர்மெய்யும் ககர ஒற்றும் அகரமும் கெட்டு முதல் நீண்டும் புணரும்.

## 4.8 மெய்யீற்றுப் புணர்ச்சி

நிலைமொழியின் இறுதி எழுத்து, மெய்யெழுத்தாக இருந்தால் எப்படிப் புணரும் என்பதைப் பின்வரும் எடுத்துக்காட்டுகள்வழிக் காணலாம்.

### 4.8.1 வேற்றுமைப் புணர்ச்சியில் ணகர, னகர ஈறுகள்

**வல்லினம்**

கண் + செவி = கட்செவி

பொன் + தாலி = பொற்றாலி

வேற்றுமைப் புணர்ச்சியில் நிலைமொழி ஈற்றெழுத்துகள் ணகரமெய், னகரமெய் ஆக வரும்போது. வருமொழி முதல் வல்லினம் (ச, த) ஆக இருந்தால் டகரமாகவும், றகரமாகவும் மாறுகின்றன.

**மெல்லினம்**

கண் + மணி = கண்மணி

பொன் + மணி = பொன்மணி

இவை இரண்டும் மெல்லினம். இவ்வாறு வேற்றுமைப் புணர்ச்சியில் மெல்லினம் வரும்போது, இயல்பாகப் புணர்கின்றன.

**இடையினம்**

மண் + மனம் = மண்வன்மை

பொன் + வன்மை = பொன்வன்மை

இவை இரண்டும் இடையினம். இவ்வாறு வேற்றுமைப் புணர்ச்சியில் இடையினமும் (ம, வ) வர, ண, ன இயல்பாயின.

### 4.8.2 அல்வழிப் புணர்ச்சியில் ணகர, னகர ஈறுகள்

**வல்லினம்**

| | | |
|---|---|---|
| மண் + பெரிது | = | மண்பெரிது |
| பொன் + பெரிது | = | பொன்பெரிது |

**மெல்லினம்**

| | | |
|---|---|---|
| மண் + மாண்டது | = | மண்மாண்டது |
| பொன் + மாண்டது | = | பொன்மாண்டது |

**இடையினம்**

| | | |
|---|---|---|
| மண் + யாது | = | மண்யாது |
| பொன் + யாது | = | பொன்யாது |

இவ்வாறு அல்வழிப்புணர்ச்சியில் வல்லினமும், மெல்லினமும், இடையினமுமாகிய மூவினமும் வர, ண, ன இயல்பாயின.

### 4.8.3 தனிக்குற்றெழுத்தைச் சாராது வரும் ணகர, னகர ஈறுகள்

| | | |
|---|---|---|
| தூண் + நன்று | = | தூணன்று |
| கோன் + நல்லன் | = | கோனல்லன் |
| பசுமண் + நன்று | = | பசுமணன்று |

இவ்வாறு தனிக்குற்றெழுத்தைச் சாராமல் ஒருமொழி தொடர்மொழிகளைச் சார்ந்து வரும் ண, னகர ஈறுகள், அல்வழிப்புணர்ச்சியில் வருமொழி முதலில் வரும் 'ந' திரிந்துவிடத்துத் தாமும் கெடும்.

| | | |
|---|---|---|
| தூண் + நன்மை | = தூணன்மை | (ந – ணவாகத் திரிய 'ண்' கெட்டது) |
| வலியன் + நன்மை | = வலியனன்மை | (ந – னவாகத் திரிய 'ன்' கெட்டது) |
| அரசன் + நல்லன் | = அரசனல்லன் | (ந – னவாகத் திரிய 'ன்' கெட்டது) |

இவ்வாறு வேற்றுமைப் புணர்ச்சியிலும் நகரம் கெடும்.

| | | |
|---|---|---|
| மண் + குடம் | = | மட்குடம் |
| பொன் + குடம் | = | பொற்குடம் |

என வேற்றுமையில் வல்லினம் வர ணகர னகரங்கள் முறையே டகர றகரங்களாகத் திரிந்தன.

தேன் + மொழி = தேன்மொழி

தேன் + மொழி = தேமொழி

இவ்வாறு அல்வழிப்புணர்ச்சியில் னகரத்தின் முன் மெல்லினம் வரின் அந்த னகரம் இயல்பாதலும் உண்டு; அழிதலும் உண்டு.

தேன் + மலர் = தேன்மலர்

தேன் + மலர் = தேமலர்

இவ்வாறு வேற்றுமைப் புணர்ச்சியிலும் னகரம் இயல்பாதலும் உண்டு; அழிதலும் உண்டு.

தேன் + குழம்பு = தேன்குழம்பு – இயல்பாயிற்று.

= தேக்குழம்பு – வலிமிக்கது.

= தேங்குழம்பு – மெலிமிக்கது.

இவ்வாறு அல்வழிப் புணர்ச்சியில் னகரத்தின் முன் வல்லினம் வரின் அந்த னகரம் இயல்பாதலும் உண்டு; அன்றி, அது கெட்டு, வந்த வல்லினம் மிகுதலும் உண்டு; மெல்லினம் மிகுதலும் உண்டு.

தன் + பகை = தன்பகை

= தற்பகை

என் + பகை = என்பகை

= எற்பகை

இவ்வாறு வல்லினம் வர, ன் உறழ்தலும் உண்டு.

### 4.8.4 வேற்றுமைப் புணர்ச்சியில் லகர, ளகர ஈறுகள்

கால் + பொறை = காற்பொறை...ல் – ற் ஆனது.

முள் + குறை = முட்குறை...ள் – ட் ஆனது.

இது வேற்றுமைப் புணர்ச்சி.

கால் + குறிது = கால்குறிது, காற்குறிது

முள் + குறிது = முள்குறிது, முட்குறிது

இவ்வாறு அல்வழிப்புணர்ச்சியில் வல்லினம் வர, ல், ள் உறழ்ந்து வந்தன.

கல் + நெரிந்தது = கன்னெரிந்தது...ல் – ன் ஆனது.

வாள் + மாண்டது = வாண்மாண்டது...ள் – ண் ஆனது.

இஃது, அல்வழிப் புணர்ச்சி; வருமொழி முதலில் மெல்லினம் வந்துள்ளது.

கல் + மலை = கன்மலை...ல் – ன் ஆனது.

வாள் + மாண்பு = வாண்மாண்பு...ள் – ண் ஆனது.

இஃது, வேற்றுமைப் புணர்ச்சி; வருமொழி முதலில் மெல்லினம் வந்தது.

கால் + யாது = கால்யாது

முள் + வலிது = முள்வலிது

அல்வழிப்புணர்ச்சியில் ல், ள் முன் இடையினம் வர ல், ள் இயல்பாயின.

கல் + யானை = கல்யானை

தோள் + வலிமை = தோள்வலிமை

வேற்றுமைப் புணர்ச்சியில் ல், ள் இடையினம் வர, இயல்பாயின.

கல் + தீது = கஃறீது

முள் + தீது = முஃடீது

இவ்வாறு தனிக்குறிலின் பின் நின்றால் ல், ள் – அல்வழிப் புணர்ச்சியில் வருமொழி முதலில் வர, முன் சொன்னபடி றகர டகர மெய்களாகத் திரிதலே அன்றி, ஆய்தமாகத் திரிந்தும் வரும்.

வேல் + படை = வேற்படை

வாள் + படை = வாட்படை

அல்வழிப்புணர்ச்சியில் வல்லினம் வர, ல், ள் – ற், ட் ஆகத் திரிந்தன.

இல் + பொருள் = இல்லை பொருள்

= இல்லைப் பொருள்

இங்கு 'ல்' என்பது ஐகாரச் சாரியை, பெற, வருமொழி முதலில் வந்த வல்லினம் மிக்கும் மிகாமலும் வந்தது.

இல் + பொருள் = இல்லாப் பொருள்

இங்கு 'ல்' என்பது 'ஆ' சாரியை பெற, வந்த வல்லினம் மிக்கது.

இல் + பொருள் = இல்பொருள்

இவ்வாறு இயல்பாக வருதலும் உண்டு.

புள் + கடிது = புள்ளுக்கடிது

புள் + நன்று = புள்ளுநன்று

புள் + வலிது = புள்ளுவலிது

இவ்வாறு புள், வள் என்னும் இரண்டு சொற்களும் அல்வழிப் புணர்ச்சியில் யகரம் அல்லாத மெய்கள் வந்தால் ' உ' என்னும் சாரியை பெற்றும் புணரும்.

புள் + கடுமை = புள்ளுக்கடுமை

புள் + நன்மை = புள்ளுநன்மை

புள் + வன்மை = புள்ளுவன்மை

இவ்வாறு புல், வள் என்னும் இரண்டு சொற்களும் வேற்றுமைப் புணர்ச்சியிலும் யகரம் அல்லாத மெய்கள் வந்தால், ' உ' என்னும் சாரியை பெற்றும் புணரும்.

### 4.8.5 யகர, ரகர, ழகர ஈறுகள்

ய, ர, ழ ஆகியவற்றின் முன் வல்லினம் வந்தால், பின்வருமாறு புணரும்.

**வேற்றுமையில் வல்லினம் மிகுந்தும் உறழ்ந்தும் வருதல்**

வேய் + கிளை = வேய்க்கிளை

வேய் + குழல் = வேய்க்குழல்

வேய் + குழல் = வேய்ங்குழல்

**அல்வழியில் வல்லினம் மிகுதல்**

மெய் + கீர்த்தி = மெய்க்கீர்த்தி

கார் + பருவம் = கார்ப்பருவம்

யாழ் + கருவி = யாழ்க்கருவி

**அல்வழியில் இயல்பாகப் புணர்தல்**

வேய் + கடிது = வேய்கடிது

வேர் + சிறிது = வேர்சிறிது

யாழ் + பெரிது = யாழ்பெரிது

### 4.8.6 மகர ஈற்றுப் புணர்ச்சி

**1. மகரத்தின்முன் வல்லினம்**

மகரத்தின் முன் வல்லினம் வரின், வேற்றுமையிலும் அல்வழியில் பண்புத்தொகை, உவமைத்தொகையிலும் இறுதி மகரம் கெட்டு, வரும் வல்லினம் மிகும்.

நிலம் + பரப்பு = நிலப்பரப்பு (வேற்றுமையில்)

வட்டம் + கல் = வட்டக்கல் (அல்வழியில்)

**2. எழுவாய்த் தொடர், உம்மைத்தொகை, பெயரெச்ச, வினைமுற்றுத் தொடர், இடைச்சொற்றொடர்**

எழுவாய்த் தொடரிலும், உம்மைத் தொகையிலும், செய்யும் என்னும் பெயரெச்சத் தொடரிலும், வினைமுற்றுத் தொடரிலும், இடைச்சொற்றொடரிலும், இறுதி மகரம் வரும் வல்லெழுத்திற்கு இனமாகத் திரியும்.

மரம் + சிறிது = மரஞ்சிறிது (எழுவாய்த்தொடர்)

நிலம் + தீ = நிலந்தீ (உம்மைத்தொகை)

செய்யும் + செயல் = செய்யுஞ்செயல் (பெயரெச்சம்)

தின்றனம் + குறியேம் = தின்றனங்குறியேம் (வினைமுற்று)

இராமனும் + சீதையும் = இராமனுஞ்சீதையும் ('உம்' இடைச்சொல்)

**3. மகர மெய்யின் முன் மெல்லினம்**

மகர மெய்யின் முன் வருமொழியில் மெல்லினம் வந்தால் அல்வழி, வேற்றுமை ஆகிய இருவழியிலும் நிலைமொழி இறுதியிலுள்ள மகரம் கெடும்.

மரம் + நீண்டது = மரநீண்டது (அல்வழியில்)

மரம் + மாட்சி = மரமாட்சி (வேற்றுமையில்)

**4. மகரத்தின் முன் உயிரும் இடையினமும்**

மகரத்தின்முன் உயிரும் இடையினமும் வரின், வேற்றுமையிலும், அல்வழியில் பண்புத்தொகை, உவமைத்தொகையிலும் மகரம் கெடும். உம்மைத் தொகையிலும், செய்யும் என்னும் பெயரெச்சத் தொடரிலும், வினைமுற்றுத் தொடரிலும், இடைச் சொற்றொடரிலும் இறுதி மகரம் கெடாது நிற்கும்.

மரம் + வேர் = மரவேர்

புலியும் + யானையும் = புலியும் யானையும்

வட்டம் + ஆழி = வட்டவாழி

பவளம் + இதழ் = பவளவிதழ்

மரம் + வலிது = மரம்வலிது

நிலம் + வானம் = நிலம் வானம்

ஆளும் + வளவன் = ஆளும்வளவன்

அரசனும் + அமைச்சனும் = அரசனுமமைச்சனும்

## 4.9 எண்ணுப்பெயர்ப் புணர்ச்சி

எண்ணுப்பெயர்கள் தம்முடன் தாமும் தம்முடன் பிறவும் சேரும்போது என்னென்ன மாற்றங்கள் ஏற்படும் என்பதைப் பின்வருமாறு காண்போம்.

**1. ஒன்று**

ஒன்று என்னும் எண்ணின் ஈற்று உயிர்மெய் கெட்டு, னகர ஒற்று ரகரமாகத் திரியும். வருமொழி முதல் மெய்யெழுத்தாயின் ரகர ஒற்று உகரம் பெறும்: உயிராயின், உகரம் பெறாது முதல் நீளும்.

ஒன்று + கோடி = ஒருகோடி

ஒன்று + ஆயிரம் = ஓராயிரம்

**2. இரண்டு**

இரண்டு என்னும் எண்ணின் ஈற்று உயிர்மெய்யும், ணகர ஒற்றும், ரகரத்தின் மேல் நின்ற அகர உயிரும் கெடும். வருமொழி முதல் மெய்யெழுத்தாக இருந்தால் ரகரம் உகரம் பெறும்; உயிரெழுத்தாக இருந்தால் உகரம் பெறாது முதல் நீளும்.

இரண்டு + கோடி = இருகோடி

இரண்டு + ஆயிரம் = ஈராயிரம்

**3. மூன்று**

மூன்று என்னும் எண்ணின் ஈற்று உயிர்மெய் கெடும். வருமொழி முதல் உயிராயின் னகரமெய்யும் கெடும். வருமொழி முதல் மெய்யாயின் நிலைமொழியின் முதல் குறுகி, னகரமெய் வருமொழியின் மெய்யாகத் திரியும்.

மூன்று + ஆயிரம் = மூவாயிரம்

மூன்று + நாழி = முந்நாழி

**4. நான்கு**

நான்கு என்னும் எண்ணின் ஈற்று உயிர்மெய் கெடும். நின்ற னகரம், வருமொழி முதல் உயிராகவோ அல்லது இடையின எழுத்தாகவோ இருந்தால் லகரமாகத் திரியும்; வருமொழி வல்லெழுத்தாயின், றகரமாகத் திரியும்; மெல்லெழுத்தாயின் இயல்பாகும்.

நான்கு + ஆயிரம் = நாலாயிரம்

நான்கு + வகை = நால்வகை

நான்கு + திசை = நாற்றிசை

நான்கு + மணி = நான்மணி

**5. ஐந்து**

ஐந்து என்னும் எண்ணின் ஈற்று உயிர்மெய் கெடும். வருமொழி முதல் உயிராக இருந்தால் நின்ற நகர மெய்யும்(ந்) கெடும். வருமொழி முதல் வல்லெழுத்தாக இருந்தால் அதன் இனமெல்லெழுத்தாகத் திரியும். வருமொழி மெல்லெழுத்தாகவோ இடையெழுத்தாகவோ இருந்தால் வந்த எழுத்தாகத் திரியும்.

ஐந்து + ஆயிரம் = ஐயாயிரம்

ஐந்து + நூறு = ஐந்நூறு

ஐந்து + பத்து = ஐம்பது

ஐந்து + கலம் = ஐங்கலம்

ஐந்து + பொறி = ஐம்பொறி

**6. ஆறு**

ஆறு என்னும் எண் உயிர் வரின் பொதுவிதிப்படி (நிலையீற்று உகரம் கெட்டு வருமொழியோடு புணரும்) முடியும்: மெய்வரின் முதல் குறுகும்.

ஆறு + ஆயிரம் = ஆறாயிரம்

ஆறு + மணி = அறுமணி

**7. ஏழு**

ஏழு என்னும் எண்ணின் முன் உயிர் வரின், ஈற்று உகரம் கெடும்: மெய்வரின் முதல் குறுகும்.

ஏழு + ஆயிரம் = ஏழாயிரம்

கடையேழு+ வள்ளல் = கடையெழு வள்ளல்

**8. எட்டு**

எட்டு என்னும் எண்ணின் ஈற்று உயிர்மெய் கெடும்: நின்ற டகரமெய் நாற்கணத்தின் முன்னும் ணகரமெய்யாகத் திரியும்.

எட்டு + ஆயிரம் = எண்ணாயிரம்

எட்டு + வளை = எண்வளை

(இத்திரிபுகளின்றிப் பொது விதிப்படி இரண்டு கழஞ்சு, மூன்று படி, நான்கு பொருள், ஐந்து முகம், ஆறு குணம், ஏழு கடல், எட்டுத் திக்கு எனவும் வரும் என்பதை அறிக).

**9. ஒன்பது**

**1. ஒன்பதின் முன் பத்து**

ஒன்பது என்னும் எண்ணின்முன் பத்து என்னும் எண் வரும்போது பின்வருமாறு புணரும்.

ஒன்பது + பத்து = ஒன் + பத்து

= த்+ ஒண் + பத்து

= தொண் + நூறு

= தொண்ணூறு

**2. ஒன்பதின் முன் நூறு**

ஒன்பது என்னும் எண்ணின்முன் நூறு என்னும் எண் வரின், பின்வருமாறு புணரும்.

ஒன்பது + நூறு = ஒன் + நூறு

= த்+ஒண் + நூறு

= தொண் + ஆயிரம்

= தொள்ளாயிரம்

**10. ஒன்று முதல் எட்டு வரை எண்ணுப்பெயர் முன் பத்து**

ஒன்றுமுதல் எட்டு ஈறாக நின்ற எண்ணுப்பெயர் முன் பத்தென்னும் எண்ணுப்பெயர் வரின், அப்பத்தின் நடு நின்ற தகரமெய் கெட்டுப் பது என்றோ அல்லது ஆய்தமாகத் திரிந்து பஃது என்றோ புணரும்.

ஒன்று + பத்து = ஒருபது, ஒருபஃது

இரண்டு + பத்து = இருபது, இருபஃது

**11. பத்து முதல் எண்பது வரையிலான எண்களின் முன் ஒன்று முதல் ஒன்பது**

ஒருபது முதல் எண்பது வரையிலான எண்களின்முன் ஒன்றுமுதல் ஒன்பது வரையிலான அவற்றையடுத்த எண்கள் வரின், நிலைமொழி ஈற்றுக்கு அயலிலே தகரவொற்று தோன்றும்.

இருபது + இரண்டு = இருபத்திரண்டு

முப்பது + மூன்று = முப்பத்துமூன்று

**12. பத்தின் முன் இரண்டு**

பத்தின் முன் இரண்டு வரின், உம்மைத் தொகையில் ஈற்று உயிர்மெய் கெட்டு நின்ற தகரமெய் னகரமாகத் திரியும்.

பத்து + இரண்டு = பன்னிரண்டு

**13. பத்தின் முன் ஒன்று முதல் எட்டு ஈறாகிய பிற எண்கள்**

பத்தின் முன் இரண்டு நீங்கலாக ஒன்று முதல் எட்டு ஈறாகிய எண்கள் வரின், உம்மைத்தொகையில் ஈற்று உயிர்மெய் கெட்டு, இன் சாரியை தோன்றும்.

பத்து + ஒன்று = பதினொன்று

பத்து + மூன்று = பதின்மூன்று

பத்து + நான்கு = பதினான்கு

பத்து + ஐந்து = பதினைந்து

பத்து + ஆறு = பதினாறு

பத்து + ஏழு = பதினேழு

பத்து + எட்டு = பதினெட்டு

**14. பத்தின் முன் பத்து**

பத்தின் முன் பத்து புணர இற்றுச் சாரியை தோன்றும்: அங்ஙனம் தோன்றுமிடத்துப் பத்து என்பதின் ஈற்று உயிர்மெய் கெடும்.

பத்து + பத்து = பதிற்றுப்பத்து

**15. பத்து, ஒன்பதின் முன் ஆயிரம், நிறை, அளவுப்பெயரும், பிறவும்**

பத்தின் முன்னும், ஒன்பதின் முன்னும், ஆயிரமும், நிறைப்பெயரும், அளவுப் பெயரும், பிறபெயரும் வரின், பண்புத்தொகையில் இற்றுச் சாரியை மட்டுமின்றி இன் சாரியையும் தோன்றும்: அங்ஙனம் தோன்றுமிடத்துப் பத்து என்பதன் ஈற்று உயிர்மெய் கெடும்.

பத்து + ஆயிரம் = பதினாயிரம்

பத்து + மடங்கு = பதின்மடங்கு

ஒன்பது + ஆயிரம் = ஒன்பதினாயிரம்

ஒன்பது + மடங்கு = ஒன்பதின்மடங்கு

**16. ஒன்று முதல் பத்து ஈறாகிய எண்களின் இரட்டிப்பு**

ஒன்பது நீங்கலாக ஒன்று முதல் பத்து ஈறாகிய ஒன்பது எண்களையும் இரட்டித்துச் சொல்லுமிடத்து, நிலைமொழியின் முதலெழுத்து மாத்திரம் நிற்க, மற்ற எல்லாம் கெட்டு, முதல் நெடிலாயின் குறுகவும், வந்தவை உயிராயின் வகரவொற்றுத் தோன்றவும், மெய்யாயின் வந்த எழுத்து மிகவும் பெறும்.

ஒன்று + ஒன்று = ஒவ்வொன்று

ஐந்து + ஐந்து = ஐயைந்து

இதுவரை எண்ணுப் பெயர்கள் எவ்வாறு புணர்ந்துவரும் என்பதைப் பார்த்தோம். இவற்றை நன்கு நினைவிற்கொண்டால், சொற்புணர்ச்சியைப் பயன்படுத்தும்போது பிழையின்றி எழுதலாம்.

**அறிவோம்! தெளிவோம்!**

**ஓர் மரம் / ஒரு மரம் – எது சரி?**

ஒரு மரம் என்பதுதான் சரி. புணர்ச்சியின்படி, ஒன்று + மரம் = ஒரு மரம் என்றே புணரவேண்டும். ஒன்று என்னும் நிலைமொழியின்முன், வருமொழி முதலெழுத்து உயிரெழுத்தாக இருந்தால் மட்டுமே ஓர் என மாறும். ஒன்று + ஆடு = ஓர் ஆடு எனப் புணரும். ஒரு ஆடு எனப் புணராது.

**ஓர் ஆசிரியர்/ ஆசிரியர் ஒருவர் – எது சரி?**

ஆசிரியர் ஒருவர் என்பதே சரி. முன்னர்க் கூறிய விதிப்படி, உயிரெழுத்துக்குமுன் ஓர் வரவேண்டும் என்பதில் மாற்றுக் கருத்தில்லை. ஆயினும், இங்கு எடுத்துக்காட்டப்பட்ட சொல் (ஆசிரியர்), உயர்திணைக்கு உரியது. உயர்திணைச் சொற்களுக்குமுன் ஒரு/ ஓர் வரவேண்டியதில்லை. அரசன் ஒருவன், பெண்ணொருத்தி, மாணவன் ஒருவன் என்று எழுதினாலே போதும். ஒரு/ ஓர் ஆகிய இரண்டையும் அஃறிணைச் சொற்களுக்குமுன் பயன்படுத்துவோம். இக்காலத் தமிழ் மரபில் இத்தகைய வழக்குத்தொடர் உள்ளது.

### 4.10 வல்லினம் மிகும் இடம், மிகாஇடம்

தமிழில் எழுதும்போது ஒற்றுப்பிழை, எழுத்துப்பிழை, சொற்பிழை, தொடர்ப்பிழை, கருத்துப்பிழை, பிறமொழிக் கலப்புப் பிழை, குறியீட்டுப் பிழை, புணர்ச்சி, மரபு, யாப்பு எனப் பல வகைகளில் பிழை ஏற்படுகிறது. இவற்றுள் ஒற்றுப்பிழைக்குக் காரணமாக அமைவது, வல்லின மெய்யாகிய க், ச், த், ப் என்னும் எழுத்துகள்.

இந்நான்கு வல்லினமெய் எங்கு இடம்பெற வேண்டும், எங்கு இடம்பெறக் கூடாது என்பதைக் கட்டாயம் தெரிந்திருக்கவேண்டும். படித்தவர்களாக இருந்தாலும் படிக்காதவர்களாக இருந்தாலும் இந்த வல்லினமெய்களை உரிய இடங்களில் பயன்படுத்துவதில் தடுமாற்றம் இருக்கத்தான் செய்கிறது. இவ்வல்லின மெய்கள் எங்கு மிகும்? எங்கு மிகாது? என்பதைப் புரிந்துகொண்டால் ஓரளவாவது பிழையைத் தவிர்க்கலாம்.

#### 4.10.1 வல்லினம் மிகுமிடம்

1) அக்குதிரை, இக்கதவு, உப்பக்கம் (சுட்டெழுத்தின் பின்)

2) அந்தக்காலம், இந்தப் பொருள், எந்தச் சொல் (சுட்டு, வினாச் சொற்களின் பின்)

3) அங்குச் சென்றான், இங்குப் பார்த்தான், எங்குக் கண்டாய்? (இடப்பொருளின் பின்)

4) அப்படிச் செய்தான், இப்படிச் சொல், எப்படிப் பேசினான்?

5) அவ்வகைச் செடி, இவ்வகைப் பூக்கள், எவ்வகைத் துணி?

6) இனிக் காண்போம், தனிச்சொல் (இனி, தனி)

7) தடையின்றிச் செல், அந்த மாணவனன்றிப் பிற மாணவர் பேசக்கூடாது. (அன்றி, இன்றி)

8) எனச் சொன்னான், மிகச்சிறிய செடி, நடுக்கடல், பொதுக்கூட்டம் (என, மிக, நடு, பொது)

9) முழுப்பக்கம், திருக்குளம், புதுக்கண்ணாடி, அரைப்பங்கு, பாதிக் கிணறு (முழு, திரு, புது, அரை, பாதி)

10) எட்டுத் தொகை, பத்துப்பாட்டு (எட்டு, பத்து ஆகிய எண்ணுப்பெயர்ச் சொற்களின் பின்)

11) தீச்செயல், கைக்குழந்தை, பூப்பந்தல், நாக்குழறியது (ஓரெழுத்து ஒருமொழிச் சொற்களின் பின்)

12) பாடாத் தேனீ, காணாக் காட்சி, தீராத் துன்பம் (ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்)

13) தச்சுத் தொழில், உப்புக்கடை, கேட்டுக்கொள், தத்துக்கொடுத்தான், கற்றுக்கொடு, விறகுக்கட்டை (வன்றொடர்க் குற்றியலுகரச் சொற்களின் பின்)

14) வரச்சொன்னாள், தேடப்போனார், மெல்லப் பேசினான் (அகர ஈற்று வினையெச்சம்)

15) ஓடிப்போனான், பேசிப்பார்த்தார், சூடிக்கொண்டாள் (இகர ஈற்று வினையெச்சம்)

16) ஒழுங்காய்ப் படி, மகிழ்ச்சியாய்ப் பேசினாள், போய்த் தேடு (ஆய், போய்)

17) கதிரவனைப் பார்த்தேன், தொழிலைச் செய்தார், செய்யுளைப் படித்தேன் (இரண்டாம் வேற்றுமை உருபு'ஐ' வெளிப்படையாக வரும்போது)

18) வீட்டுக்குப் போ, அவனுக்குத் தெரியும், நாட்டுக்குத் தொண்டு செய் (நான்காம் வேற்றுமை உருபு, 'கு' வெளிப்டையாக வரும்போது)

19) புலித்தோல், பூனைக்கால், கங்கைக்கரை (ஆறாம் வேற்றுமைத்தொகை)

20) எலிப்பாட்டு (எலியைப் பற்றிய பாட்டு) (இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை)

21) வெள்ளிக் கிண்ணம் (வெள்ளியால் செய்த கிண்ணம்) (மூன்றாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை)

22) உரிமைப் போராட்டம் (உரிமைக்கு நடத்தும் போராட்டம்) (நான்காம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை)

23) தேங்காய்ப்பால் (தேங்காயிலிருந்து பிழியப்படும் பால்) (ஐந்தாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை)

24) சென்னைப் பல்கலைக்கழகம் (சென்னையின்கண் உள்ள பல்கலைக்கழகம்) (ஏழாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை)

25) அன்பாகப் பேசினார், சிறப்பாகத் தொடங்கப்பட்டது, மெதுவாகச் சிரித்தாள், கனிவாகக் கூறினார். (ஆக என்னும் சொல்லுருபின் பின்)

26) வேர்ப்பலா, வாழ்க்கை, பாய்ச்சல், வாழ்த்தினாள் (ய, ர, ழ ஒற்றுக்குப் பின் )

27) கிழக்குப் பக்கம், மேற்குத் தொடர்ச்சி மலை (திசைப் பெயர்களின் பின்)

28) நண்டுக் கூட்டம், பங்குச் சந்தை (சில மென்றொடர்க் குற்றியலுகரம் பின்)

29) மரபுக்கவிதை, அரசுப்பள்ளி, உழவுத்தொழில் (சில உயிர்த்தொடர்க் குற்றியலுகரம் பின்)

30) சிவப்புப் புடவை, முல்லைக்காடு, முத்துப்பற்கள் (தொகைநிலைத் தொடர்கள்)

31) சாலப் பேசினார், தடக்கை (உரிச்சொற்களின் பின்)

32) நிலாப்பாட்டு, பலாப்பழம் (தனிக்குற்றெழுத்துக்குப் பின்வரும் ஆகாரச்சொல்)

33) வாழ்க்கைப் படகு, கண்ணீர்ப் பூக்கள் (உருவகங்கள்)

34) மெல்லப் பேசு, உரக்கச் சொல், நிரம்பக் கொடுத்தார், நிறையக் கற்றான் (மெல்ல, உரக்க, நிரம்ப, நிறைய)

35) எல்லாக் குழந்தைகளும் ஒன்றுகூடின, அனைத்துப் பள்ளிகளுக்கும் நாளை விடுமுறை (எல்லா, அனைத்து)

36) நாட்டுப்பற்று, ஆற்றுப் பெருக்கு, வயிற்றுப் பசி (ஒற்று இரட்டிக்கும் குற்றியலுகரங்கள்)

37) அறிவுக் கல்லூரி, பொதுப் பார்வை, கணுக்கால் (முற்றியலுகரம்)

38) சின்னக்குடை, சின்னப்பெண், சின்னத்தட்டு (சின்ன என்னும் பெயரடையின் பின்)

39) கத்தியைவிடக் கூர்மை, கூடக்கொஞ்சம் கொடு (விட, கூட)

40) கீழ்க்காணும் செய்திகள், புலிகளிடைப் பசு போல (கீழ், இடை)

### 4.10.2 வல்லினம் மிகா இடம்

1) அது காண், இது செய், அவை சிறந்தவை, இவை கடினமானவை (சுட்டுப்பெயர்கள்)

2) எது கண்டாய்? யாது செய்தாய்? எவை தவறு? யாவை போயின? (வினாப்பெயர்கள்)

3) மலர் பூத்தது, குதிரை கனைத்தது, கிளி கொஞ்சியது (முதல் வேற்றுமை)

4) என்னொடு கற்றவர், தாயோடு சென்றான் (மூன்றாம் வேற்றுமை விரி)

5) எனது கை, எனது பல் (ஆறாம் வேற்றுமை விரி)

6) அண்ணா கேள், கனவே கலையாதே, மகனே பார் (விளி வேற்றுமை)

7) ஓடிய குதிரை, படித்த பெண், வென்ற தமிழன் (பெயரெச்சம்)

8) நாடு கடத்தினான், மோர் குடித்தான், புளி கரைத்தாள் (இரண்டாம் வேற்றுமைத்தொகை)

9) தரும்படி கேட்டான், எழுதும்படி சொன்னாள் (படி என முடியும் வினையெச்சம்)

10) பறந்தன பறவைகள், நடந்தன கால்கள் (அகர ஈற்று வினைமுற்று)

11) வாழ்க தலைவர், வாழ்க தமிழகம், வீழ்க பகைவன் (வியங்கோள் வினைமுற்று)

12) குடிதண்ணீர், குளிர்காலம், திருநிறை செல்வி, திருநிறை செல்வன் (வினைத்தொகை)

13) அத்தனை புத்தகங்களா?, இத்தனை துணிகளா? எத்தனை பேர்கள்? (அத்தனை, இத்தனை, எத்தனை)

14) அவ்வளவு கண்டேன், இவ்வளவு தந்தாள், எவ்வளவு கொடுத்தாய்? (அவ்வளவு, இவ்வளவு, எவ்வளவு)

15) அவனா கண்டான்? இவளா செய்தாள்? அவனே பார்த்தான், கண்ணனோ தடுத்தான்? (ஆ, ஏ, ஓ வினாப்பெயர்கள்)

16) ஒன்று கூடுவோம், மூன்று கனி, ஐந்து பழம், ஏழு கடல் (எட்டு, பத்து தவிர மற்ற எண்ணுப்பெயர்களின் பின்)

17) வள்ளுவர் கோட்டம், கண்ணகி கோவில், ஜானகி மகன் (நான்காம் வேற்றுமைத் தொகை)

18) தாய் தந்தை, செடி கொடி, வெற்றிலை பாக்கு (உம்மைத் தொகை)

19) அன்று கேட்டார், இன்று சொன்னார், என்று தருவார்? (அன்று, இன்று, என்று)

20) அவ்வாறு கேட்டார், இவ்வாறு கூறினார், எவ்வாறு பேசினார்? (அவ்வாறு, இவ்வாறு, எவ்வாறு)

21) அத்தகைய திறமை, இத்தகைய தன்மை எத்தகைய செயல்? (அத்தகைய, இத்தகைய, எத்தகைய)

22) கை தட்டினான் (மூன்றாம் வேற்றுமைத் தொகை)

23) பள்ளி சென்றாள் (நான்காம் வேற்றுமைத் தொகை)

24) வரை பாய்ந்தான் (வரை – மலை) (வரையிலிருந்து பாய்ந்தான்) (ஐந்தாம் வேற்றுமைத் தொகை)

25) வீடு தங்கினான் (ஏழாம் வேற்றுமைத் தொகை)

26) தோழி கூற்று, ஆசிரியர் கல்வி, மாணவர் கையேடு (உயர்திணைப் பெயருக்குப் பின்)

27) குழந்தைக்கான கல்வி, பிறகு பார்ப்போம், உரிய பங்கு, தகுந்த கூலி, ஏற்ற பணி, முன்பு கண்டேன், யாருடைய செயல்? (ஆன, பிறகு, உரிய, தகுந்த, ஏற்ற, முன்பு, உடைய)

28) பார்க்காத பயிர், செல்லாத காசு (எதிர்மறைப் பெயரெச்சம்)

29) சிறிய கண்ணாடி, பெரிய பானை (சிறிய, பெரிய)

30) கண்டு களித்தான், வந்து போனான், செய்து பார்த்தான், அழுது தீர்த்தான் (சில குற்றியலுகரங்கள்)

31) பாம்பு பாம்பு, தா தா தா, பார் பார் பார்/ கலகல, படபட, சலசல (அடுக்குத்தொடர்/ இரட்டைக் கிளவி)

32) எழுத்துகள், கருத்துகள், நாள்கள் (கள் விகுதி)

33) ஆதிபகவன், தேச பக்தி, பந்த பாசம் (வடசொற்கள்)

34) நல்ல பையன், தீய பழக்கம், அரிய காட்சி (நல்ல, தீய, அரிய)

35) தம்பி பார்த்தான், தங்கை கூப்பிட்டாள், அம்மா பசிக்கிறது (உறவுப்பெயர்களின் பின்)

### 4.11 தொகுப்புரை

ஒன்று அல்லது அதற்கும் மேற்பட்ட சொற்கள் புணர்ந்து வருவதனையும் அவற்றின் வகை, அவை பயன்படும் இடங்கள் முதலியவற்றையும் இந்தப்பாடம் வாயிலாக அறிந்துகொண்டோம். மேலும், எண்ணுப்பெயர்ப் புணர்ச்சிகளும் உள்ளன. இவற்றை அறிந்துகொள்வதோடு, பிழையின்றி எழுதவும் வேண்டும். புணர்ச்சியின் மூலம், சொற்களைச் சேர்த்தும் பிரித்தும் எழுத அறியலாம். செய்யுள்களைப் படிக்கும்போது, பொருளுணர்விற்கேற்பப் பிரித்துப் படிக்கலாம். உரைப்பகுதி, கதை, கட்டுரை முதலானவற்றைப் படிக்கும்போது, சொற்கள் எவ்வாறு புணர்ந்துள்ளன என்பதை அறிந்துகொள்வதோடு, அவை எவ்வகைப் புணர்ச்சிக்குரியவை என்பதையும் உணரலாம். சொற்புணர்ச்சிக்குரிய விதிகளை நன்கு அறிந்துகொண்டால், நம்முடைய பேச்சிலும் எழுத்திலும் பிழை வருவதனைத் தவிர்க்கலாம். தேவையான இடங்களில் வல்லின மெய் இடுவதும் தேவையற்ற இடங்களில் வல்லினமெய் இடாமல் எழுதுவதும் மொழிமரபைக் காக்கும். தேவையற்ற பொருட்குழப்பத்திற்கு வழிவகுப்பதையும் தடுக்கும்.

## பயிற்சிகள்

**அ) பின்வரும் தொடரில் இடம்பெற வேண்டிய சரியான சொல்லைத் தேர்ந்தெடுக்க.**

1. இயல்புப் புணர்ச்சிக்கு எடுத்துக்காட்டு ____________(தமிழ்ச்சொல்/தமிழ்நாடு)
2. மரவேர் – இச்சொல்லில் இடம்பெற்றுள்ள விகாரம் __________ (திரிதல்/ கெடுதல்)
3. இன்சொல் – இச்சொல்_________எனப் பிரியும். (இனிய + சொல்/ இனிமை + சொல்)
4. சரியாகப் புணர்ந்துள்ள சொல் ____________ (இணையதளம்/ இணையத்தளம்)
5. படம் பார்த்தான் என்பது____________ (அல்வழிப் புணர்ச்சி/ வேற்றுமைப் புணர்ச்சி)

**ஆ) பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 1. ஆடுகொடி | – | உம்மைத்தொகை |
| 2. செந்தாமரை | – | வினைத்தொகை |
| 3. மலர்ப்பாதம் | – | அன்மொழித்தொகை |
| 4. தாய்தந்தை | – | பண்புத்தொகை |
| 5. பூங்கொடி ஆடினாள் | – | உவமைத்தொகை |

**இ) பின்வரும் "துளிப்பா" கவிதையில் புணர்ச்சிக்குரிய சொற்களைக் கண்டறிக.**

**நிலாப்பெண்ணே**

வெண்ணிலவே கண்மணியே
விண்ணிலே நீந்துகிறாய்
நீலவான் ஆடையிலே
நித்தம் தோன்றுகிறாய்
பாற்போல் வெண்மையால்
பார்ப்பவரை மயக்குகிறாய்
கவிஞரின் கற்பனையில்
புதுக்கவிதையாய் மலர்கிறாய்

**ஈ) பின்வரும் தொடர்களில் அடிக்கோடிட்ட சொற்களைச் சரியாகப் புணர்ச்சி விதி அறிந்து எழுதுக.**

1. **கருமை குதிரை** விரைந்து ஓடியது.

2. நானும் நண்பனும் **திரைப்படம் காட்சி**யைக் கண்டுகளித்தோம்.

3. **பல்பொடி** தரையில் கொட்டிக்கிடந்தது.

4. **எள்நெய்** வாங்கி வா.

5. **பூசோலை**யில் குயில் கூவ, மயில் அகவியது.

**உ) பின்வரும் நுண்கதையில் புணர்ச்சிக்குரிய சொற்கள் பிழையாகப் புணர்ந்துள்ளன. அவற்றைக் கண்டறிக.**

இரவு நேரம். தாத்தா, வீட்டிற்கு வெளியே கயிறுகட்டிலில் நன்றாக உறங்கிக் கொண்டிருந்தார். சில்லென்று காற்று வீசிக் கொண்டிருந்தது. அப்போது, எதிர்பாராத வகையில் மழை தூறத் தொடங்கியது. தாத்தா இப்படியும் அப்படியும் அசைந்தார். அவர் எழுந்திருப்பதற்குள் மழை பெருத்துளியாய் விழத்தொடங்கியது. தலையணையையும் போர்வையையும் எடுத்துக்கொண்டு, வீடிற்குள் நுழைந்தார் தாத்தா. கதவை மூடும்போது, வெளியேவிருந்த கட்டிலைப் பார்த்தார். கட்டில் இருந்த இடம் மட்டுமே நனைந்திருந்தது. மழை பெய்ததற்கான எந்த அறிகுறியும் இல்லை. இப்போது, கதவை நன்கு திறந்துகொண்டு வெளியே வந்தார். சுவரோரமாய் ஒளிந்து கொண்டிருந்த பேரனின் கையில் சிறிய வாளி இருந்தது. அதில் இருந்த தண்ணீர், நிலயொளியில் பளபளயென மின்னியது.

**ஊ) பின்வரும் படத்திற்குப் பொருத்தமாக எவையேனும் ஐந்து தொடர் உருவாக்குக. ஒவ்வொரு தொடரிலும் ஒரு சொற்புணர்ச்சி வருவதுபோல் அமைத்துக்காட்டுக.**



**எ) ஓரிரு தொடரில் விடை கூறுக.**

1. புணர்ச்சி என்றால் என்ன? எடுத்துக்காட்டு தருக.
2. புணர்ச்சியின் பயன் என்ன?
3. பொன் + தாமரை – இவ்விரு சொல்லும் எவ்வாறு புணரும்?
4. கல்தாழை, கற்றாழை – இவ்விரண்டில் புணர்ச்சியின்படி அமைந்த சொல் எது?
5. தந்தப்பெட்டி, தந்த பெட்டி – இவ்விரு தொடரில் வல்லினம் மிகுவதாலும் மிகாததாலும் பொருள் மாற்றம் ஏற்படுமா? காரணம் கூறுக.
6. மாயிலை, மாவிலை – இவ்விரண்டில் எது சரி? ஏன்?
7. உயிரெழுத்துகளுள் எந்த எழுத்துக்கு இரண்டு உடம்படுமெய்யும் பொருந்தும்? எடுத்துக்காட்டு தருக.
8. பட்டாடை – இச்சொல்லைப் பிரித்துக்காட்டுக. இஃது எவ்வகைப் புணர்ச்சிக்குரியது?
9. கடல் – இச்சொல் மெய்ம்முதல் மெய்யீறா? உயிர்முதல் மெய்யீறா? விளக்கம் தருக.
10. நிலைமொழியின் ஈறும் வருமொழியின் முதலும் உயிரெழுத்தாக இருந்தால் எவ்வாறு புணரும்? அப்புணர்ச்சிக்கு உதவும் மெய்யின் பெயர் என்ன?

## விடைகள்

**அ) தொடரில் இடம்பெற வேண்டிய சரியான சொல்**

1. தமிழ்நாடு 2. கெடுதல் 3. இனிமை + சொல் 4. இணையத்தளம்
5. வேற்றுமைப் புணர்ச்சி

**ஆ) பொருத்துக**

| | | |
|---|---|---|
| 1. ஆடுகொடி | – | வினைத்தொகை |
| 2. செந்தாமரை | – | பண்புத்தொகை |
| 3. மலர்ப்பாதம் | – | உவமைத்தொகை |
| 4. தாய்தந்தை | – | உம்மைத்தொகை |
| 5. பூங்கொடி ஆடினாள் | – | அன்மொழித்தொகை |

**இ) "துளிப்பா" கவிதையில் புணர்ச்சிக்குரிய சொற்கள்**

நிலாப்பெண் = நிலா + பெண் (அல்வழிப் புணர்ச்சி – உவமை)

வெண்ணிலவு = வெண்மை + நிலவு (அல்வழிப் புணர்ச்சி – பண்பு)

கண்மணி = கண் + மணி (இயல்புப் புணர்ச்சி)

நீலவான் = நீலம் + வான் (விகாரப் புணர்ச்சி – கெடுதல்)

பாற்போல் = பால் + போல் (விகாரப் புணர்ச்சி – திரிதல்)

புதுக்கவிதை = புது + கவிதை (விகாரப் புணர்ச்சி – தோன்றல்)

**ஈ) தொடர்களில் அடிக்கோடிட்ட சொற்களின் சரியான புணர்ச்சி**

1. <u>கருங்குதிரை</u>
2. <u>திரைப்படக்காட்சி</u>
3. <u>பற்பொடி</u>
4. <u>எண்ணெய்</u>
5. <u>பூஞ்சோலை</u>

**உ) நுண்கதையில் பிழையாகப் புணர்ந்துள்ள சொற்கள்**

**பிழை – சரி**

கயிறுகட்டில் – கயிற்றுக்கட்டில்

பெருத்துளி – பெருந்துளி

வீடிற்குள் – வீட்டிற்குள்

வெளியேவிருந்த – வெளியேயிருந்த

நிலயொளி – நிலவொளி

பளபளயென – பளபளவென

**ஊ) படத்திற்குப் பொருத்தமான தொடர்களில் சொற்புணர்ச்சி**

1. **பறவைக்குஞ்சு** ஒன்று **கூட்டிலிருந்து** கீழே விழுந்தது.
2. **பூனையொன்று, பறவைக்குஞ்சைத்** தாக்க முனைந்தது.
3. அங்கு வந்த சிறுவன், **பூனையிடமிருந்து பறவைக்குஞ்சைக்** காப்பாற்றினான்.
4. தன் **தொப்பியில் பறவைக்குஞ்சைப் பாதுகாப்பாக** வைத்தான்.
5. பின்னர், **மரத்தின் மீதிருந்த கூட்டில், மற்றப் பறவைக்குஞ்சுகளுடன்** சேர்த்தான்.

**எ) ஓரிரு தொடரில் விடை**

1. புணர்ச்சி என்பது, ஒன்றோ ஒன்றுக்கு மேற்பட்டோ சொற்கள் புணர்ந்து வருவதாகும். சொற்கள் புணரும்போது, முதலில் வருவது நிலைமொழி, அதனை அடுத்துவருவது, வருமொழி ஆகும். (எ.கா.) பள்ளி + கல்வி = பள்ளிக்கல்வி
2. சொற்புணர்ச்சியை அறிந்துகொண்டால், பிழையின்றிப் பேசவும் எழுதவும் இயலும். செய்யுள், உரைநடை ஆகியவற்றில் சொற்புணர்ச்சியை அடையாளம் காணவும் அவற்றைப் பிரித்துப் பார்க்கவும் எவ்வகைப் புணர்ச்சி என அறிந்துகொள்ளவும் முடியும்.
3. பொன் + தாமரை = பொற்றாமரை
4. கற்றாழை
5. ஆம். பொருள் மாறும்.

    தந்தப்பெட்டி – யானையின் தந்தத்தால் ஆன பெட்டி

    தந்த பெட்டி – ஒருவர் மற்றவர்க்குக் கொடுத்த பெட்டி

6. மாவிலை என்பதே சரி. ஏனெனில், மா + இலை = மாவிலை. இங்கு நிலைமொழி ஈற்றெழுத்து (ம் + ஆ) உயிராக நிற்க, வருமொழி முதலெழுத்தும் இகர உயிராக

இருப்பதால், இவ்விரு சொல்லையும் இணைக்க 'வகர' உடம்படுமெய் தோன்றி, மா + வ் + இலை = மாவிலை என்றானது.

7. உயிரெழுத்துகளுள் **'ஏ'** என்னும் எழுத்துக்கு வகரமும் யகரமும் உடம்படுமெய்யாக வரும். (எ.கா.) சே + வ் + அடி = சேவடி / சே + ய் + அடி = சேயடி

8. பட்டாடை – பட்டு + ஆடை. இச்சொற்புணர்ச்சி, குற்றியலுகரப் புணர்ச்சிக்கு உரியது.

9. கடல் – இச்சொல் மெய்ம்முதல் மெய்யீறு. ஏனெனில், கடல் = **க்** + அ +ட் + அ + **ல்** என, மெய்முதல் தொடங்கி மெய்யிறுதியில் முடிகிறது.

10. நிலைமொழியின் ஈறும் வருமொழியின் முதலும் உயிரெழுத்தாக இருந்தால் யகரமெய் அல்லது வகரமெய் பெற்றுப் புணரும். இவ்விரு மெய்யும் உடம்படுமெய் என்றழைக்கப்படும். (உடம்படுமெய் = உடன்படுத்தும் மெய்)

## பாடம் – 5

## தனிச்சொல் – துணைவினை – மொழிநடை

### 5.0 முன்னுரை

எழுத்து, சொல், தொடர், புணர்ச்சி ஆகிய தலைப்புகளின்கீழ் பல்வேறு கருத்துகளை அறிந்துகொண்டோம். இப்பாடப்பகுதியில் தனிச்சொல், இணைப்புச்சொற்கள், இணைச்சொற்கள் அவற்றின் வகைகள், தனிவினை, கூட்டுவினை ஆகியவற்றைப் பற்றி அறிந்துகொள்வோம். மொழிநடை அதன் இன்றியமையாமை, செம்மையான மொழிநடைக்குத் தேவையான இன்றியமையாத கருத்துகள் ஆகியவற்றையும் வினா வகைகள், விடை வகைகள் ஆகியவற்றையும் தெரிந்துகொள்வோம்.

### 5.1 தனிச்சொல்

ஒரு சொல் தனித்து வந்து ஒரு பொருளைத் தந்தால் அது தனி மொழி அல்லது தனிச்சொல் எனப்படும்.

எ.கா. மரம், நீர், கடல்

ஒரு செய்யுளிலோ தொடரிலோ சில சொற்கள் தனித்துவந்து பொருள் தருவதுண்டு. எடுத்துக்காட்டாக,

**பொருட்டு** என்னும் சொல்

தடுப்பூசி செலுத்தும் பொருட்டு முகாம்கள் நடத்தப்பட்டன.

இந்தத் தொடரில் 'பொருட்டு' என்னும் தனிச்சொல் கட்டாயம் என்னும் பொருளில் வந்துள்ளது.

### 5.2 இணைப்புச் சொற்கள்

இணைப்பு என்றால் சேர்ப்பது என்று பொருள். இணைப்புச் சொல் என்பது சொல் அல்லது சொற்றொடர் அல்லது தொடர்க்கூறு ஆகியவற்றை இணைக்கப் பயன்படும் சொல் ஆகும்.

#### 5.2.1 இணைப்புச் சொற்களின் பயன்பாடு

நம்முடைய பேச்சில் இயல்பாகவே இணைப்புச் சொற்கள் இணைந்தே வருகின்றன. இதனால் எளிமை, சிக்கனம் கருதியும் கேட்பவர்க்கு விளங்கும் வகையிலும் தொடர்கள் அமைகின்றன. எடுத்துக்காட்டாக, 'இராமன் வந்தான்', 'சீதை வந்தாள்', என்று தனித்தனியாக இரு தொடரையும் கூறாமல், 'இராமனும் சீதையும் வந்தனர்' என்ற கூறலாம். இங்கு 'உம்' என்பது இணைப்புச் சொல்லாக உள்ளது. மேலும் சில எடுத்துக்காட்டுகள்,

- கயல் பள்ளிக்குச் சென்றாள்.
- கயலின் சகோதரி பள்ளிக்குச் சென்றாள்.

இவ்விரு தொடரையும் ஒரு தொடராகச் சொல்லும்போது 'கயலும் அவளின் சகோதரியும் பள்ளிக்குச் சென்றனர்' என வரும்.

- கருமேகங்கள் வானில் திரண்டன. **ஆயினும்** மழை பெய்யவில்லை.
- கண்ணன் பேருந்தில் செல்ல விரும்பினான். **ஆனால்** அவன் நண்பன் மிதிவண்டியே போதும் என்றான்.
- முகில் பள்ளிக்குச் செல்லவில்லை. **ஏனெனில்** அவனுக்கு உடல் நலமில்லை.
- அறிவு வளர்ச்சிக்குக் கணினி தேவை. **ஆகவே** கணினியை இயக்கத் தெரிதல் வேண்டும்.
- செழியனும் அமுதனும் வேகமாக ஓடுகிறார்கள்.
- கயல்விழி பரிசு**க்காகப்** பாடுகிறாள்.
- தமிழரசன் நடக்கிறான். **மேலும்** ஓடுகிறான்.
- அமுதன் வேலை செய்த **பிறகு** உண்கிறான்.
- மழை பெய்**ததால்** மரங்கள் வளர்கின்றன.
- மாடுகள், ஆடுகள் **இரண்டும்** மேய்கின்றன.
- செழியன் நன்றாகப் படித்தான். **ஆகையால்** அவன் தேர்வில் தேர்ச்சி பெற்றான்.
- மழை பெய்தது. **எனவே** நான் குடை எடுத்துச் சென்றேன்.
- நீங்கள் தேநீர் **அல்லது** குளிர்பானம் குடிக்கின்றீர்களா?
- பருவமழை பெய்தது. **அதனால்** ஏரி குளங்கள் நிரம்பின.
- பூக்கள் அழகாகப் பூத்திருக்கின்றன. **எனினும்** பறிக்க மனமில்லை.

இரண்டு நேர்மறையான தொடர்களை இணைக்கும் பொழுதும். இரண்டு எதிர்மறையான தொடர்களை இணைக்கும் பொழுதும் இணைப்புச் சொற்கள் பயன்படுத்தப்படுகின்றன.

**(எ.கா)**

**நேர்மறைத் தொடர்**

- நான் நன்றாகப் படித்தேன். **அதனால்** நல்ல மதிப்பெண் பெற்றேன்.

**எதிர்மறைத் தொடர்**

- நான் நன்றாகப் படிக்கவில்லை. **அதனால்** தேர்ச்சி பெறவில்லை.

மேலே உள்ள தொடர்களில் இடம்பெற்றுள்ள **ஆயினும், ஆனால், ஏனெனில், ஆகவே, ஆக, மேலும், ஆல், உம், அதனால், ஆகையால், எனவே, அல்லது, எனினும்** இணைப்புச் சொற்கள் ஆகும். இவை போன்ற இணைப்புச் சொற்கள் நாம் பேசும் பேச்சில் இயல்பாகவே இடம்பெறுகின்றன. இவற்றைப் பொருத்தமான இடங்களில் பயன்படுத்திப் பேசவும் எழுதவும் நாம் அறிந்துகொள்ள வேண்டும்.

**இணைச் சொற்கள்**

தமிழ்மொழியில் சில சொற்கள் இணை இணையாக அமையும். இவற்றை இணைச் சொற்கள் என்பர். இவற்றைப் பொருத்தமான இடங்களில் பயன்படுத்தினால் கருத்து தெளிவாகப் புரியும்.

- **இணைச் சொற்களை மூவகையாகப் பிரிக்கலாம். அவையாவன,**

1. நேர் இணைச்சொற்கள்
2. எதிர் இணைச்சொற்கள்
3. செறியிணைச்சொற்கள்

### 5.2.3.1 நேர் இணைச்சொற்கள்

ஒரே பொருளைத் தரும் இரு சொல் இணைந்து வருவது நேர் இணைச்சொல் எனப்படும்.

**எ.கா.**

கவிதாவிற்குப் பிறந்துள்ள பெண் குழந்தை மூக்கும் முழியுமாக இருக்கிறாள். இந்தத் தொடரில் வந்துள்ள மூக்கும் முழியும் என்னும் இரண்டு நேர் இணைச் சொற்களும் அழகு என்னும் பொருளில் சொல்லப்பட்டுள்ளது.

1. அன்பும் அருளும்
2. பேரும் புகழும்
3. ஆற அமர
4. சீரும் சிறப்பும்
5. ஈடும் இணையும்
6. கள்ளம் கபடம்
7. உற்றார் உறவினர்
8. பாயும் படுக்கையும்
9. நோய் நொடி

10. தங்கு தடை
11. குற்றம் குறை
12. ஏச்சுப் பேச்சு
13. முட்டி மோதி
14. கூன் குருடு
15. ஒட்டி உலர்ந்து
16. வாடி வதங்கி
17. தப்பித் தவறி
18. வாட்ட சாட்டம்
19. வாயும் வயிறும்
20. நாணிக் கோணி
21. சீறிச் சினந்து
22. முக்கலும் முனங்கலும்
23. இடுக்கு மிடுக்கு
24. எடக்கு மடக்கு

### 5.2.3.2 எதிர் இணைச்சொற்கள்

ஒன்றுக்கொன்று முரண்பட்ட இருசொல் இணைந்து வருவது எதிர் இணைச் சொற்கள் எனப்படும்.

**எ.கா.**

செழியன் அல்லும் பகலும் படித்தான். இந்தத் தொடரில் அல்லும் பகலும் என்பது இரவும் பகலும் படித்ததை உணர்த்துகிறது.

1. அடியும் முடியும்
2. இருளும் ஒளியும்
3. உயர்வு தாழ்வு
4. வடக்கும் தெற்கும்
5. உள்ளும் புறமும்

6. கிழக்கும் மேற்கும்
7. உச்சி முதல் உள்ளங்கால் வரை
8. ஏட்டிக்குப் போட்டி
9. குறுக்கும் நெடுக்கும்
10. மேடு பள்ளம்
11. கனவு நனவு

### 5.2.3.3 செறியிணைச்சொற்கள்

ஒரு சொல்லின் பண்பு அல்லது செயலை வலுப்படுத்தும் விதமாக ஒரே பொருள் உடைய இரு சொல் இணைந்து வருவது செறியிணைச்சொற்கள் எனப்படும். இவை இருவகைப்படும்.

1. பண்பு செறியிணைச்சொற்கள்
2. செயல் செறியிணைச்சொற்கள்

- **பண்பு செறியிணைச்சொற்கள்**

ஒரு சொல் பண்பு அடிப்படையில் இரு முறை வந்து அதன் பொருளை விளக்குவது பண்பு செறியிணைச்சொற்கள் ஆகும்.

**எ.கா.** செக்கச்செவேல் என்னும் சிவப்பு நிறம் இரண்டு முறை வந்து சிவப்பின் பண்பினைச் செறிவுபடுத்துகிறது.

1. வெள்ளைவெளேர்,
2. பச்சைப்பசேல்,
3. நட்டநடுவில்

- **செயல் செறியிணைச்சொற்கள்**

வினைச்சொற்கள் சிலவற்றை அடுக்குத் தொடர்களாகக் கொண்டு கருத்தை அல்லது செயலை விளக்குவது செயல் செறியிணைச் சொற்கள் எனப்படும்.

**எ.கா.** அமுதன் தன் தந்தையிடம் அழுதழுது மிதிவண்டியை வாங்கினான். இதில் அழுதல் என்னும் வினைச்சொல் அழுதழுது என்னும் அடுக்குத் தொடராக வந்து செயலைச் செறிவுபடுத்துகிறது.

1. நடந்து நடந்து,
2. கொஞ்சிக் கொஞ்சி,
3. பார்த்துப் பார்த்து,
4. தேடித்தேடி,
5. வந்துவந்து.

### 5.3 எதிர்ச் சொற்கள்

ஒரு சொல்லுக்கு நேர் எதிர்ப் பொருளைக் குறிக்கும் சொல் எதிர்ச்சொல் ஆகும்.

**எ.கா.** இராமன் வந்தான். கண்ணன் போனான். இங்கு வந்தான் என்னும் நேர்ச் சொல்லுக்குப் போனான் என்பது எதிர்ச் சொல் ஆகும்.

| | | | |
|---|---|---|---|
| 1. | வா | X | போ |
| 2. | இல்லை | X | உண்டு |
| 3. | தீமை | X | நன்மை |
| 4. | குறை | X | நிறை |
| 5. | அதிகம் | X | குறைவு |
| 6. | தொடக்கம் | X | முடிவு |
| 7. | இரவு | X | பகல் |
| 8. | எளிது | X | கடினம் |
| 9. | சுறுசுறுப்பு | X | சோம்பல் |
| 10. | இளமை | X | முதுமை |
| 11. | விருப்பு | X | வெறுப்பு |
| 12. | விரைவாக | X | மெதுவாக |
| 13. | வெற்றி | X | தோல்வி |
| 14. | பெருமை | X | சிறுமை |

### 5.4 துணைவினைகள்

வினைச்சொற்களை அவற்றின் அமைப்பு, பொருள், சொற்றொடரில் அவை தொழிற்படும் விதம் முதலான அடிப்படைகளில் பல வகையாகப் பிரிக்கலாம்.

வினைச்சொற்கள் என்பது தொழில் அல்லது செயலைக் குறிக்கும். இவை காலம் காட்டும் இடைநிலைகளையும் பால், எண் காட்டும் விகுதிகளையும் பெற்று வரும். ஒவ்வொரு வினைச்சொல்லுக்கும் தனித்தனியே சொற்பொருள் உண்டு.

**எ.கா.**

பார் என்னும் வினைச்சொல் பார்த்தல் அல்லது காணுதல் என்ற தனிப்பொருளைத் தரும். இது போன்றே **இரு, பாடு, ஆடு, செய், அழு, தள்ளு** போன்ற வினைச் சொற்களும் தமக்கென்று தனித்தனிப் பொருளைத் தரும்.

முதல் வினைக்குத் துணையாக வேறு இலக்கணப் பொருளைத் தரும் வினை, துணைவினை எனப்படும். துணைவினை என்பது இன்னொரு வினையுடன் சேர்ந்து வருகின்ற நிலையில் தன் பொருளை இழந்து சேர்ந்துவரும் வினைக்குப் புதிய பொருளைத்தரும் வினைச்சொல் ஆகும்.

தமிழில் **இரு** என்பது தனியே வரும்போது **இருத்தல்** எனும் பொருளைத் தருகிறது. அதுவே **போ, வா, செய், படு** போன்ற வினைகளுடன் சேரும்போது **போயிருந்தான், வந்திருந்தான், செய்திருந்தான், படுத்திருந்தான்** என்றாகிறது. இங்கு **இரு** என்பது துணை வினைப் பொருளைத் தருகிறது.

தமிழில் துணை வினை, தலைமை வினைக்குப் பிறகு வருகின்றது. தலைமை வினைகள் எப்போதும் போய், வந்து, செய்து, படுத்து போன்ற வினையெச்ச வடிவிலேயே வருகின்றன. துணைவினை படுத்திரு, செய்துவிடு, என்பவற்றில் வருவதுபோல் ஏவல் வினையாக அல்லது போயிருந்தான், வந்துவிட்டான் என்பவற்றில் உள்ளதுபோல் முற்றுவினை வடிவத்தில் வருகின்றது.

தற்காலத் தமிழில் **விடு, அடி, அருள், அழு, ஆயிற்று, இடு, இரு, எடு, ஒழி, கட்டு, கிட, கிழி, கூடு, கொடு, கொள், தள்ளு, தீர், தொலை, நில், படு, பண்ணு, பார், பிடி, போ, போக, போடு, மாட்டு, முடி, வா, வாங்கு, வேண்டு, வை** போன்ற நாற்பதிற்கும் மேற்பட்ட வினைகள் துணைவினைகளாக வழங்குகின்றன. இத்துணைவினைகள் **முயற்சி, பலன் அளிக்காமை, உறுதி, துணிவு, முடிவு, மிகுதி, காரணம், கண்டிப்பு, வெறுப்பு, கோபம், சிறப்பு** போன்ற பல்வேறு பொருள்களை உணர்த்துவனவாக அமைந்துள்ளன. இவற்றில் ஒன்றிற்கு மேற்பட்ட பொருள்களை உணர்த்தும் வகையிலும் சில துணைவினைகள் அமைந்துள்ளன.

**எ.கா**

**விடு**

இத்துணைவினை உறுதிப்பொருளைத் தருகிறது.

**எழுதிவிடு**

இதற்குப் **பொருள் எழுது** என்பதாகும். ஆனால் **எழுது** என்பதில் இல்லாத உறுதிப்பொருள் **எழுதிவிடு** என்பதில் உள்ளது. **விடு** என்ற துணைவினையே அப்பொருளைத் தருகிறது. அதேபோல எழுதினேன், எழுதுகிறேன், எழுதுவேன் என்ற வினைச் சொற்களில் இல்லாத உறுதிப்பொருள், அவ்வினைச் சொற்களோடு விடு என்ற துணைவினையைச் சேர்த்து முறையே எழுதிவிட்டேன், எழுதிவிடுகிறேன், எழுதிவிடுவேன் என்று கூறும்போது இருப்பதைக் காணலாம். ஆக, **விடு** என்னும் துணைவினைக் **கட்டாயம் அல்லது கண்டிப்பு** என்ற பொருளைத் தருவதாகவும் வழங்குகிறது.

### 5.4.1 துணை வினைகளின் பண்புகள்

- துணை வினைகள் பேசுவோரின் மனநிலை, செயலின் தன்மை போன்றவற்றை வெளிப்படுத்துகின்றன.
- இவை முதல்வினையைச் சார்ந்து அதன் வினைப்பொருண்மைக்கு வலுச்சேர்க்கின்றன.
- பேச்சுமொழியில் துணைவினைகளின் ஆதிக்கம் அதிகமாக உள்ளது.

### 5.5. தனிவினையும் கூட்டுவினையும்

வினைச்சொற்களை அமைப்பின் அடிப்படையில் இருவகையாகப் பிரிக்கலாம்.

1. **தனி வினை**
2. **கூட்டு வினை**

### 5.5.1 தனிவினை

ஒரு வினைச் சொல்லானது பொருள் தரக்கூடிய பல கூறுகளாகப் பிரிக்க முடியாத போது அது தனி வினை எனப்படும்.

**எ.கா**

- நில்
- நின்றான்
- நிற்கிறார்கள்

மேலுள்ள சொற்களில் நில் என்ற சொல் வினையடியாகும். இச்சொல்லை பொருள் தரக்கூடிய வகையில் மேலும் பிரிக்க முடியாது. அதே போல் நின்றான் நிற்கிறார்கள் போன்ற வினைச் சொற்களும் நில் என்ற வினை அடியோடு பல ஒட்டுக்கள் சேர்ந்து உருவாக்கம் பெற்றுள்ளன.

- நில் + ற் + ஆன்
- நில் + கிறு + ஆர்கள்

இவற்றுள் நிலை என்ற வினை அடியை தவிர்த்து ஏனையவை அனைத்தும் ஒட்டுக்கள் எனப்படும். இந்த ஒட்டுக்கள் தனித்து நின்று பொருள் உணர்த்துவது இல்லை. இலக்கணப் பொருளை மட்டுமே உணர்த்தும். ஆகவே, இவ்வாறு பல கூறுகளாகப் பொருள் தரக்கூடிய வகையில் பிரித்து நோக்க முடியாத வினைச்சொற்கள் தனி வினைகள் எனப்படும்.

### 5.5.2 கூட்டுவினை

ஒரு வினைச் சொல்லானது பொருள் தரக்கூடியவாறு பல கூறுகளாகப் பிரிகின்ற போது அது கூட்டுவினை எனப்படும். இங்கு இரு சொல் கூட்டு சேர்ந்து ஒரு வினைச்சொல்லாக செயற்படும். பிரித்தால் இரண்டும் இரு வேறு பொருளைத் தருவனவாகவும் அமையும்.

**எ.கா**

- தந்தியடி
- கைப்பிடி
- தட்டிக்கேள்

மேலே உள்ள சொற்களைத் தந்தி + அடி, கை + பிடி, தட்டி + கேள் என்றவாறு பிரித்து நோக்க முடியும். இவ்வாறு பிரிகையில் தந்தி என்பது பெயர்ச் சொல்லாகவும் அடி என்பது வினைச்சொல்லாகவும் இருவேறு பொருளை உணர்த்துகின்றன. கைப்பிடி என்ற சொல்லில் கை என்பது பெயர்ச் சொல்லாகவும் பிடி என்பது வினைச்சொல்லாகவும் அமைந்து காணப்படுகின்றது. அதேபோல் தட்டிக்கேள் என்ற வினைச்சொல் தட்டி என்ற வினையையும் கேள் என்ற வினையையும் உணர்த்துகின்றது.

## 5.6 மொழிநடை

கதை அல்லது கட்டுரை எழுதுவோர் தம் கருத்தைப் படிப்போர் விரும்பும் வகையில் எழுதும் முறையை அல்லது எழுதும் பாங்கினை மொழிநடை என்பார்கள். எழுத்தின் வெற்றி, எழுதும் பாங்கினைப் பொறுத்து அமையும் என்பர் சான்றோர்.

நாம் நூல்களை படிக்கும் பழக்கம் உடையவராக இருந்தால், குறிப்பிட்ட ஒரு நூலின் நடையமைப்பு எப்படி உள்ளது என அறிந்திருப்போம். குறிப்பிட்ட எழுத்தாளரின் கதைகளைப் படிக்கும் வழக்கம் இருந்தால், அந்த எழுத்தாளரின் எழுத்துநடை எப்படி இருக்கும் என்று நமக்குத் தெரியும். இவ்வாறு ஒரு கதையோ கட்டுரையோ உரைநடையோ படிக்கும்போது, அதற்கெனத் தனிநடையமைப்பு கொண்டிருப்பதை மொழிநடை என்கிறோம். மொழிநடை என்பது, படிப்போரைக் கவரும் வகையில் அமையவேண்டும். இல்லையெனில், அந்த நூல் எதற்காக எழுதப்பட்டதோ அதற்கான நோக்கம் நிறைவேறாமல் போகும்.

பொதுவாகக் கடினமான மொழிநடையை யாரும் விரும்புவதில்லை. இங்குக் கடினம் என்று கூறுவது, சொல்லுக்குச் சொல் பொருள் அறியவேண்டிய நிலையில் இருக்கும் நடையமைப்பு ஆகும். எளிய நடையில் படிப்போரை ஈர்க்கும் வகையில் சொல்ல வேண்டிய கருத்தைத் தெளிவாகக் கொண்டு செல்லும் நடையமைப்பை அனைவரும் விரும்புவர்.

மொழிநடைகள் பல வகைப்படும். அவை, தனித்தமிழ் நடை, அடுக்குமொழி நடை, எளிய நடை, இனிய நடை, வினா – விடை நடை, மணிப்பிரவாள நடை, கலப்பு மொழி நடை எனப் பலவாகும்.

**பலவகையான நடையமைப்புகள்**

- ❖ கொடுந்தமிழ் நடை – கொச்சை மொழியில் இருக்கும்.
- ❖ செந்தமிழ் நடை – பிழையின்றி நல்ல தமிழில் இருக்கும்.
- ❖ திரிசொல் நடை – கடினமான சொற்கள் இருக்கும்.
- ❖ இயற்சொல் நடை – எளிய சொற்கள் இருக்கும்.
- ❖ இலக்கிய நடை – எதுகை, மோனை நயங்கள் இருக்கும்.
- ❖ கலப்புமொழி நடை – பிறமொழிச் சொல், வடசொல் கலந்திருக்கும்.
- ❖ தனித்தமிழ் நடை – தூய தமிழ்ச்சொற்கள் இருக்கும்.
- ❖ அடுக்குமொழி நடை – சொற்கள் அடுக்கப்பட்டுச் சொல்லழகுடன் இருக்கும்.
- ❖ பழந்தமிழ் உரைநடை – உரையாசிரியர்களின் மிடுக்கான நடையிருக்கும்.
- ❖ செம்மாப்பு மொழிநடை – கடின சந்திகளைக் கொண்டிருக்கும்.
- ❖ தெளிவுநடை – கருத்துத் தெளிவுடன் இருக்கும்.
- ❖ வினா–விடை நடை – வினாவும் விடையும் உரையில் விரவியிருக்கும்.

**இனிய உரைநடை**

பிழையில்லாச் சொற்கள், செறிவான தொடர்கள், கருத்துத் தொடர்ச்சி கொண்ட சிறு சிறு உரைப்பகுதிகள் என இவையாவும் இணைந்த ஓர் உரைநடையை நாம் எழுதவேண்டுமானால், அழகிய, இனிய மொழிநடையில் எழுதப்பட்டுள்ள நூல்களைப் படித்துணர வேண்டும்.

**கருத்துத் தெளிவு**

உரைநடை எளிய நடையில் இருப்பது, படிப்பவர்க்குக் கருத்தைத் தெளிவை எளிதில் புரியவைக்கும். தமிழில் நூல்கள் எழுத விரும்புவோர், பிறமொழிச் சொற்கள் கலவாமல் எழுதுவது சிறப்பைச் சேர்க்கும்.

**மேற்கோள்**

உரைநடையில் மிகுதியாக மேற்கோள் பயன்படுத்துவது அறிவுக் குறைவைக் காட்டும். இக்காலத்தில் தேவையான இடங்களில் மட்டுமே மேற்கோள் அளவாகப் பயன்படுத்தப்படுகிறது.

**இனிய சொற்றொடரும் மரபும்**

படிப்பவர்க்குச் சுவையூட்டும் வகையில் இனிய சொற்றொடர்களைப் பயன்படுத்தலாம். ஆனால், அவை அளவுக்குமீறி இருக்கக்கூடாது. மரபுத்தொடர்களின் பொருளறிந்து தேவையான இடங்களில் பயன்படுத்தி எழுதவேண்டும்.

**பழமொழிகள்**

உரைப்பகுதியில் இன்றியமையாத இடங்களில் பழமொழிகள் இடம்பெறுவது சிறப்பைத் தரும். ஆனால், எழுதுபவருக்குப் பல பழமொழிகள் தெரிந்திருந்தாலும் அவை அனைத்தும் இடம்பெற வேண்டும் என்பது படிப்பவருக்குச் சலிப்பை ஏற்படுத்தும்.

**அணிகள்**

பொதுவாகச் செய்யுள்களில் அணிகளுக்கு இன்றியமையாத இடம் உண்டு. 'அணியில்லா கவிதை பணியில்லா வனிதை' என்பது, அணிக்கு அளிக்கப்படும் முதன்மையைக் கூறும். உரைநடையில் விளக்கத்திற்காகவும் சுருக்கத்திற்காகவும் அழகுக்காகவும் உவமை, உருவகம் முதலிய அணிகளை அமைத்து எழுதலாம்.

**சந்திகள்**

இருசொல்லுக்கிடையே அமைவதே சந்தி. தேவையான இடங்களில் பொருள் மயக்கம் ஏற்படாதவாறு சந்தி பிரித்தல் வேண்டும். 'அப்பாவைப் பார்த்தாள்' இத்தொடரில் ஒரு பெண் தன் தந்தையைப் பார்த்தாள் எனப் பொருள் தருகிறது. ஆனால், உண்மையில் 'அப் பாவைப் பார்த்தாள் என்பது, அந்தப் பாவை (பெண்) பார்த்தாள் எனப் பொருள் தருகிறது. ஆகையால் சரியான சந்தி பிரிப்பு எது என அறிந்துகொள்ள வேண்டும். 'நானூறு தந்தேன்' என்பது, நானூறு ரூபாய் தந்தேன் எனவும் நான் நூறு தந்தேன்' என்பது, நான் யாரோ ஒருவருக்கு நூறு ரூபாய் தந்து உதவினேன் என்னும் பொருளையும் தருகிறது. எனவே, பொருள் நோக்கி இடம்விட்டும் இடம்விடாமலும் எழுதவேண்டும்.

### 5.6.1 மொழி நடைக்குச் சில சான்றுகள்

**"இயற்கையின் நோக்கம் என்ன? உலகை ஓம்ப வேண்டும் என்பதா? அல்லது அதை அழித்தல் வேண்டும் என்பதா? இயற்கை அன்னை ஒருபோதும் உலகை அழிக்க முனைந்து நில்லாள்".** இது திரு.வி.க அவர்களின் வினா விடை நடை.

**"தமிழ் உமது முரசாகட்டும் பண்பாடு உமது கவசம் ஆகட்டும். அறிவு உமது படைக்கலன் ஆகட்டும் அறநெறி உமது வழித்துணை ஆகட்டும் உறுதியுடன் செல்வீர் ஊக்கமுடன் பணிபுரிவீர்"** இது அறிஞர் அண்ணாவின் உணர்ச்சி நடை.

## 5.7 மொழிச் செம்மை

பொருள் திரிபடையாமல் இலக்கண முறைக்கு ஏற்ப எழுதப்படுதலே மொழிச் செம்மை எனப்படும்.

### 5.7.1 கருத்துகளைத் தெளிவாக முன்வைத்தல்

சொற்கள் அல்லது தொடர்கள் குற்றமற்றதாக இருக்க வேண்டும். அப்பொழுதுதான் தான் சொல்ல வந்த கருத்துகளைப் பிறருக்கு எளிமையாகப் புரிய வைக்க முடியும்.

### 5.7.2 பொருத்தமான மொழிப் பயன்பாடு

தேவையான இடங்களில் பொருத்தமான உதாரணங்கள், மேற்கோள்கள், ஆதாரங்களை எடுத்துக்காட்டி கருத்துகளை முன் வைத்தல்.

## 5.8 மொழிநடை அமையும் பாங்கு

- எளிமையான மொழிநடையில் எழுதுதல்.
- சுருக்கமாக எழுதுதல்.
- வாசிப்பவருக்கு இன்பத்தைத் தரும் வகையில் எழுதுதல்
- பேச்சு வழக்குச் சொற்களைத் தவிர்த்து இயல்பு வழக்கில் எழுதுதல்.
- பிழை இல்லாமல் எழுதுதல்.
- பிறமொழிச் சொற்கள் கலக்காமல் எழுதுதல்.
- தன்மை, முன்னிலையில் எழுதுவதைத் தவிர்த்தல்.
- பொருளற்ற வெற்றுச் சொற்களைத் தவிர்த்தல்.
- வருணனைகள், புகழ்ச் சொற்கள், அளவுக்கதிகமான பெயர், வினை, அடைகளைத் தவிர்த்தல்.
- பொருத்தமான சொற்களை எழுதுதல்.
- ஆழ்ந்த கருத்தை உடையதாக எழுதுதல்.
- கட்டுரையில் கடினமான சொற்களைத் தவிர்த்தல்

## 5.9 வினா – விடை வழங்கும் முறைகள்

ஒன்றைப் பற்றி அறிந்துகொள்ள ஒருவரை ஒருவர் கேள்வி கேட்கின்றனர். இதை வினா என்கின்றனர். வினாவிற்கு ஏற்ப விடையளிப்பதுதான் மொழிநடையின் சிறப்பு.

- ஒருவனிடம் தேர்வு நாளை நடைபெறுமா? எனக் கேள்வி கேட்க,

  என் தங்கை ஏழாம் வகுப்பில் படிக்கிறாள் எனப் பதில் கூறுவது தவறு.

  கேள்வியும் கேள்விக்கு உரிய விடையும் பொருத்தமாக அமைவதே வினா விடை ஆகும்.

### 5.9.1 விடை வகைகள்

நாம் பிறரிடம் கேட்கும் கேள்விக்குப் பல்வேறு வகையில் விடைகளைக் கூற முடியும். அவ் விடைகள் எட்டு வகைப்படும்.

1. சுட்டு விடை
2. மறை விடை
3. நேர் விடை

4. ஏவல் விடை

5. வினா எதிர் வினாதல் விடை

6. உற்றது உரைத்தல் விடை

7. உறுவது கூறல் விடை

8. இனமொழி விடை

○ **சுட்டு விடை**

"காரைக்குடிக்கு வழி யாது?" என்று வினவினால் இது என்பது போலச் சுட்டிக் கூறும் விடை சுட்டுவிடை.

கிளைநூலகம் எங்குள்ளது? என்ற வினாவிற்கு வலப்பக்கத்தில் உள்ளது எனக் கூறுவது சுட்டுவிடை.

○ **மறைவிடை (எதிர் மறுத்துக் கூறல் விடை)**

"இதனைப் படி" என்று கூறிய போது படிக்க மாட்டேன் என்று எதிர் மறுத்து விடை கூறுவது மறை விடை எனப்படும்

செழியா, விளையாடினாயா? என்னும் வினாவிற்கு 'விளையாடவில்லை' எனக் கூறுவது மறைவிடை எனப்படும். இங்கு மறை என்பது எதிர்மறை எனப் பொருள்படும்.

○ **நேர்விடை (உடன்பட்டுக் கூறுதல்)**

'இதைச் செய்வாயா?' என்று வினவியபோது 'செய்வேன்' என்பதுபோல் உடன்பட்டுக் கூறும் விடை நேர்விடை எனப்படும்.

'செழியன் விளையாடினாயா?' என்னும் வினாவிற்கு 'விளையாடினேன்' எனக் கூறுவது நேர்விடை எனப்படும்.

○ **ஏவல் விடை**

'இதைச் செய்வாயா?' என்று வினவியபோது 'நீயே செய்' என்று ஏவிக் கூறுவது ஏவல் விடை.

வினவியவரையே ஏவுவதால் ஏவல் விடை எனப்படும்.

கபிலா, நீ பாடுவாயா? என்னும் வினாவிற்கு 'நீயே பாடு'என்று விடை கூறுவது.

○ **வினாஎதிர் வினாதல் விடை**

'இதைச் செய்வாயா?' என்று வினவியபோது 'செய்யாமலிருப்பேனா?' என்று வினாவையே விடையாகக் கூறுவது வினா எதிர் வினாதல் விடை எனப்படும்.

முகிலா தேர்வுக்குப் படித்தாயா? என்னும் வினாவிற்கு 'நான் படிக்காமல் இருப்பேனா' என விடையளிப்பது வினா எதிர் வினாதல் விடை எனப்படும்.

- **உற்றது உரைத்தல் விடை**

"இதனைச் செய்வாயா?" என்று வினா கேட்கும் போது, உடம்பு வலித்தது என்று தனக்கு நடந்ததைக் கூறுவது உற்றது உரைத்தல் விடை எனப்படும்.

நீ ஓடினாயா? என்னும் வினாவிற்குக் 'கால் வலித்தது' எனத் தனக்கு நேர்ந்ததைக் கூறுவது உற்றது உரைத்தல் விடை எனப்பட்டது.

- **உறுவது கூறல் விடை**

"இதைச் செய்வாயா?" என்று வினவியபோது 'கை வலிக்கும்' எனத் தனக்கு வரப்போவதை விடையாகக் கூறுவது உறுவது கூறல் விடை எனப்படும்.

"நீ இதனைச் சாப்பிடுவாயா?" என்னும் வினாவிற்கு 'வயிறு வலிக்கும்' எனத் தனக்கு நிகழ உள்ளதைக் கூறுவதால் இதனை உறுவது கூறல் விடை எனப்படும்.

- **இனமொழி விடை**

"ஆடுவாயா?" என்று வினவிய போது "பாடுவேன்" என்று ஆடுவதற்கு இனமான பாடுவதனை விடையாகக் கூறுவது இனமொழிவிடை.

ஒன்றை வினவ அதற்கு இனமான வேறு ஒன்றைக் கூறுவது இனமொழி விடை எனப்படும்.

### 5.9.2 வினா வகைகள்

மொழியின் வளர்ச்சி என்பது கேள்வி கேட்பதிலும் கூட இருக்கிறது. பல்வேறு சூழல்களில் கேள்விகள் கேட்கிறோம் இக்கேள்வி அல்லது வினா ஆறு வகைப்படும்.

1. அறிவினா
2. அறியாவினா
3. ஐயவினா
4. கொளல் வினா
5. கொடை வினா
6. ஏவல் வினா

- **அறிவினா**

தனக்குத் தெரிந்த விடை பிறருக்குத் தெரியுமா? என்பதை அறியும் வகையில் கேட்கப்படும் வினா அறிவினா எனப்படும்.

**எ.கா**

**"திருக்குறளை இயற்றியது யார்?"**

என்று ஆசிரியர் மாணவரிடம் கேட்கிறார். இந்தக் கேள்விக்குப் பதில் ஆசிரியருக்குத் தெரியும். மாணவர்களுக்கு தெரிகிறதா? என்பதைத் தெரிந்து கொள்ள கேட்கப்படும் வினா அறிவினா எனப்படும்.

- **அறியா வினா**

தனக்குத் தெரியாத ஒன்றைத் தெரிந்துகொள்ள மற்றவரிடம் கேட்கப்படும் வினா அறியா வினா எனப்படும்.

**எ.கா.**

**"தொட்டனைத் தூறும் மணற்கேணி மாந்தர்க்குக்**
**கற்றனைத் தூறும் அறிவு"**

என்னும் குறளின் விளக்கம் என்ன என்று மாணவன் ஆசிரியரிடம் கேட்டுத் தெரிந்துகொள்வதற்காகக் கேட்கப்படும் வினா அறியா வினா எனப்படும்.

- **ஐய வினா**

தனக்கு ஏற்பட்ட ஐயத்தைப் போக்கிக்கொள்ள கேட்கப்படும் வினா ஐய வினா எனப்படும்.

**எ.கா.**

**அட்சய பாத்திரத்தால் பசிப்பிணியைப் போக்கியது மணிமேகலையா? மாதவியா?** என்று கேட்கப்படும் வினா ஐய வினா எனப்படும்.

- **கொளல் வினா**

ஒரு பொருளை மற்றவரிடம் இருந்து வாங்கிக் கொள்ளும் வகையில் கேட்கப்படும் வினா கொளல் வினா எனப்படும்.

**எ.கா.**

**ஜெயகாந்தன் சிறுகதைகள் இருக்கிறதா? என்று நூலகரிடம் மாணவரால் கேட்கப்பட்ட** வினா கொளல் வினா எனப்படும்.

- **கொடை வினா**

பிறருக்கு ஒரு பொருளைக் கொடுத்து உதவும் விதமாகக் கேட்கப்பட்ட வினா கொடை வினா எனப்படும்.

**"உன்னிடம் பாரதியாரின் கவிதை நூல் இருக்கிறதா?"** இல்லை என்றால் தன்னிடம் உள்ள இரண்டு பாரதியாரின் கவிதை நூலில் ஒன்றினை கொடுக்கும் விதமாகக் கேட்கப்பட்ட வினா கொடை வினா எனப்படும்.

- **ஏவல் வினா**

ஒரு செயலைச் செய்யுமாறு ஏவும் வினா ஏவல் வினா எனப்படும்.

**"வீட்டில் தக்காளி இல்லை. நீ கடைக்குச் செல்கிறாயா?"** என்று அக்கா, தம்பியிடம் ஏவும் தன்மையில் கேட்கப்படும் வினா ஏவல் வினா எனப்படும்.

### 5.10 தொகுப்புரை

இப்பாடப்பகுதி வாயிலாக இணைப்புச்சொற்கள் எவையெவை, அவை தொடர்களில் பெறுமிடங்கள், அவற்றை எங்கு, எப்படிப் பயன்படுத்தவேண்டும் என்பது குறித்துத் தெளிவாக அறிந்துகொண்டோம். இணைச்சொற்களின் பெயர்க்காரணம், அவற்றின் வகைகள், அவற்றைப் பயன்படுத்தித் தொடர்களை உருவாக்குதல் முதலிய கருத்துகளையும் புரிந்துகொண்டோம். மேலும், மொழிநடையின் இன்றியமையாமை, எத்தகைய மொழிநடைகள் நூல்களில் காணப்படுகின்றன என்பது குறித்தும் பார்த்தோம். அறுவகை வினா, எண்வகை விடை ஆகியவற்றையும் அறிந்துகொண்டோம். இவற்றைப் புரிந்துகொண்டு, பிழைநேராமல் எழுத்திலும் பேச்சிலும் பயன்படுத்துவோம்.

**அறிவோம் தெளிவோம்**

**ஓர் அழகான கிளியைக் கண்டேன், அழகான கிளியைக் கண்டேன் – எந்தத் தொடர் சரியானது?**

அழகான கிளியைக் கண்டேன் என்னும் தொடரே சரியானது. இரு தொடரமைப்பையும் உற்றுநோக்குவோம். முதல் தொடரில், ஓர் அழகான கிளி என்னும் சொற்றொடரைப் படிக்கும்போது, அழகான கிளிதான். ஆனால், கிளியின் ஏதோ ஒரு பகுதி மட்டும் அழகாக உள்ளது என்னும் பொருள் தருகிறது. அந்தக் கருத்தைத் தருவது, ஓர் என்னும் எண்ணடைச் சொல். அழகான என்னும் பெயரடை, கிளிக்கு ஆகிவர, ஓர் என்னும் அடை, அழகான என்னும் பெயரடைக்கு ஆகிவருகிறது. இத்தொடரில், பார்த்தது என்னவோ ஒரு கிளியைத்தான். அவ்வாறிருக்க, ஓர் என்னும் அடைமொழி வரவேண்டிய தேவையில்லை. இஃது, ஆங்கிலமொழிக் கலப்பினால் ஏற்பட்ட தாக்கம் எனலாம். 'I saw a beautiful parrot' என்பதன் ஆக்கமாக இத்தொடர் உள்ளது.

இரண்டாவது தொடரில், நான் கிளியைப் பார்த்தேன். அஃது அழகாக இருந்தது என்னும் பொருளைத் தருகிறது. இத்தொடர் பொருள் தெளிவை ஏற்படுத்துகிறது.

**பயிற்சிகள்**

**அ) பின்வரும் தொடர்களில் சரியான சொல்லைத் தேர்ந்தெடுத்து நிரப்புக.**

1. மின்னல் மின்னியது, இடி இடித்தது. ______மழை பெய்யவில்லை. (அதனால்/ ஆனால்)
2. எனக்குக் கண்வலி. ______மருத்துவரிடம் செல்கிறேன். (ஆகையால்/ ஆனால்)
3. ஊருக்கு ஒரு நூலகம் வேண்டும். ______நூல்கள் அறிவைப் பெருக்கும். (அதனால்/ ஏனெனில்)
4. இன்று கண்ணனுக்கு விடுமுறை நாள். ______சரியான நேரத்திற்கு எழுந்துவிட்டான். (ஆனாலும்/ ஆகவே)
5. வளர்மதிக்கு உடல்நலம் சரியில்லை. ______பள்ளிக்கு வரவில்லை. (அப்படியானால் /அதனால்)

**ஆ) பின்வரும் தொடர்களுக்குப் பொருத்தமான இணைச்சொற்களைத் தேர்ந்தெடுத்துக் கூறுக.**

**(பச்சைப்பசேல், வெள்ளைவெளேர், எலியும்பூனையும், காலையும்மாலையும், கண்ணும்கருத்துமாக, சீரும்சிறப்புமாக)**

1. தாய் தன் குழந்தையைக்______வளர்த்தாள்.
2. சோழமன்னர்கள் ______ஆட்சி செய்தனர்.
3. உடற்பயிற்சி செய்வதற்குக்______ஏற்றது.
4. நண்பர்கள் இருவரும் மனவருத்தத்தால்______போல் நடந்துகொண்டனர்.
5. தாத்தா அணிந்திருந்த சட்டை______என இருந்தது.
6. புல்வெளி______எனக் காட்சியளித்தது.

**இ) பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 1. குறுக்கும்நெடுக்கும் | – | தனிச்சொல் |
| 2. விடு | – | நேரிணைச்சொல் |
| 3. கன்னங்கரேல் | – | எதிரிணைச்சொல் |
| 4. பொருட்டு | – | துணைவினை |
| 5. ஈடும்எடுப்பும் | – | செறியிணைச்சொல் |

ஈ) பின்வரும் படத்தைப் பார்த்து, இணைப்புச்சொற்களுடன் கூடிய ஐந்து தொடர் எழுதுக.




உ) பின்வரும் இருதொடரையும் பொருத்தமான இணைப்புச் சொற்களால் இணைத்துக்காட்டுக.

**(அதனால், மேலும், உம், அல்லது, ஆனால்)**

1. மழை நின்றுவிட்டது. வெளியில் செல்ல முடியவில்லை.
2. நீங்கள் தேநீர் குடிக்கிறீர்களா? இளநீர் குடிக்கிறீர்களா?
3. செழியன் எழுதுகிறான். அமுதன் எழுதுகிறான்.
4. முகிலன் முயற்சி செய்யவில்லை. வெற்றி பெற முடியவில்லை.
5. கயல் ஆடுகிறாள். கயல் பாடுகிறாள்.

ஊ) பின்வரும் தொடர்கள் எத்தகைய விடைக்குரியவை?

**(சுட்டுவிடை, நேர்விடை, ஏவல் விடை, இனமொழி விடை, உறுவது கூறல் விடை)**

1. செடிக்குத் தண்ணீர் ஊற்றுவாயா என்னும் வினவிற்கு, 'கை வலிக்கும்' என்று கூறுதல்.

2. உன் வீடு எங்குள்ளது என்னும் வினாவிற்கு, 'அந்தப்பக்கம்' என்று சுட்டிக்காட்டுதல்.

3. நன்றாகப் படிப்பாயா என்னும் வினாவுக்கு, 'நன்றாக எழுதுவேன்' என்று கூறுதல்.

4. துணிகளை மடித்து வைப்பாயா என்னும் வினாவிற்கு, 'நீயே மடித்து வை.' என்று கூறுதல்.

5. நாள்தோறும் உடற்பயிற்சி செய்வாயா என்னும் வினாவிற்கு, 'செய்வேன்' என்று கூறுதல்.

**எ) ஓரிரு தொடரில் விடை தருக.**

1. ஏதேனும் ஓர் இணைப்புச்சொல்லைக் கொண்டு தொடர் உருவாக்குக.
2. பின்வரும் தொடரில் இணைப்புச்சொல் சரியாகப் பயன்படுத்தப்பட்டுள்ளதா? இல்லையெனில் சரியான இணைப்புச்சொல்லைச் சேர்த்துத் தொடரைக் கூறுக.

    ஆசிரியர் என்னை அழைக்கவில்லை. **ஏனெனில்,** நான் அவரைப் பார்க்கச் சென்றேன்.

3. இணைச்சொற்கள் எவ்வாறெல்லாம் வரும்? ஒவ்வொரு வகைக்கும் ஓர் எடுத்துக்காட்டு தருக.
4. பின்வரும் தொடரில் இணைச்சொல் சரியாக உள்ளதா? இல்லையெனில், சரியான இணைச்சொல் கூறுக.

    சாலையைக் கடக்கும்போது, **இங்கும்அங்கும்** பார்த்துச் செல்லவேண்டும்.

5. கதிரவன் என் வீட்டிற்கு **வந்திருந்தான்.**

    கதிரவன் என் வீட்டிற்கு **வந்து இருந்தான்** – இவ்விரு தொடருக்கும் என்ன வேறுபாடு? வேறுபடுத்தும் சொல் எது?

6. பின்வரும் உரைப்பகுதியைப் படித்து, அதில் எத்தகைய மொழிநடை பயன்படுத்தப்பட்டுள்ளது எனக் கூறுக.

    "இயற்கையின் நோக்கம் என்ன? உலகை ஓம்ப வேண்டும் என்பதா? அல்லது அதை அழித்தல் வேண்டும் என்பதா? இயற்கை அன்னை ஒருபோதும் உலகை அழிக்க முனைந்து நில்லாள்".

7. திருக்குறளை இயற்றியது யார்? என்று ஆசிரியர் மாணவனிடம் கேட்பது எத்தகைய வினா?
8. "இந்தக் கையெழுத்து வளவனுடையதா? செழியனுடையதா?" என்று கேட்பது எத்தகைய வினா?
9. பின்வரும் தொடரில் எத்தகைய செறியிணைச் சொல் இடம்பெற்றுள்ளது? கண்டறிக.

    கிளி கொஞ்சிக் கொஞ்சிப் பேசியது.

10. 'விடு' – இத்துணைவினையைக் கொண்டு மூன்று தொடர் உருவாக்குக.

**ஏ) பின்வரும் கதையினைச் சரியான முறையில் சிறுசிறு உரைப்பகுதிகளாகப் பிரித்து எழுதுக.**

மகேந்திரபுரி அரசருக்கு மகன்கள் மூவர் இருந்தனர், தமக்குப் பின்னே நாட்டை யார் கையில் ஒப்படைப்பது என்பதற்காக அவர்களை அழைத்து ஒரு போட்டி வைத்தார். "காட்டிற்குச் சென்று ஒரு சாக்கு நிறைய இரு வாரத்திற்குத் தேவையான உணவை கொண்டு வந்து ஆளுக்கோர் ஏழைக்கு அவ்வுணவைக் கொடுக்கவேண்டும். ஆனால், மூட்டையில் என்ன இருக்கிறது எனக் காட்டத்தேவையில்லை" என்றார் அரசர். மகன்கள் மூவரும் காட்டிற்குச் சென்றனர். முதலாமவன் மரத்தில் ஏறி நல்ல பழங்களைப் பறித்து மூட்டை கட்டினான். இரண்டாமவன் சோம்பல்பட்டுக் கீழே விழுந்து கிடந்த அழுகிய பழங்களைப் பொறுக்கி மூட்டை கட்டிக்கொண்டான். மூன்றாமவனோ ஏழைக்குத் தானே கொடுக்கப் போகிறோம் என்று அலட்சியமாகக் கீழே கிடந்த குப்பைகளை அள்ளி மூட்டையாகக் கட்டினான். மூவரும் அரசரிடம் திரும்பி வந்தனர். அவர்கள் மூட்டைகளைத் திறந்து பார்க்காமலேயே அரசர் அந்த ஏழைகள் நீங்கள்தாம். நீங்கள் கொண்டு வந்த உணவுப் பொருள்களை நீங்களே சாப்பிடுங்கள் என்று கூறினார். நல்ல பழங்களைக் கொண்டுவந்த மகன் பழங்களோடு அரசாட்சியையும் பெற்றான். மற்ற இருவரும் தங்களது தவற்றை உணர்ந்து வருந்தினர்.

## விடைகள்

**அ) தொடருக்கேற்ற சரியான சொல்**

1) ஆனால் 2) ஆகையால் 3) ஏனெனில் 4) ஆனாலும் 5) அதனால்

**ஆ) தொடர்களுக்குப் பொருத்தமான இணைச்சொற்கள்**

1) கண்ணும்கருத்துமாக 2) சீரும்சிறப்புமாக 3) காலையும்மாலையும்

4) எலியும்பூனையும் 5) வெள்ளைவெளேர் 6) பச்சைப்பசேல்

**இ) பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 1. குறுக்கும்நெடுக்கும் | – | எதிரிணைச்சொல் |
| 2. விடு | – | துணைவினைச்சொல் |
| 3. கன்னங்கரேல் | – | செறியிணைச்சொல் |
| 4. பொருட்டு | – | தனிச்சொல் |
| 5. ஈடும்எடுப்பும் | – | நேரிணைச்சொல் |

**ஈ) படத்திற்குப் பொருத்தமான இணைப்புச்சொல் கொண்ட தொடர்கள்**

1. மழை வருவதுபோலிருந்தது. **ஆகவே,** கண்ணன் விரைவாக நடந்தான்.
2. சாலையோரத்தில் ஒருவர் மயங்கிக் கிடப்பதை அவன் கண்டான். **எனவே**, அவருக்கு உதவ நினைத்தான்.
3. கண்ணன் மயக்கமடைந்தவருக்கு முதலுதவி செய்தான். **ஆனால்,** அவர் கண் திறக்கவில்லை.
4. கண்ணன், அவரைக் காப்பாற்ற எண்ணினான். **ஆகையால்,** உடனடியாக அவசர ஊர்தியை வரவழைத்தான்.
5. மருத்துவர்கள், மயக்கமடைந்தவருக்கு உரிய சிகிச்சை அளித்தனர். **அதனால்,** அவர் பிழைத்துக்கொண்டார்.

**உ) இருதொடரையும் பொருத்தமான இணைப்புச் சொற்களால் இணைத்தல்.**

**(அதனால், மேலும், உம், அல்லது, ஆனால்)**

1. மழை நின்றுவிட்டது ஆனால், வெளியில் செல்ல முடியவில்லை.
2. நீங்கள் தேநீர் அல்லது இளநீர் குடிக்கிறீர்களா?
3. செழியனும் அமுதனும் எழுதுகிறார்கள்.

4. முகிலன் முயற்சி செய்யவில்லை அதனால், வெற்றி பெற முடியவில்லை.

5. கயல் ஆடுகிறாள் மேலும், பாடுகிறாள்.

**ஊ) தொடர்கள் குறிப்பிடும் விடை வகைகள்**

1. உறுவது கூறல்

2. சுட்டு விடை

3. இனமொழி விடை

4. ஏவல் விடை

5. நேர்விடை

**எ) ஓரிரு தொடரில் விடை தருக.**

1. நான் தமிழ் கற்றுக்கொள்ள விரும்பியதால் பயிற்சியில் சேர்ந்தேன்.

2. இல்லை. 'ஆயினும்' என்பதே சரியான இணைப்புச்சொல்லாக வரும்.

   ஆசிரியர் என்னை அழைக்கவில்லை ஆயினும், நான் அவரைப் பார்க்கச் சென்றேன்.

3. இணைச்சொற்கள் மூவகையாக வரும். அவை,

   1. நேரிணை – ஈடும்எடுப்பும் 2. எதிரிணை – அல்லும்பகலும்

   3. செறியிணை – இதில் இருவகை உண்டு.

   அ) பண்பு செறியிணை – செக்கச்செவேல் ஆ) செயல் செறியிணை – தேடித்தேடி

4. இல்லை. சரியான இணைச்சொல், 'இடமும்வலமும்'.

   சாலையைக் கடக்கும்போது, இடமும்வலமும் பார்த்துச் செல்லவேண்டும்.

5. கதிரவன் என் வீட்டிற்கு வந்திருந்தான். – கதிரவன் என் வீட்டிற்கு வந்ததைக் குறிக்கிறது.

   கதிரவன் என் வீட்டிற்கு வந்து இருந்தான் – கதிரவன் என் விட்டிற்கு வந்து தங்கியிருந்ததைக் குறிக்கிறது.

6. உரைப்பகுதியில் பயன்படுத்தப்பட்டுள்ள மொழிநடை, 'வினா – விடை நடை'

7. அறிவினா

8. ஐயவினா

9. செயல் செறியிணை

10. 'விடு' – இத்துணைவினையைக் கொண்டு மூன்று தொடர் உருவாக்குக.

அ) நான் படித்து முடித்துவிட்டேன்.

ஆ) கண்ணன் ஊருக்குச் சென்றுவிட்டான்.

இ) 'இந்த வேலையைச் செய்துவிடு' என்று தந்தை என்னிடம் கூறினார்.

**ஏ) சிறுசிறு உரைப்பகுதிகளாகப் பிரித்தல்.**

மகேந்திரபுரி அரசருக்கு மகன்கள் மூவர் இருந்தனர், தமக்குப் பின்னே நாட்டை யார் கையில் ஒப்படைப்பது என்பதற்காக அரசர், அவர்களை அழைத்து ஒரு போட்டி வைத்தார்.

"காட்டிற்குச் சென்று ஒரு சாக்கு நிறைய இரு வாரத்திற்குத் தேவையான உணவை கொண்டு வந்து ஆளுக்கோர் ஏழைக்கு அவ்வுணவைக் கொடுக்க வேண்டும். ஆனால், மூட்டையில் என்ன இருக்கிறது எனக் காட்டத் தேவையில்லை" என்றார் அரசர்.

மகன்கள் மூவரும் காட்டிற்குச் சென்றனர். முதலாமவன் மரத்தில் ஏறி நல்ல பழங்களைப் பறித்து மூட்டை கட்டினான். இரண்டாமவன் சோம்பல்பட்டுக் கீழே விழுந்து கிடந்த அழுகிய பழங்களைப் பொறுக்கி மூட்டை கட்டிக்கொண்டான். மூன்றாமவனோ ஏழைக்குத் தானே கொடுக்கப் போகிறோம் என்று அலட்சியமாகக் கீழே கிடந்த குப்பைகளை அள்ளி மூட்டையாகக் கட்டினான்.

மூவரும் அரசரிடம் திரும்பி வந்தனர். அவர்கள் மூட்டைகளைத் திறந்து பார்க்காமலேயே அரசர் அந்த ஏழைகள் நீங்கள்தாம். நீங்கள் கொண்டு வந்த உணவுப் பொருள்களை நீங்களே சாப்பிடுங்கள் என்று கூறினார். நல்ல பழங்களைக் கொண்டுவந்த மகன் பழங்களோடு அரசாட்சியையும் பெற்றான். மற்ற இருவரும் தங்களது தவற்றை உணர்ந்து வருந்தினர்.

## பாடம் : 6

# சொற்பிரிப்பு, சொற்சேர்க்கை முறைகள், அமைப்பு முறை, பிறமொழிப் பயன்பாடு, நிறுத்தக் குறியீடு

### 6.0 முன்னுரை

மொழியைப் பேசும்போது கேட்பவருக்குப் புரிதலில் தவறு ஏற்படுவது அரிது. ஆனால், பேசிய கருத்தை எழுதும்போது நாம் நினைத்த கருத்தை அப்படியே மொழி வடிவில் கொண்டு வருதல் வேண்டும். அதற்குச் சில விதிகளை முறையாகப் பின்பற்றுதல் வேண்டும்.

### 6.1 சொற்பிரிப்பும், சொற்சேர்க்கையும்

நாம் சில தொடர்களைப் படிக்கும்போது, அவற்றில் இடம்பெற்றுள்ள சொற்களைச் சேர்த்துப் படிக்க வேண்டுமா, பிரித்துப் படிக்க வேண்டுமா எனக் குழப்பம் ஏற்படுவதுண்டு. சிலபோது, பிரித்துப் படிப்பதால் பொருள் மாற்றம் ஏற்படும். எந்தெந்தச் சொற்களைச் சேர்த்துப் படிக்கலாம், எந்தெந்தச் சொல்லைப் பிரித்துப் படிக்கலாம் என இப்பகுதியில் அறிந்துகொள்வோம்.

வாய்விட்டுப் படிக்கும்போது பொருள் புரிவதற்காகச் சில இடங்களில் நிறுத்திப் படிப்போம். வேறுசில இடங்களில் இடைவெளிவிட்டுப் படிப்போம். ஆனால், முறையாகப் படிக்கவில்லை எனில், பொருட்குழப்பம் ஏற்படும். எடுத்துக்காட்டாக,

மலர்/ அத்தை வீட்டுக்குப் போனாள்

மலர் அத்தை/ வீட்டுக்குப் போனாள்.

மலர் அத்தை வீட்டுக்குப்/ போனாள்.

மேற்கண்ட மூன்று தொடரையும் வாய்விட்டுப் படித்துப் பாருங்கள். எங்கு / இந்தக் குறி இடம்பெற்றுள்ளதோ அங்கு நிறுத்திப் படியுங்கள். ஒவ்வொரு தொடரும் ஒவ்வொரு பொருளைத் தருகின்றதல்லவா?

ஆகவே, உண்மையில் மலர் என்ற பெண், அவளுடைய அத்தை வீட்டிற்குச் சென்றாள் எனில், முதலில் கூறப்பட்ட தொடர்தான் சரியாக இருக்கும். அப்படியானால், மலர் என்ற சொல்லின்பின் சிறிது நிறுத்தி அதன்பின் மற்றச் சொற்களைப் படிக்கவேண்டும். இதனால், எங்கெங்குச் சேர்த்துப் படிக்கவேண்டும், எங்கெங்குப் பிரித்துப் படிக்கவேண்டும் என்பதை நாம் புரிந்துகொள்ளலாம்.

**சொற்களைச்சேர்த்துப் படிக்கவேண்டிய இடங்கள்**

1) **பெயரடை, வினையடை**

பெயரின் தன்மையை விவரிப்பது பெயரடை – உயரமான வீடு

வினையின் தன்மையை விவரிப்பது வினையடை – விரைவாகச் சென்றான்

பெயரடை, வினையடையாக வரும் சொற்களைச் சேர்த்தே படிக்கவேண்டும்.

**2) இணைச்சொற்கள்**

ஒரு தொடரில் இருவேறு சொற்கள் இணைந்து வருவது இணைச்சொல் எனப்படும்.

ஈடுஇணையற்ற – நேரிணை

உயர்வுதாழ்வின்றி – எதிரிணை

பச்சைப்பசேலென – செறியிணை

இணைச்சொற்களை எப்போதும் சேர்த்தே படிக்கவேண்டும்.

**3) வேற்றுமை உருபு, சொல்லுருபு**

கண்ணனைக் கண்டேன் ('ஐ ' வேற்றுமையுருபு)
அரசியுடன் சென்றான் (உடன் – சொல்லுருபு)

சொற்கள் வேற்றுமையுருபுடன் அல்லது சொல்லுருபுடன் வரும்போது சேர்த்துப் படிக்கவேண்டும்.

**4) எண்ணுப்பெயர்**

ஒரு செடியில்
நாலுகால் பாய்ச்சல்
ஏழு கடல் தாண்டு

பெயருக்குமுன் எண்ணுப்பெயர்கள் வரும்போது சேர்த்துப் படிக்கவேண்டும்.

**5) துணைவினைகள்**

ஒரு கூட்டு வினையின் இரண்டாவது உறுப்பாக வந்து தன் அடிப்படைப் பொருளை விட்டுவிட்டு முதல் வினைக்குத் துணையாக வேறு இலக்கணப் பொருளைத் தரும் வினை துணை வினை எனப்படும்.

சான்று :

காலையில் எழுந்துவிட்டாள்
சான்றோர் காட்டிய பாதையில் நடக்கவேண்டும்
படித்துவிடு (விடு)
உயிரைவிட மேலானது ஒழுக்கம் (விட)
அதைக்காட்டிலும் சிறந்த பாடல் (காட்டிலும்)
அவனுடன் சென்றான் (உடன்)
அவனிடம் கொடுத்தான் (இடம்)
அந்த நூலைத்தான் விரும்பிப் படித்தேன் (தான்)
இதுவரை யாரும் வரவில்லை (வரை)

ஏதாவது செய்யமுடியுமா? (ஆவது)
இனிமேல் உண்மையை மறைத்துப் பயனில்லை (மேல்)
மாதந்தோறும் கழகக் கூட்டம் நடைபெறும் (தோறும்)
ஏணியிலிருந்து இறங்கினான் (இருந்து)
வீட்டைவிட்டு வரும்போது கையில் பணம் இல்லை (போது)

மேற்கண்ட அடைப்புக்குறிக்குள் கொடுக்கப்பட்டிருக்கும் சொற்களைத் தனியே படிக்காமல், அவை எச்சொல்லுடன் இணைந்துள்ளதோ அதனுடன் சேர்த்தே படிக்க வேண்டும்.

சொற்களைச் சரியான இடத்தில் எழுதுவதும், இணைத்து எழுதுவதும், இடம்விட்டு எழுதுவதும் எனப் பல முறைகள் நாம் சொல்ல நினைக்கும் கருத்தைப் பொருள் மாறாமல் சொல்ல உதவும்.

உதாரணமாக,

**அப்பா வந்தார் என்று இப்போதுதான் தம்பி சொன்னான்.**

என்று எழுதும்போது அப்பா வந்துவிட்டார் என்பது, இப்போதுதான் எனக்குத் தெரியும் என்ற கருத்து வெளிப்படுகிறது. இத்தொடரில் ஒரே ஒரு சொல்லை மட்டும் மாற்றும்போது பொருள் பெரிதும் மாறுபடும்.

**இப்போதுதான் அப்பா வந்தார் என்று தம்பி சொன்னான்.**

இதில் அப்பா இப்போதுதான் வந்தார் எனப் பொருள் மாறுபடும்.

மேலும்,

**பொருளை மாற்றும் அமைப்பு முறைகள்**

இப்பாடத்தில் மேற்கூறியவாறு தொடர்களை எந்த மயக்கமும் இன்றி எழுத உதவும் அமைப்புகள் பற்றியே நாம் கற்கப் போகிறோம்.

**பொருளும் தொடர் அமைப்பும்**

**குமரன் தானே வேலைகளைச் செய்தான்**

என எழுதும்போது, குமரன் தனியாக எல்லா வேலைகளையும் செய்தான் என்ற பொருள் வெளிப்படும்.

**குமரன்தானே வேலைகளைச் செய்தான்**

என எழுதும்போது குமரனா வேலைகளைச் செய்தான் என்ற வினாப் பொருள் வெளிப்படும்.

தொடரில் நிறுத்தக் குறியீடுகளைச் சேர்க்கும்போது, அவை பொருள் விளக்கத்தைச் சரியான முறையில் சொல்ல உதவும்.

**இப்போதுதான், அப்பா வந்தார் என்று தம்பி சொன்னான்.**

காற்புள்ளி இப்படி இடும்போது அங்குச் சொற்களுக்கிடையே தொடர்பினை அக்குறியீடு ஏற்படுத்தும்.

**இடைவெளிவிட்டுப் படிக்கவேண்டிய இடங்கள்**

சில தொடர்களிலுள்ள சொற்களை இடைவெளிவிட்டும் நிறுத்தியும் படிக்கவேண்டும். இதனால், பொருள் தெளிவு ஏற்படும். எடுத்துக்காட்டாக, 'கண்ணா வா' இச்சொற்றொடரைச் சேர்த்துப் படித்தால் என்னவாகும்? ஏதோ ஒரு செயலைக் கண்ணன் செய்ததுபோலவும், அதனைத் தெரிந்துகொள்ளும் ஆவலில் 'கண்ணாவா இப்படிச் செய்தான்' என்ற பொருளையும் தோற்றுவிக்கிறது. அவ்வாறின்றி, 'கண்ணா / வா' என குறியீட்டின் பின் சற்று இடைவெளிவிட்டு நிறுத்திப் படித்தால், கண்ணன் என்பவனை வரச்சொல்வதுபோல் பொருள் தருகிறது. ஆகையால், எங்கெங்கு இடைவெளிவிட்டும் நிறுத்தியும் படிக்கவேண்டும் என்பதை இனித் தெரிந்துகொள்வோம்.

1) **விளி வேற்றுமை ஏற்ற சொற்கள்**

   அம்மா / வா

2) **எழுவாய் அடுத்துச் சொற்கள் வரும் தொடர்கள்**

   ஆசிரியர்/ தம் மாணவரைப் பார்த்துப் படிக்குமாறு சொன்னார்.

3) **'உம்' இடம்பெறும் தொடர்கள்**

   பெரியார்/பெண்விடுதலைக்காகவும்/ சமூகத்திற்காகவும் / அரும்பாடுபட்டார்.

4) **மேற்கோள் குறியுள் அமைந்த தொடர்கள்**

   அம்மாவைப் பார்த்த/ குழந்தை/"என்னைவிட்டு/எங்கே சென்றாய்?"/ என்று கேட்டது.

5) **பல பொருள்கள் அடுக்கிவரும் தொடர்கள்**

   கண்ணன்/ தன் சிறிய பையில்/ புத்தகம்/ எழுதுகோல்,/ அழிப்பான்,/ அளவுகோல், / குறிப்பேடு அனைத்தையும் எடுத்துவைத்தான்.

6) **வினையெச்சங்கள் தொடர்ந்து வரும் தொடர்கள்**

   கவிதா/ பள்ளிக்குச் சென்று/ தன் மகளைப் பார்த்து/ நண்பகல் உணவு அளித்துவிட்டுத் திரும்பினாள். (இறுதியாக வரும் வினையெச்சத்தை வினைமுற்றுடன் சேர்த்தே கூறவேண்டும். )

7) **பெயரடைகள் அடுக்கிவரும் தொடர்கள்**

   உயரமான/ பரந்த /பெரிய /மலையின்கண்/ சிறிய கோவில்

8) **எண்ணுப்பெயருக்குப்பின் பெயரடை அமைந்த தொடர்கள்**
நான்கு/ பெரிய பறவைகள்
மூன்று / சிறிய நூல்கள்

### 6.1.1 சொற்பிரிப்பு, சொற்சேர்க்கை முறைகள்

சொற்களைச் சேர்த்தும் பிரித்தும் எழுதுதல் மொழியில் முக்கியமான ஒரு பகுதியாகும். உதாரணத்திற்குக் கதை ஒன்றைப் பார்க்கலாம்.

கண்ணன் பள்ளியில் படிக்கும் மாணவன். அவனுக்கு லட்டு சாப்பிடுவது மிகவும் பிடிக்கும். தினமும் லட்டு சாப்பிட்டுக் கொண்டே இருப்பான். அதிகமாக இனிப்பு சாப்பிடுவது உடலுக்கு நல்லது இல்லை. அவனை எப்படித் திருத்துவது என அவன் பாட்டி யோசித்தார். அவருக்கு ஒரு யோசனை தோன்றியது.

லட்டு வைத்திருக்கும் அலமாரியில் ஒரு சீட்டில் **"கண்ணன் நல்ல பையன். அவன் இனி மேல் அலமாரியில் இருக்கும் லட்டைச் சாப்பிட மாட்டான்"** என்று எழுதி வைத்தார். வழக்கம்போல லட்டு எடுக்க வந்த கண்ணன் அந்தச் சீட்டைப் பார்த்தான். **ஆனால்** லட்டை எடுத்துச் சாப்பிட்டான். அவனைக் கவனித்துக் கொண்டே இருந்த பாட்டி அவனிடம் வந்தார். "கண்ணா நீ நல்ல பையன் இல்லையா? ஏன் லட்டை எடுத்தாய்?" என்று கேட்டார்.

அதற்குக் கண்ணன் "பாட்டி நான் நல்ல பையன். அந்தச் சீட்டில் **மேல்** அலமாரியில் இருக்கும் லட்டை எடுக்க மாட்டேன் என்றுதானே எழுதி இருந்தீர்கள். நான் நீங்கள் சொன்னபடியேதான் நடந்து கொண்டேன். **கீழ்** அலமாரியில் இருந்த லட்டைத்தான் எடுத்தேன் என்றான். பாட்டி ஆச்சரியப்பட்டுப் போனார்.

பாட்டி எப்படிச் சீட்டு எழுதி வைத்திருக்க வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்? அவர் **"இனிமேல்** லட்டு **சாப்பிட மாட்டான்"** என்றும், **"இன்றுமுதல் கண்ணன்** லட்டு **சாப்பிட மாட்டான்"** என்றும் எழுதியிருக்க வேண்டும்.

மேல் என்னும் பொருளில் வரும்போது மட்டுமே இச்சொல் பிரித்து எழுதப்பட வேண்டும். இதைப் போல வரும் பிற சொற்களையும் பார்க்கலாம்.

**அல்ல:**

மறுத்துக் கூறும் பொருளில் வரும்போது மட்டும் இச்சொல் தனியாய் வரும்.

**இவை என் புத்தகங்கள் அல்ல.**

மறுத்தல் பொருள் அல்லாமல், நேர்மறையாகவும், பாராட்டுதல் பொருளிலும் வரும்போது இணைத்து எழுதுதல் வேண்டும்.

**என் கண்ணல்ல, இங்கே வா!**

**அல்லவா:**

ஒரு தொடரில் வினைச்சொல் அல்லாத சொற்களுடன் இச்சொல்லை இணைத்து எழுத வேண்டும்.

**நீயல்லவா இதைச் சொல்லியிருக்க வேண்டும்.**

வினைச்சொல்லை அடுத்து எழுதும்போது தனித்து எழுத வேண்டும்.

**நீ இதை சொல்லியிருக்க வேண்டும் அல்லவா?**

**அற்ற**

பெயர்ச்சொல்லோடு எழுதும்போது இணைத்து எழுத வேண்டும்.

**சிந்தனையற்ற செயல்**

**மணமற்ற மலர்**

அடை சேர்ந்து வரும் பெயர்ச்சொல்லாய் இருந்தால் பிரித்து எழுத வேண்டும்

**சுயசிந்தனை அற்ற மனிதர்**

**நறுமணம் அற்ற மலர்**

**ஆகிய**

சிறப்புப் பெயர் மற்றும் பொதுப் பெயர்களோடு வரும்பொது இணைத்து எழுத வேண்டும்

**பறவைகளாகிய கிளி, மைனா**

தொகுப்பாக நிறைய சொற்களுடன் வரும்போது தனித்து எழுத வேண்டும்.

**தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் ஆகிய நான்கு மொழிகள்**

**அருகில்**

'உ' எழுத்தோடு முடியும் சொற்களோடு வரும்போது இணைத்து எழுதுதல் வேண்டும்.

**கதவருகில், கிணற்றருகே**

மற்ற சொற்களோடு தனியாக எழுதலாம்.

**சன்னல் அருகில் வண்டி அருகில்**

**அல்லது**

இச்சொல் எல்லா இடங்களிலும் தனித்தே எழுதப்படல் வேண்டும்.

**லட்டு அல்லது முறுக்கு வாங்கி வா**

**நீ போகிறாயா அல்லது நான் போகட்டுமா?**

ஆனால் பெரும்பாலும் 'இல்லையெனில்' என்ற சொல்லையே அல்லது என்ற சொல்லிற்கு மாற்றாகப் பயன்படுத்துகிறோம்.

**ஆனால்**

நிபந்தனை போல ஒன்றைச் சொல்லும்போது சேர்த்து எழுத வேண்டும்.

**நீ வருவதானால் போகலாம்.**

இரு தொடருக்கு நடுவில் இணைப்புச் சொல்லாக வரும்போது தனியாக எழுத வேண்டும்

**நேற்று மழை பெய்தது. ஆனால் குளம் நிறையவில்லை.**

## 6.2 நிறுத்தக் குறியீடு

நாம் பேசும்போது நமது உணர்வுகளைக் குரல் மூலம் மற்றும் ஏற்ற இறக்கங்கள் மூலம் காட்டுவோம். எழுத்தில் நம் கருத்துகளை வெளிப்படுத்தும்போது உணர்வுகளை வெளிக்காட்ட நிறுத்தக் குறிகளைப் பயன்படுத்துகிறோம்.

### 6.2.1 அமைதிக்கான அளவு

படிக்கும்போது எந்த இடத்தில் எந்த அளவு நிறுத்த வேண்டும் என்பதை உணர்த்த குறியீடுகள் இடப்படுகின்றன. இவற்றையே நிறுத்தக் குறியீடுகள் என்கிறோம். ஒரு தொடர் எவ்வாறு அமைக்கப்படுகிறது, அதை நாம் எவ்வாறு படிக்க வேண்டும் என்பதைக் காட்டவே நிறுத்தக் குறியீடுகள் இடுகிறோம்.

### 6.2.2 பழங்காலத்தில் நிறுத்தக் குறியீடுகள்

பழங்காலத்தில் தமிழ்மொழியில் நிறுத்தக் குறியீடுகள் இல்லை. அக்காலத்தில் எழுதுவதற்கு ஓலைச் சுவடிகளைப் பயன்படுத்தினர் என்பதும் அதற்கு ஒரு காரணம். புள்ளி, கோடு ஆகியவற்றை இடும்போது, ஓலைச் சுவடிகள் கிழிந்துவிடும். அதுபோலவே கல்வெட்டுகளில் எழுதும்போதும் சுழிகள், கோடுகள் போடுவது கடினம்.

### 6.2.3 நிறுத்தக் குறியீடுகளின் பணிகளைச் செய்தவை

நிறுத்தக் குறியீடுகளின் பணிகளை அக்காலங்களில் செய்தது யார்? வினைச்சொல் தொடரின் இறுதியில் எழுதப்பட்டது. இது **முற்றுப் புள்ளி**யின் வேலையைச் செய்தது. ஏகார, ஓகார உம்மைகள் **காற்புள்ளி, அரைப்புள்ளி** ஆகியவற்றின் வேலைகளைச் செய்தன. இதுபோல, எனவே, ஆகவே ஆகிய சொற்கள் விட்டிசைப்பினைத் தருவதோடு முந்தைய தொடரோடு தொடர்புடையது எனக் காட்டுகிறது. ஆ, ஓ, ஆகியவை பெயர் வினைச்சொற்களின் இறுதியில் நின்று **கேள்விக்குறியின்** பணியைச் செய்தன.

### 6.2.4 நிறுத்தக் குறியீடுகளின் தோற்றம்

அச்சுக் கலை இந்தியாவில் தோன்றிய பிறகு தமிழ்மொழியில் நிறுத்தக் குறியீடுகளின் பயன்பாடு மிகுந்தது. புத்தகங்கள் தமிழில் அச்சிடப்பட ஆரம்பித்த பின்னர், பல நிறுத்தக் குறிகள் தமிழில் கையாளப்பட்டன.

### 6.2.5 புள்ளிகள்

நிறுத்தக் குறியீடுகளில் புள்ளிகள் மிகவும் முக்கியம். வாசிக்கும்போது ஒலிப்பு வேறுபாடுகளைக் காட்டவும், கூறும் செய்தியின் பொருளில் குழப்பம் வராமல் இருக்கவும், படிப்பவரின் கவனத்தைத் தேவைப்படும் இடங்களுக்குக் கொண்டுசெல்லவும் நிறுத்தக் குறிகள் பயன்படுகின்றன.

இவற்றில் புள்ளிகள் முதலிடம் பெறுகின்றன. அவை,

1. கால் புள்ளி
2. அரைப் புள்ளி
3. முக்காற் புள்ளி
4. முற்றுப் புள்ளி
5. முப்புள்ளி

இவற்றோடு இன்னும் சில குறியீடுகளும் முக்கியமாகப் பயன்படுத்தப்படுகின்றன.

6. கேள்விக்குறி
7. உணர்ச்சிக்குறி
8. இரட்டை மேற்கோள் குறி
9. ஒற்றை மேற்கோள் குறி
10. தனி மேற்கோள் குறி
11. மேற்படிக்குறி
12. பிறை அடைப்புக் குறி
13. சதுர அடைப்புக்குறி
14. இணைப்புக்குறி
15. சாய்கோடு

ஆகியவை ஆகும். இவற்றின் பயன்பாடுகளை ஒன்றன்பின் ஒன்றாகக் காணலாம்.

### 6.2.5.1 கால் புள்ளி: (உறுப்பிசைக் குறி)

இக்குறி இடப்படும் இடங்களில் ஒரு மாத்திரை அளவு நிறுத்தி வாசிக்க வேண்டும். இவை இடப்படும் இடங்கள் பல உள்ளன.

❖ ஒரு பெயர்ச்சொல்லோடு பல வினைச் சொற்கள் வரும் இடங்களில் கால்புள்ளி இடல் வேண்டும்.

**நான் இராமனை வீட்டில் சென்று பார்த்தேன், பேசினேன், வந்தேன்.**

❖ அது போலவே பல பெயர்ச்சொற்கள் வரும் இடங்களிலும் கால்புள்ளி இடல் வேண்டும்.

**கடைக்குச் சென்று மா, பலா, வாழை, கொய்யா ஆகிய பழங்கள் வாங்கினேன்.**

❖ ஒரு பெயர்ச்சொல்லை விவரித்துச் சொல்லும் பல தொடர்களுக்கு இடையில் கால்புள்ளி வரல் வேண்டும்.

**அழகான, நறுமணமிக்க, பல இதழ்கள் கொண்ட தாமரை மலர்ந்தது.**

❖ தொடரில் ஒரே வினைச்சொல் இரண்டு முறை வரும்போது கால்புள்ளி இடல் வேண்டும்.

**நீ வருவாய், வருவாய் எனக் காத்திருந்தேன்.**

❖ இரு தொடரை இணைக்கும் இணைப்புச் சொற்களை அடுத்தும் கால்புள்ளி இடல் வேண்டும்.

**நேற்று மழை பெய்தது. ஆனால், குளம் நிறையவில்லை.**

❖ சொல்லும் கருத்தில் உள்ள உணர்ச்சி வெளிப்படவும், அழுத்தம் ஏற்படவும் கால்புள்ளி இடல் வேண்டும்.

**தெருவெங்கும் கொட்டிக் கிடந்தன, மலர்கள்**

❖ இல்லையா, அல்லவா போன்ற சொற்கள் வரும் தொடர்களில் கால்புள்ளி இடல் வேண்டும்.

**நேற்று பலமாகக் காற்று வீசியது, இல்லையா?**

❖ வினாக்களில் அடுக்கி வரும் சொற்களுக்கு இடையிலும், விடையில் வரும் வினாச் சொல்லை அடுத்தும் கால்புள்ளி இடல் வேண்டும்.

**இனிப்பா, காரமா என்ன வேண்டும்?**

**இதுவா, பேனா.**

❖ ஏவல் வினைகள் வரும் தொடர்களில் கால்புள்ளி இடல் வேண்டும்.

**அவனைத் தடுக்காதே, விடு.**

- உணர்ச்சி வாக்கியங்களில் உணர்ச்சிச் சொல்லைத் தொடர்ந்து கால்புள்ளி இடல் வேண்டும்.

**ஐயோ, வலிக்கிறதே!**

- ஆமாம் என்ற சொல் தொடரில் வரும்போது கால்புள்ளி இடல் வேண்டும்.

**ஆமாம், அவர் நேற்று வந்தார்.**

- ஒருவரை விளித்து எழுதும்போது, கால்புள்ளி இடல் வேண்டும்.

**தம்பி, இங்கே வா**

- கடிதங்களில் விளிக்கும்போதும், முடிக்கும் சொல்லிலும் கால்புள்ளி இடல் வேண்டும்.

**மதிப்பிற்குரிய ஐயா,**

**இப்படிக்கு,**

- முகவரியைப் படுக்கை வரிசையில் எழுதுகையில் கால்புள்ளி இடல் வேண்டும்.

**கார்த்திகேயன், 12, மேற்கு வீதி, மதுரை.**

- இதே முகவரியை ஒன்றன்கீழ் ஒன்றாக எழுதும்போது கால்புள்ளி இடக்கூடாது.

**கார்த்திகேயன்**

**12, மேற்கு வீதி**

**மதுரை**

- பட்டங்களை எழுதும்போது கால்புள்ளி இடல் வேண்டும்.

**எம்.ஏ, டி.லிட்**

- மாதம் தேதிக்குப் பின் ஆண்டு எழுதும்போது கால்புள்ளி இடல் வேண்டும்.

- தேதி மாதம் ஆண்டு எழுதும்போது கால்புள்ளி இடக் கூடாது.

**நவம்பர் 14, 1960**

**14 நவம்பர் 1960**

### 6.2.5.2 அரைப்புள்ளி: (விளக்கிசைக் குறி)

கால் புள்ளியைவிட அதிக நேரம் இடைவெளிவிட்டு வாசிக்க வேண்டும். இரண்டு மாத்திரை அளவு இடைவெளி தரவேண்டும். இதுவும் பல இடங்களில் பயன்படுத்தப்படுகிறது.

- ஒரே கருத்தைப் பல முற்றுத் தொடர்களால் கூறும்போது அரைப்புள்ளி இடல் வேண்டும்.

  **தமிழ் இலக்கியங்கள் தொன்மையானவை; பொருள் நிறைந்தவை; அறக் கருத்துகளைக் கூறுபவை.**

- காரணம், விளைவு இரண்டையும் கூறும்போது அரைப்புள்ளி இடல் வேண்டும்.

  **மழை பெய்தது; குளம் நிறைந்தது.**

- இரு பொருளை ஒப்பிட்டுக் கூறும்போது அரைப்புள்ளி இடல் வேண்டும்.

  **நிலவு குளிர்ச்சியானது; சூரியன் வெப்பம் நிறைந்தது.**

- ஒன்றுக்கு மேற்பட்ட தகவல்களைக் கூறும்போது அரைப்புள்ளி இடல் வேண்டும்.

  **பரிசு பெற்றவர்கள் விமலா, கோயம்புத்தூர்; அம்பிகா.குமார், தேனி; கனிமொழி, கரூர்;**

### 6.2.5.3 முக்கால் புள்ளி: (விளக்கிசைக் குறியீடு)

ஒரு தொடரில் வரும் செய்தியை விளக்க, தொடர்ந்து செய்திகள் எழுதப்படும்போது முக்கால் புள்ளி இடப்படும். அரைப் புள்ளிக்குமேல் கால் இடைவெளி தர இந்தக் குறியீடு இடப்படும். மூன்று மாத்திரை அளவு கால இடைவெளி தரவேண்டும்.

- என்னவெனில், என்பது, என்றால் போன்ற சொற்களுக்குப் பதிலாகத் தொடரில் முக்கால் புள்ளி இடப்படும்.

  **திருமணத்திற்கு வந்த அனைவரும் சொன்ன செய்தி: உணவு அருமையாக இருந்தது.**

  **வீடு: அம்மா, அப்பா, குழந்தைகள் இணைந்து வாழ்வது.**

- சிறு தலைப்பைத் தொடர்ந்து அதனை விரிவாகக் கூறும் செய்திகளின் இடையில் முக்கால் புள்ளி இடப்படும்.

  **அனைவருக்கும் இருக்க வேண்டிய பழக்கங்கள்: உதவி செய்தல், அன்பு காட்டுதல், இனிமையாகப் பேசுதல்.**

- உரையாடல் வடிவில் எழுதும்போது, கூறியதாவது என்ற சொல்லிற்குப் பதிலாக முக்கால் புள்ளி இடப்படல் வேண்டும்.

  **ஆசிரியர் : வீட்டுப்பாடம் செய்தாயா?**

  **மாணவன் : இல்லை ஐயா.**

  **ஆசிரியர் : ஏன் எழுதவில்லை?**

  **மாணவன் : ஊருக்குச் சென்றுவிட்டேன் ஐயா! மன்னித்துக் கொள்ளுங்கள். நாளை எழுதி விடுகிறேன்.**

❖ பட்டியல்கள் எழுதும்போது தலைப்புகளை அடுத்து முக்கால் புள்ளி இடல் வேண்டும்.

**பெயர்: குமரேசன்**

**தொழில்: எழுத்தாளர்**

**பிறந்த தேதி: 19.10.1985**

### 6.2.5.4 முற்றுப்புள்ளி: (முடிப்பிசைக் குறி)

நிறுத்தக் குறியீடுகளில் குறிப்பிடத்தக்க இடம்பெறுவது முற்றுப்புள்ளி ஆகும். ஒரு தொடர் முடிவு பெற்றுவிட்டது. ஒரு கருத்து முடிந்து விட்டது என்று கூறுவது முற்றுப்புள்ளியின் பணி.

**எனக்குப் பூக்கள் பிடிக்கும்.**

❖ கட்டளை வாக்கியத்தின் முடிவில் முற்றுப்புள்ளி வரும்.

**புத்தகத்தை எடுத்து வா.**

❖ படுக்கை வரிசையில் எழுதப்படும் பட்டியலின் இறுதியில் முற்றுப்புள்ளி இடல் வேண்டும்.

**பால் ஐந்து வகைப்படும். அவை: 1. ஆண்பால், 2. பெண்பால், 3. பலர்பால், 4. ஒன்றன்பால், 5. பலவின்பால்.**

❖ தொடர் முழுவதையும் அடைப்புக்குறிக்குள் எழுதும்போது முடிவில் அடைப்புக்குள் முற்றுப்புள்ளி இடல் வேண்டும். அதுவே கூடுதல் தகவலானால் அடைப்புக்குறிக்கு வெளியே முற்றுப்புள்ளி இடல் வேண்டும்.

**எல்லாரும் கடைக்குச் சென்று விட்டனர். (அம்மா மட்டும் செல்லவில்லை.)**

**பலர், பேசும்போது ஆங்கிலச் சொற்கள் கலந்தே பேசுகின்றனர். (ஸ்கூல் போன்றவை).**

### 6.2.5.5 முப்புள்ளி

❖ தொடரில் விடப்பட்ட பகுதியை முப்புள்ளி இட்டு நிரப்புவர்.

**அன்றிலிருந்து இன்றுவரை**...

❖ சிந்தனைத் தொடர்ச்சியைக் குறிக்க முப்புள்ளி இடலாம்.

**அவன் நல்லவனாகவே இருந்திருக்கலாம்**...

❖ சொற்களின் ஒலிப்புத் தொடர்ச்சியைக் குறிக்க முப்புள்ளி இடல் வேண்டும்

**கொர்ர்**...

**அம்மா**... **அம்மா**...

### 6.2.5.6 கேள்விக்குறி: (வினாவிசைக்குறி)

முற்றுப்புள்ளிக்கு அடுத்து, மிகுதியாகப் பயன்படுத்தப்படும் குறியீடு வினாக்குறியீடு ஆகும். பொதுவாக வினாச் சொற்கள் வரும் அனைத்துத் தொடர்களிலும் கேள்விக்குறி இடல் வேண்டும்.

**உன் பெயர் என்ன?**

- ❖ வினாக்குறிப்புள்ள முற்றுப் பெறாத தொடர்களில் கேள்விக்குறி வரும்

**நாங்கள் கடைக்குப் போகிறோம். நீங்கள்?**

- ❖ வியப்போடு கேட்கப்படும் கேள்விகளில் வினாக்குறி வரும்.

**அமெரிக்காவா போகிறாய்?**

- ❖ தொடர்ந்து வினாக்கள் வருமானால் இறுதியில் கேள்விக்குறி போட்டால் போதும்.

**இது படகா இல்லை வீடா?**

### 6.2.5.7 உணர்ச்சிக்குறி: (மெய்ப்பாட்டிசைக்குறி)

இக்குறியீடு பெரும்பாலும் வியப்புக்குறியீடு என்றே அழைக்கப்படுகிறது. வியப்பு மட்டுமல்லாமல் எல்லா விதமான உணர்ச்சிகளையும் வெளிக்காட்டும் இடங்களிலும் இக்குறி இடப்படுவதால் இது உணர்ச்சிக்குறி என்று அழைக்கப்படுவதே சரியாகும். இதனை இன்னும் தெளிவாக மெய்ப்பாட்டிசைக்குறி எனத் தேவநேயப்பாவாணர் கூறுகிறார்.

- ❖ உணர்ச்சிகளை வெளிப்படுத்தும் எல்லாச் சொற்களின் பின்னும் உணர்ச்சிக் குறி இடப்படல் வேண்டும்.

**எவ்வளவு அழகான மலர்! (வியப்பு)**

**நம் விருப்பப்படியே அனைத்தும் நன்றாக நடந்து விட்டது! (மகிழ்ச்சி)**

**குமரனின் தாத்தா விபத்தில் இறந்துவிட்டார்! (அதிர்ச்சி)**

**பல நூறு பேர் விபத்தில் இறந்துவிட்டனர்! (இரக்கம்)**

**இருளில் தோட்டத்திற்குப் போனால் பாம்பு கடித்துவிடுமோ! (அச்சம்)**

- ❖ உணர்ச்சிச் சொற்களின் பின்னாலும், சொற்கள் இரட்டித்து வரும் இடங்களிலும் உணர்ச்சிக்குறி இடல் வேண்டும்.

**ஆ!**

**ஐயோ!**

**பாம்பு! பாம்பு!**

- ❖ விளிச்சொல் தொடர்ந்து வரும்போது உணர்ச்சிக்குறி இடப்படல் வேண்டும்.

**அம்மா! அப்பா!**

**என் உயிர் நண்பனே!**

- வாழ்த்துச் சொற்கள் வரும்போது உணர்ச்சிக்குறி இடப்படல் வேண்டும்.

  **வாழ்க! வாழ்க!**

- முழக்கச் சொற்களை எழுதும்போது உணர்ச்சிக்குறி இடப்படல் வேண்டும்.

  **உண்மை! முற்றிலும் உண்மை!**

### 6.2.5.8 இரட்டை மேற்கோள் குறி

- உரையாடல்கள், உரைப்பகுதிகளில் வரும் இடங்களில் இக்குறி இடப்படல் வேண்டும்.

  **"நானும் வருகிறேன்" என்றான் மணி.**

### 6.2.5.9 ஒற்றை மேற்கோள் குறி

- ஏதாவது ஒரு நூலிலிருந்து ஒரு பகுதியை மேற்கோளாய்க் காட்டும்போது ஒற்றை மேற்கோள் குறி இடப்படல் வேண்டும்.

  **'அறம் செய விரும்பு' என ஔவையார் கூறியுள்ளார்.**

- தொடரில் நம் எண்ணத்தை வெளிப்படுத்தும் கருத்து வரும்போது அது ஒற்றை மேற்கோள் குறிக்குள் எழுதப்படல் வேண்டும்.

  **அவனைப் பார்த்தவுடன் 'அவன் மிகவும் நல்லவன்' என நினைத்தேன்.**

- ஒரு சொல்லை அல்லது தொடரைத் தனித்துக் காட்ட ஒற்றை மேற்கோள் குறி இடப்படல் வேண்டும்.

  **கணக்கில் அவன் 'புலி'**

- கலைச்சொல், மொழிபெயர்க்கப்பட்ட பகுதி ஆகியவற்றை எழுதும்போது ஒற்றை மேற்கோள் குறி இடப்படல் வேண்டும்.

  **'ஏ' என்னும் இடைச்சொல்**

  ஊரிலுள்ள குழந்தைகள் மல்லெ ஹெத்தெயை 'ஏய் காக்கெ சொப்பு' 'ஏய் காக்கெ சொப்பு' என்றே அழைத்தனர்.

- மேற்கோள்கள், தலைப்பு, பழமொழி போன்றவை தொடரில் வரும்போது ஒற்றை மேற்கோள் குறி இடப்படல் வேண்டும்.

  **இயற்கையை வருணித்து 'அழகின் சிரிப்பு' என்ற தலைப்பில் பல பாடல்களைப் பாரதிதாசன் எழுதியுள்ளார்.**

- பிறருடைய கருத்தை உள்வாங்கி ஒரு தொடரை உருவாக்கும் பொழுதும் ஒற்றை மேற்கோள் குறி இடப்படல் வேண்டும்.

  **'தீதும் நன்றும் பிறர்தர வாரா'** என்ற கூற்றின் பொருளை நான் இப்போது உணர்ந்தேன்.

### 6.2.5.10 தனிமேற்கோள் குறி

எழுத்து அல்லது எண் விடுபட்டுள்ளது என்பதைக் குறிக்க இக்குறி பயன்படுத்தப்படுகிறது. எழுத்து விடுபட்டு எழுதுவது தமிழ்மொழியில் இல்லை. எனவே வருடங்களைக் குறிக்க மட்டும் இங்குப் பயன்படுத்தப்படுகிறது.

**30 மார்ச், '99**

### 6.2.5.11 மேற்படிக்குறி

முதல் வரியில் சொல்லப்பட்ட செய்தியே அடுத்த வரியிலும் தொடரும்போது இக்குறி இடப்படும்.

**போட்டியில் கலந்து கொண்டோர் விவரம்**

**அம்பிகா பாட்டுப் போட்டி**

**விமல் "**

**குமரன் "**

### 6.2.5.12 பிறை அடைப்புக்குறி

- விவரித்தல், கூடுதல் தகவல் போன்றவை இக்குறியிட்டுச் சொல்லப்படும்.

  **புதன்கிழமை (தை 10) காலை விழா நடந்தது.**

  **ஓட்டப்பந்தயத்தில் செழியன் (வயது 10) முதல் பரிசு பெற்றான்.**

- தமிழ்த் தேதிகள் எழுதும்போது அவற்றிற்கு இணையான ஆங்கிலத் தேதியைப் பிறை அடைப்புக்குள் எழுத வேண்டும்.

  **ஐப்பசி 16ஆம் நாள் (2.11.2021)**

- தமிழை அடுத்துப் பிறமொழிச் சொற்கள் வரும்போதும் பிறமொழியை எழுத்துப் பெயர்த்து எழுதும்போதும் பிறை அடைப்புக்குறி இடல் வேண்டும்.

  **ரிச் டாட் புவர் டாட் (Rich dad poor dad) புத்தகம் வாழ்வில் பொருளாதார நிலையை உயர்த்த வழிகள் கூறுகிறது.**

  **இந்தப் புத்தகங்களைப் பிரதி (Xerox) எடுத்துக் கொள்ளலாம்.**

❖ மேற்கோள் காட்டப்பட்டவையின் ஆதார நூல்களின் பெயர்கள் பிறை அடைப்பில் எழுத வேண்டும்.

**'அன்பெனப் படுவது பகிர்மானத்தில் பிழைபடாமை' (கவிக்கோ அப்துல் ரகுமான்)**

❖ கதைகளின் இறுதியில் முடிவு அல்லது தொடரும் ஆகியவை பிறை அடைப்புக்குள் எழுதப்படல் வேண்டும்.

**(முற்றும்)**

**(தொடரும்)**

### 6.2.5.13 சதுர அடைப்பு:

பிறை அடைப்புக்குள் மற்றோர் அடைப்பு தேவைப்படும்போது சதுர அடைப்பைப் பயன்படுத்தலாம்.

**பாரதியார் கண்ணனைப் புகழ்ந்து (கண்ணன் என் காதலன் [பக் – 30], கண்ணன் என் தாய் [பக் – 33], கண்ணன் என் சீடன் [பக் – 40] ) எனப் பல பாடல்கள் எழுதியுள்ளார்.**

### 6.2.5.14 இணைப்புக் கோடு:

❖ தனித்தனியே கூறப்பட்டவை அனைத்தும் முடிவில் தொகுப்பு என உணர்த்தும் வகையில் எழுதுகையில் இணைப்புக்கோடு போடவேண்டும்.

**எலுமிச்சை, ஆரஞ்சு, மிளகாய், பப்பாளி – இவை விட்டமின் சி நிறைந்த பழங்கள்**

❖ என்று, என்பதற்கு, இடையில், என்னவெனில், போன்ற சொற்களுக்குப் பதிலாக இணைப்புக் கோடு போடலாம்.

**"வாடா போகலாம்" – அம்மா அவனைக் கூட்டிக் கொண்டு நடந்தாள். (என்று)**

**இந்தியா பாகிஸ்தான்– ஹாக்கிப்போட்டி (இடையில்)**

**எனது மிகப் பெரிய பலம் – எனது குடும்பம் (என்னவெனில்)**

**மரம் – இயற்கையின் வரம். (என்பது)**

❖ இதுமுதல் இதுவரை எனக் கூறும் எண்களுக்கு மத்தியில் இணைப்புக் கோடு இடல் வேண்டும்.

**வேலை நேரம்: 9.30 – 4.00**

❖ மேற்கோள் கூறப்படும் செய்தி உள்ள நூலின் பெயர் எழுதும்போது இணைப்புக் கோடு இடல் வேண்டும்.

**அன்பிலார் எல்லாம் தமக்குரியர் – திருக்குறள்**

### 6.2.5.15 சாய்கோடு

- ஒன்றுக்கு மேற்பட்ட பொருத்தமான சொற்களை எழுதும்போது அல்லது என்ற சொல்லுக்குப் பதிலாகச் சாய்கோடு இடலாம்.

**இந்த வேலையில் சேர தமிழ் / ஆங்கிலம் / மலையாளம் / கன்னடம் ஆகிய மொழிகளில் ஒன்று தெரிந்திருக்க வேண்டும்.**

- சுருக்க முறைகள் எழுதும்போது சாய்கோடு பயன்படும்.

**த / பெ (தந்தை பெயர்)**

- அல்லது என்ற பொருளில் பயன்படுத்துவதுபோல மற்று என்ற பொருளில் எழுதும்போது சாய்கோடு இடக்கூடாது.

**அந்த ஊருக்கு விடுதி, பேருந்து வசதிகள் உண்டு.**

**அறிவோம்! தெளிவோம்!**

**நிறுத்தற்குறி/ நிறுத்தக்குறி – எது சரி?**

நிறுத்தக்குறி என்பதே சரி. புணர்ச்சிவிதிப்படி, நிறுத்தம் + குறி = நிறுத்தக்குறி என ஆகும். ஆனால், நிறுத்தல் + குறி = நிறுத்தற்குறி என ஆகும். நிறுத்தம் என்பது, படிக்கும்போது நிறுத்திப் படிக்கவேண்டியதனையும் நிறுத்தல் என்பது, ஒரு பொருளின் எடையை அளவிடுவதனையும் குறிக்கும். எனவே, நிறுத்தம் என்பது வேறு, நிறுத்தல் என்பது வேறு. இவ்விரு சொல்லின் வேறுபாடுணர்ந்து 'நிறுத்தக்குறி' என்றே வழக்கத்தில் பயன்படுத்துவோம்.

### 6.3 பிறமொழிப் பயன்பாடு

பல நூற்றாண்டுகளாகப் பேச்சுமொழியாகவும் எழுத்துமொழியாகவும் இருப்பது தமிழ் மொழி. இப்படிக் காலம் காலமாகப் பேச்சிலும் எழுத்திலும் இருப்பதாலேயும், அன்னியப் படையெடுப்பு, வணிகத்திற்கான போக்குவரத்து போன்ற காரணங்களாலும் தமிழ்மொழியில் பிறமொழிக் கலப்பு ஏற்பட்டுள்ளது.

### 6.3.1 உலகம் சுற்றும் மொழி

ஒரு நாட்டில் வாழும் மக்கள் வேறு எங்கும் போகாமல் ஓர் இடத்திலேயே வாழ்ந்து வந்தாலோ, வேறு மொழி பேசும் மக்கள் அவர்கள் இடத்திற்கு வராமல் இருந்தாலோ மட்டும்தான் அவர்களது மொழி எந்தக் கலப்பும் இல்லாமல் இருக்கும். வணிகத்திற்காகவும், வாழ்வியல் முன்னேற்றத்திற்காகவும் மனிதர்கள் தொடர்ந்து இடம் பெயர்ந்து கொண்டேதான் இருக்கிறார்கள்.

இதனால் மொழிகளில் பிறமொழிகளின் கலப்பு ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும். தமிழ் மக்கள் ஈராயிரம் ஆண்டுக்கு முன்பிருந்தே பிற நாடுகளுடன் நல்ல தொடர்பில் இருந்தார்கள். அதனால் தமிழ் மொழியில் பல மொழிச் சொற்களின் கலப்பு இருக்கும்.

நெடுங்காலம் வாழ்ந்து கொண்டிருக்கும் ஒரு மனிதன், பல நாடுகளுக்கும் சென்று பலரோடு பழகி, சுறுசுறுப்புடன் வாழ்கிறான். அவனிடம் பல நாடுகளுடைய மக்கள் பயன்படுத்தும் பொருள்கள் இருக்கும். அவற்றை அவன் பயன்படுத்துவான். அதுபோல சுறுசுறுப்புடன் உலவி வரும் தமிழ்மொழி முற்காலத்தில் தன்னோடு பழகிய ஆரியம், இலத்தீன் முதலான மொழிகளின் சில சொற்களையும், தற்காலத்தில் தன்னோடு நட்பாயிருக்கும் ஆங்கில மொழியின் சில சொற்களையும் பயன்படுத்தி வருகிறது என்று மறைமலை அடிகள் கூறுகிறார்.

இவ்வாறு பல பிறமொழிச் சொற்கள் தமிழில் கலந்துள்ளன. காலப்போக்கில் அவை தமிழ்ச் சொற்களாகவே மாறிப் போய்விட்டன. யாரேனும் ஒருவர் அடையாளம் காட்டும் வரை அனைவரும் அவற்றைத் தமிழ்ச் சொற்களாகவே எண்ணிப் பயன்படுத்தி வருவர். அவ்வாறு தமிழுடன் கலந்த பிறமொழிகள் பற்றி முதலில் காணலாம்.

### 6.3.2 முதல் கலப்பு

முதன்முதலில் தமிழ்மொழியில் மொழிக் கலப்பு சமணர்களின் மூலம் ஏற்பட்டது. வடமொழி என்று அழைக்கப்படும் பிராகிருதமும் அதற்கடுத்து சமஸ்கிருதமும் மற்றும் பாலி மொழியும் தமிழ்மொழியில் கலந்தன. இம்மொழிகளில் இருந்தே மிகப்பெரிய அளவிலான சொற்கள் தமிழ்மொழியில் கலந்தன.

### 6.3.3 மணியும் பவளமுமாகப் பிறந்த மணிப்பிரவாளம்

பிற்காலச் சோழர் காலத்தில் இருந்து தமிழ்மொழியில் வடமொழிச் சொற்களின் பயன்பாடு அதிகமாக ஆரம்பித்தது. தமிழ்மொழியில் பல வடமொழிச் சொற்கள் கலந்து ஒரு புதிய மொழி நடையே உருவானது. மணியும் பவளமும் கலந்ததுபோல அது இருந்ததால் அதனை மணிப்பிரவாள நடை என அழைத்தனர்.

எளிமையாகச் சொல்ல வேண்டுமெனில் இன்று தமிழும் ஆங்கிலமும் கலந்து பேசும் தங்கிலீசு போல அது உருவானது. சமண உரைநடையிலும் திவ்ய பிரபந்த உரையிலும் தலைகாட்ட ஆரம்பித்த இந்த நடை பத்தொன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய பிரதாப முதலியார் சரித்திரம் என்ற நாவல் வரை நீண்டது.

அதன்பின், தனித்தமிழ் இயக்கம் தோன்றித் தூய தமிழ்மொழியைப் பயன்படுத்தக் கற்பித்தது. ஆனால், இன்றும் நம்மை அறியாமல் பல வடமொழிச் சொற்களை நாம் பயன்படுத்திக் கொண்டேதான் இருக்கிறோம்.

எடுத்துக்காட்டாக,

**(பேச்சுவழக்கு எழுத்துவழக்கு வேறுபாட்டினை மாணவர்கள் அறியும்பொருட்டு எடுத்துக்காட்டுகள் பேச்சுவழக்கிலும் எழுத்துவழக்கிலும் கொடுக்கப்பட்டுள்ளன.)**

**நான் ஒரு விஷயம் சொல்லட்டா?** என்றுதான் பெரும்பாலும் கேட்கிறோம்.

இங்கு, 'விஷயம்' என்பது வடசொல். இதனைத் தமிழ்ப்படுத்தி **'விடயம்'** என்றும் கூறக் கேட்கிறோம்.

**என் அண்ணா பெரிய நிறுவனத்தில் உத்தியோகம் பார்க்கிறான்..** என்று கூறக் கூடாது

**என் அண்ணன் பெரிய நிறுவனத்தில் வேலை செய்கிறான்.** என்று சொல்ல வேண்டும்.

**நமக்குச் சோறு போடற தொழில் விவசாயம்** என்பதை விட,

**நமக்குச் சோறுபோடும் தொழில் உழவு** என்பது நலம்.

**எனக்கு மருத்துவராகனும்னு ஆசை** என்பதை விட,

**எனக்கு மருத்துவராக வேண்டும் என்று விருப்பம்** என்பது அழகு

**உமையாளோட சகோதரன் நான்** எனக் கூறுவதைவிட

**உமையாளின் உடன்பிறந்தவன் நான்** எனக் கூறுதல் சரியானது.

இதுபோல இன்னும் சில சொற்களை அறியலாம்.

### 6.3.4 மொழிபெயர்க்க முடியாத சொற்பயன்பாடு

எல்லாச் சொற்களையும் தமிழிலிலிருந்து வடமொழிக்கோ, வடமொழியிலிருந்து தமிழ்மொழிக்கோ மொழிபெயர்த்து எழுதுதல் கடினம். அப்படிப் பெயர்க்க முடியாத சொற்களை ஒலிப்பு மாறாமல் ஒலிபெயர்த்து எழுதுதல் நலம்.

எடுத்துக்காட்டாக,

**மென்மொழியாள்** என்னும் பெயரை வடமொழியில் மொழிபெயர்த்தல் இயலாது. அதனை **மதுரபாஷிணி** என எழுத முயல்வர். அப்படி எழுதுகையில் தவறு ஏற்படும். யாழ் என்பது ஒரு தொன்மையான இசைக் கருவி, வீணை வேறு விதமான இசைக்கருவி. பொருள் மாறுபாடு ஏற்படும். எனவே இப்படிப்பட்ட சொற்களை ஒலிப்பு மாறாமல் ஒலிபெயர்த்து எழுதுதல் நலம்.

### 6.3.5 வடமொழிக்கு அடுத்து, கலந்த மொழிகள்

தமிழ் மன்னர்கள் ஆட்சிக்குப் பிறகு முஸ்லீம் அரசர்களது ஆட்சிக் காலத்தில் அரபு, உருது, பார்சி மொழிகள் தமிழில் கலந்தன. இவற்றிலிருந்தும் சில சொற்களை நாம் பயன்படுத்துகிறோம்.

**ஆஜர், ரத்து, ஜப்தி, ஜாமீன், தணிக்கை, மகசூல், ஜில்லா** இவை எல்லாம் இன்னும் அரசு ஏடுகளில் பயன்படுத்தப்பட்டுக் கொண்டுதான் இருக்கின்றன.

**சிங்களம், மலாய், சீனம்:** வணிகப் போக்குவரத்துகளால் தமிழகத்துக்கு வந்த மொழிகள் மலாய் மற்றும் சீன மொழிகள்,

**மல்லாக் கொட்டை, மணிலாக் கொட்டை** என்பது மலாய் மொழியில் இருந்து வந்த பெயர்.

**பீங்கான்** என்ற மண் பாத்திரம் சீனத்திலிருந்து வந்ததால் அந்த சீனப் பெயரையே நாம் பயன்படுத்துகிறோம்.

சிங்கள மொழி நம் தமிழ் மன்னர்கள் ஆட்சி அங்கு நடந்ததாலும், திருமண உறவுகள் இலங்கையோடு நம் தமிழ் மன்னர்கள் கொண்டிருந்ததாலும் தமிழுடன் கலந்தது.

**ஈழம், முருங்கை, அந்தோ** ஆகியவை சிங்களம் நமக்குக் கொடுத்த சொற்கள்.

### 6.3.6 சரபோஜி கால மாற்றம்

முஸ்லீம் மன்னர்களைப் போன்று நம் தமிழகத்தை ஆண்ட சரபோஜி மன்னர்களால், மராத்தி மொழி சில சொற்களைத் தமிழுக்குக் கொடுத்திருக்கிறது. பெரும்பாலும் உணவுப் பண்டங்களின் பெயர்களையே மராத்தி மொழி நமக்குத் தந்திருக்கிறது.

**சேமியா, கிச்சடி, பட்டாணி, சொஜ்ஜி, ஜாடி, குண்டா, வில்லங்கம், சலவை, ஜாஸ்தி**

போன்றவை மராத்தி நமக்குத் தந்ததில் இன்று நாம் பயன்படுத்திக் கொண்டிருக்கும் சொற்கள்.

### 6.3.7 விஜயநகரக் கொடை

விஜயநகர நாயக்கர் காலத்தில் தெலுங்கு, கன்னடச் சொற்கள் பெருமளவில் வந்தன.

**பெரிய கொலுசு வாங்கினேன்!** என்று அடிக்கடி சொல்லக் கேட்டிருக்கிறோம். **கொலுசு** என்பது தெலுங்குச் சொல்.

அதோடு **உப்புசம், சளிப்பு, கடப்பாரை, குப்பம், துரை, தீவட்டி, கட்டடம்** ஆகியவை தெலுங்குச் சொற்கள் **சொத்து, அட்டிகை, கெம்பு** போன்றவை கன்னடச் சொற்கள்.

### 6.3.8 போர்த்துக்கீசியர் வரவு

அரசர்கள் ஆட்சி முடிவுக்கு வரத் தொடங்கிய காலத்தில் தமிழகத்துக்குள் வந்தவர்கள் போர்த்துக்கீசியர்கள். அவர்கள் பறங்கியர் என்று அழைக்கப்பட்டனர். அவர்கள் கொண்டு வந்த பொருள்கள் அந்தப் பெயரிலேயே அழைக்கப்பட்டன. பறங்கிக்காய் போன்றவை அதற்கு எடுத்துக்காட்டு.

**கடுதாசி, பேனா, வாத்து, அலமாரி, மேசை, சாவி, அன்னாசி, பீப்பாய், ஏலம், சன்னல், தோசை, புனல், பொத்தான்** போன்றவை போர்த்துக்கீசியச் சொற்கள்.

### 6.3.9 பிரெஞ்சு வரவு

பிரெஞ்சு மொழி, ஆங்கில மொழியைப் போலின்றிச் சற்று மாற்றமுடையதாய் இருந்தது. அதோடு பிரெஞ்சு அரசாங்கம் பாண்டிச்சேரியைத் தங்கள் இடமாக வெகுகாலம் ஆண்டு வந்தது.

இந்த மொழியிலிருந்து ஆஸ்பத்திரி, பீரோ போன்ற சொற்கள் இன்றும் வழக்கில் உள்ளன.

### 6.3.10 ஆங்கில மொழியின் தாக்கம்

இறுதியாகவும் மிக உறுதியாகவும் தமிழுடன் கலந்த மொழி ஆங்கிலம். கிழக்கிந்திய கம்பெனியார் வரவால் நம் நாட்டுக்குள் நுழைந்த ஆங்கிலம் இன்றுவரை தமிழ்மொழியில் கலப்பதை அறிஞர்களால் மாற்றவே முடியவில்லை.

**காலைல எந்திருச்சு டிபன் சாப்பிட்டுட்டு** பஸ் **ஏறி** ஸ்**கூலுக்குப் போனேன்** என்று தொடர்ச்சியாய் ஆங்கிலமும் தமிழும் கலந்து பேச அனைவரும் கற்றுக் கொண்டு விட்டனர்.

**காலையில் எழுந்து உணவு சாப்பிட்டுவிட்டுப் பேருந்தில் ஏறிப் பள்ளிக்குச் சென்றேன்.** என்று கூறுவதற்குத் தயங்குகிறார்கள்.

**போலீஸ், சினிமா, சோப், டிக்கெட், பில், பேப்பர், பென்சில், ஓட்டல்** போன்றவை பாமர மக்கள் வரை அனைவரும் அறிந்த தமிழ்ச் சொற்களாகவே மாறிவிட்டன.

ஆங்கிலமொழிச் சொற்களை இவ்வாறு பயன்படுத்தும்போது சரியான ஒலிக் குறிப்புகள் கொடுத்தல் வேண்டும். கலைச்சொற்களைத் தமிழில் எழுதும்போது இந்த ஒலிப்பு மயக்கம் வருதல் உண்டு.

## 6.4 தமிழ்மொழியில் பிற மொழிகளின் பயன்பாடு

முற்காலத்தில் தமிழ்மொழியுடன் கலந்த பிறமொழிச் சொற்களை நாம் தமிழ்ச் சொற்களாகவே உச்சரித்தும் பயன்படுத்தியும் வருகிறோம். இப்படிப் பிறமொழிச் சொற்களைத் தமிழில் எழுதும்போது, அவற்றைப் பின்வரும் முறைகளில் எழுதலாம்.

சொல்லின் பொருளை விவரித்துப் புதுச் சொல்லாகச் சொல்லலாம்.

உதாரணமாக,

Hospital – மருத்துவமனை

இணையான புதுச் சொல்லைப் படைக்கலாம்

Computer – கணினி

மொழிபெயர்த்து எழுதலாம்.

Telephone – தொலைபேசி

சொல்லை அப்படியே ஒலிபெயர்த்து எழுதலாம்.

Pencil – பென்சில்

இப்படி ஒலிபெயர்த்து எழுதுகையில் மூலமொழியின் ஒலிகளை அப்படியே பெயர்த்து எழுதுதல் வேண்டும். Hydrogen என்பதை ஐதரசன் என்றும், ஹைதரசன் என்றும் எழுதுவர். மூலமொழியின் சரியான ஒலிப்புப்படி ஹைட்ரஜன் என்று எழுதுவதே சரியாகும். கைட்ரஜன் என எழுதும்போது, தமிழ் இலக்கண அமைப்பின்படி மொழிமுதல் வரும் வல்லின எழுத்துகள்

வெடிப்பொலியாகவே வரும் என்பதால் கை எனும் எழுத்து ஹை என்று ஒலிக்காது. இது தனிமத்தைப் புரிந்துகொள்ளும் முறையில் குழப்பத்தை ஏற்படுத்தும்.

ஐட்ரஜன் என்றும், ஹைட்ரஜன் என்றும் இதனை எழுதலாம்.

பிற மொழிபெயர்களை எழுதும்போதும் சரியான ஒலிபெயர்ப்பு அவசியம். George Bush என்பதை ஜார்ஜ் புஷ் என்று எழுதுவதே சரி. Armstrong அப்படியே மொழிபெயர்த்தல் சரியாகாது. ஆர்ம்ஸ்டிராங் என்று ஒலிபெயர்த்தால் போதும்.

### 6.5 உரைப்பகுதி அமைப்பு முறைகள்

நாம் கூற நினைக்கும் கருத்து சரியான முறையில் படிப்பவரைச் சென்றடைய உரைப்பகுதி அமைப்பு மிகவும் உதவும். கருத்துகளைச் சரியான முறையில் அமைத்துக் கூறும்போது நமது கருத்து படிப்பவருக்கு முழுமையாகச் சென்றடையும்.

#### 6.5.1 உரைப்பகுதி உருவாகும் முறை

எழுத்துகள் இணைந்து சொல் உருவாகிறது. சொற்கள் இணைந்து தொடர் உருவாகிறது. நாம் சொல்ல நினைத்த கருத்தைச் சிறுசிறு தொடர்களால் கூறும்போது நமது கருத்து எளிமையாகப் படிப்பவர்க்குப் புரியும். தொடர்ந்து கூறும்போது அவற்றைச் சிறு சிறு உரைப்பகுதிகளாகப் பிரித்துக் கூறும்போது கருத்து எளிமையாகப் புரிவதோடு ஒழுங்குடனும் அமையும்.

உரைப்பகுதியினை உருவாக்கும்போது ஒருமைப்பாடு, கருத்து ஒழுங்கு போன்றவை கவனிக்கப்படல் வேண்டும்.

#### 6.5.2 உரைப்பகுதி ஒருமைப்பாடு

சரியான முறையில் உரைப்பகுதிகளைப் பிரித்து எழுதும்போது பார்க்க வேண்டிய அமைப்பு ஒருமைப்பாடு. நாம் கூறப்போவது ஒரு கருத்தாக இருந்தால் அதன் ஒவ்வொரு கருத்தையும் ஒவ்வோர் உரைப்பகுதியாகப் பிரித்தல் வேண்டும்.

பல கருத்துகளைக் கூற வேண்டுமெனில் ஒவ்வொரு கருத்தையும் ஒவ்வோர் உரைப்பகுதியில் சொல்லுதல் வேண்டும்.

#### 6.5.3 நல்ல உரைபகுதியின் அமைப்பு

பல வரிகள் இணைந்து உரைப்பகுதி உருவாகலாம். உரைப்பகுதியின் அளவு வேறுபட்டிருந்தாலும், அதன் கருத்து சரியான முறையில் அமைதல் வேண்டும்.

நாம் எழுதும் உரைப்பகுதியில் முதல் சொல் நாம் கூறப்போகும் கருத்தின் தொடக்கமாக இருத்தல் வேண்டும். இடையில் வரும் சொற்கள் பத்தியை விளக்கும் விதமாக அமைதல் வேண்டும். இறுதித் தொடரின் சொற்கள் நம் எண்ணத்தின் இறுதிக் கருத்துகளைக் கூறுவனவாக அமைதல் வேண்டும்.

எடுத்துக்காட்டாக,

நீங்கள் உங்கள் தோழியின் நடனத் திறமையைப் பாராட்டி எழுத விரும்புகிறீர்கள் எனில்,

**பூங்குழலி நடனத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவள். எல்லா விழாக்களிலும் கலந்துகொண்டு சிறப்பாக நடனம் ஆடுவாள். தேசிய அளவிலான நடனப் போட்டியில் கலந்து கொண்டு பரிசு பெற்றுள்ளாள்.**

என்று உரைப்பகுதியை எழுத வேண்டும். இதில், பூங்குழலியின் நடனம் பற்றிக் கூறுவது தொடக்கம். அடுத்த தொடர் முதல் கருத்துக்கு வலிமை சேர்க்கிறது. இறுதிக் கருத்து செய்தியின் உச்சத்தைக் கூறி முடிக்கிறது.

### 6.5.4 கருத்தின் ஒழுங்கமைவு

நாம் கூறும் செய்திகள் சரியான ஒழுங்கமைவில் இருத்தல் வேண்டும். பல கருத்துகளைக் கூறும்போது, ஒவ்வொரு கருத்துக்கும் ஒரு பத்தியை அமைத்தல் வேண்டும். முன்னர் கூறிய உதாரணத்தில் ஒரு கருத்தை ஒரு பத்தியில் கூறிவிட்டோம். அதில் தொடர்ந்து இன்னொரு நண்பனைப் பற்றிக் கூறும்போது, அதனை அடுத்த பத்தியில் அமைத்தல் வேண்டும்.

**பூங்குழலி நடனத்தில் மிகுந்த ஈடுபாடு கொண்டவள். எல்லா விழாக்களிலும் கலந்து கொண்டு சிறப்பாக நடனம் ஆடுவாள். தேசிய அளவிலான நடனப் போட்டியில் கலந்து கொண்டு பரிசு பெற்றுள்ளாள்.**

**முரளி விளையாட்டில் ஆர்வம் உள்ளவன். பள்ளியில் நடக்கும் எல்லா விளையாட்டுப் போட்டிகளிலும் அவன் பங்கு கொள்வான். பள்ளிகளுக்கிடையேயான விளையாட்டுப் போட்டிகளில் கலந்துகொண்டு பல பரிசுகளை அவன் பெற்றுள்ளான்.**

இவ்வாறு ஒவ்வொரு கருத்தையும் தனித்தனி உரைப்பகுதிகளாகக் கூறுதல் வேண்டும்.

## 6.6 தொகுப்புரை

தொடர்கள் உருவாவதற்குச் சொற்கள் தேவை. அச்சொற்களைச் சில இடங்களில் சேர்த்தும் சில இடங்களில் பிரித்தும் படிக்கவேண்டும். இல்லையெனில் பொருட்குழப்பத்தை ஏற்படுத்தும் என்பதை இப்பாடத்தில் நன்கு புரிந்துகொண்டோம். மேலும், நிறுத்தக்குறிகள் பற்றியும் அவற்றை எங்கெங்குப் பயன்படுத்தவேண்டும் என்பது பற்றியும் அறிந்துகொண்டோம். பிறமொழிக் கலப்பு, கலப்பில்லாத தூய தமிழ்ச்சொற்கள் கொண்ட உரைப்பகுதிகள் உருவாக்குதல், சிறந்த உரைப்பகுதி உருவாக்கும் முறைகள் பற்றியும் பல்வேறு எடுத்துக்காட்டுகள் வாயிலாக அறிந்துகொண்டோம். இவற்றை அறிந்து கொண்டதோடு, நடைமுறை வாழ்க்கையில் பயன்படுத்தவும் வேண்டும். தமிழின் எழுத்து, சொல், தொடர், புணர்ச்சி அமைப்பு முறைகள், மொழிநடைகள் எனப் பலவற்றை அறிந்துகொண்ட நாம், தமிழைப் பிழையின்றிப் பேசவும் எழுதவும் வேண்டும். இப்பாடப் பகுதியிலும் இதற்கு முந்தைய பாடப்பகுதிகளிலும் இடம்பெற்றுள்ள பயிற்சிகள் வாயிலாகப் பிழை நேரும் இடங்கள், அவற்றைக் களையும் வழிமுறைகள் ஆகியவற்றை மனத்திற்கொண்டு பிழையின்றிப் பேசிப் பழகுவோம். எழுதிப் பழகுவோம்.

## பயிற்சிகள்

**அ) பின்வரும் தொடர்களுக்குப் பொருத்தமான சொற்களைத் தேர்ந்தெடுத்து நிரப்புக.**

1. நான் தந்த நூல் இஃது __________. (அல்ல/ அன்று)
2. இந்தச் செயலை நீதான் செய்திருப்பாய்__________. (அல்லவா?/ அல்ல?)
3. கவிஞர் முடியரசன் எழுதிய கவிதைகள் இவை __________. (அல்ல/ அன்று)
4. நான்கு __________ஐந்து மணிக்கு வந்துவிடுவேன். (அல்லது/ அல்ல)
5. சேர, சோழ, பாண்டியர் __________மூவேந்தரும் வந்தனர். (அற்ற/ ஆகிய)

**ஆ) பின்வரும் தொடர்களில் சரியான சொற்சேர்க்கை அமைந்த தொடருக்குச் சரி குறியிடுக.**

1. வீட்டின் கதவருகில் திருடன் மறைந்திருந்தான். ☐

   வீட்டின் கதவு அருகில் திருடன் மறைந்திருந்தான். ☐

2. சுயசிந்தனையற்ற மனிதர் செய்யும் செயல் ஆய்வுக்குரியதாகும். ☐

   சுயசிந்தனை அற்ற மனிதர் செய்யும் செயல் ஆய்வுக்குரியதாகும். ☐

3. நீயல்லவா இதைச் சொல்லியிருக்க வேண்டும்? ☐

   நீ அல்லவா இதைச் சொல்லியிருக்க வேண்டும்? ☐

4. என் கண்ணல்ல, இங்கே வா! ☐

   என் கண் அல்ல, இங்கே வா! ☐

5. இன்றுமுதல் பள்ளிக்கு விடுமுறை. ☐

   இன்று முதல் பள்ளிக்கு விடுமுறை. ☐

**இ) பொருத்துக.**

| | | |
|---|---|---|
| 1. வினாக்குறி | – | ; |
| 2. முற்றுப்புள்ளி | – | ? |
| 3. முக்காற்புள்ளி | – | ! |
| 4. வியப்புக்குறி | – | : |
| 5. காற்புள்ளி | – | . |

**ஈ) பின்வரும் தொடர்களுக்குப் பொருத்தமான நிறுத்தக்குறி இடுக.**

1. நாளை என் வீட்டிற்கு வருவாயா
2. ஆ என்னே தாஜ்மகாலின் அழகு
3. தமிழிலக்கணம் எழுத்து சொல் பொருள் யாப்பு அணி என ஐவகைப்படும்
4. உடற்பயிற்சி செய்வது உடலுக்கு நல்லது
5. அணி என்பதற்கு அழகு என்று பொருள்

**உ) பின்வரும் தொடர்களில் அடிக்கோடிட்ட சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்களைக் கூறுக.**

1. பாட்டுப்போட்டியில் முதல் பரிசு பெற்றதால், கண்மணி மிகவும் **சந்தோஷமாக** இருந்தாள்.
2. கவினும் கண்ணனும் **கிரிக்கெட்** விளையாடினார்கள்.
3. அப்பா **ஆஸ்பிட்டலுக்குச்** சென்றார்.
4. நான் புதிதாக **டேபிளும் சேரும்** வாங்கினேன்.
5. என் தம்பி **வக்கீலாகப்** பணிபுரிகின்றான்.

**ஊ) பின்வரும் உரைப்பகுதியைத் தமிழில் மொழிபெயர்த்து எழுதுக.**

The Tamil grammarians divide all the words of their language into four principal parts, viz. Nouns, Verbs, Particles and Adjectives.

**எ) ஓரிரு தொடரில் விடை தருக.**

1. சேர்த்துப் படிப்பதற்கும் இடைவெளிவிட்டுப் படிப்பதற்கும் எடுத்துக்காட்டுத் தொடர்கள் கூறுக.
2. கண்ணன் படித்து/ விட்டான். இத்தொடரில் இடைவெளிவிட்டுப் படிப்பதால் ஏற்படும் பொருள் மாறுபாடு யாது?
3. குமரன்தானே வேலைகளைச் செய்தான் – குமரன் தானே வேலைகளைச் செய்தான். இவ்விரு தொடருக்கும் என்ன வேறுபாடு?
4. வினாக்குறி வருமாறு இரு தொடர் அமைத்துக் கூறுக.
5. பிறமொழி கலவாமல், தூய தமிழ்ச்சொற்களைக் கொண்டு ஒரு தொடர் கூறுக.
6. பின்வரும் தொடரில் வினாக்குறியையும் வியப்புக்குறியையும் பயன்படுத்தி இரு தொடர் உருவாக்குக.

   உன் கையெழுத்து அழகாக உள்ளது.

7. பின்வரும் உரைப்பகுதிக்குப் பொருத்தமான நிறுத்தக்குறிகளைப் பயன்படுத்தி எழுதுக.

   திருக்குறள் உலகப் பொதுமறை என அழைக்கப்படுகிறது இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும் இந்நூலில் அறம் பொருள் இன்பம் என முப்பிரிவு உள்ளது 133 அதிகாரமும் ஓர் அதிகாரத்திற்கு 10 குறட்பா என 1330 குறட்பாவையும் இந்நூல் கொண்டுள்ளது

8. பின்வரும் தொடரில் இடம்பெற்றுள்ள வடசொல்லுக்கு இணையான தமிழ்ச்சொல்லைக் கூறுக.

   என் தந்தை மதுரையில் உத்தியோகம் செய்கிறார்.

9. ஒரு தொடரில், ஒரு சொல்லைத் தனித்துக்காட்ட இடப்பட வேண்டிய நிறுத்தக்குறி எது?

10. பின்வரும் தொடரில் பிறமொழிச் சொற்களையும் பேச்சுவழக்குச் சொற்களையும் நீக்கி, தமிழ்ச்சொற்களாகக் கூறுக.

    நேத்து நானும் என் ஃபிரண்டும் பீச்சுக்குப் போனோம்.

## விடைகள்

**அ) தொடர்களுக்குப் பொருத்தமான சொற்கள்**

1. அன்று 2. அல்லவா? 3. அல்ல 4. அல்லது 5. ஆகிய

**ஆ) சரியான சொற்சேர்க்கை அமைந்த தொடர்கள்**

1. வீட்டின் கதவருகில் திருடன் மறைந்திருந்தான். – சரி.
2. சுயசிந்தனை அற்ற மனிதர் செய்யும் செயல் ஆய்வுக்குரியதாகும். – சரி.
3. நீயல்லவா இதைச் சொல்லியிருக்க வேண்டும்? – சரி.
4. என் கண்ணல்ல, இங்கே வா! – சரி.
5. இன்றுமுதல் பள்ளிக்கு விடுமுறை. – சரி.

**இ) பொருத்துக.**

1. வினாக்குறி – ?
2. முற்றுப்புள்ளி – .
3. முக்காற்புள்ளி – :
4. வியப்புக்குறி – !
5. காற்புள்ளி – ,

**ஈ) தொடர்களுக்குப் பொருத்தமான நிறுத்தக்குறி.**

1. நாளை என் வீட்டிற்கு வருவாயா?

2. ஆ! என்னே தாஜ்மகாலின் அழகு!

3. தமிழிலக்கணம் எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என ஐவகைப்படும்.

4. உடற்பயிற்சி செய்வது உடலுக்கு நல்லது.

5. அணி என்பதற்கு, 'அழகு' என்று பொருள்.

**உ) அடிக்கோடிட்ட சொற்களுக்கு இணையான தமிழ்ச்சொற்கள்.**

1. மகிழ்ச்சியாக 2. மட்டைப்பந்து 3. மருத்துவமனைக்குச்

4. மேசையும் நாற்காலியும் 5. வழக்குரைஞராகப்

**ஊ) உரைப்பகுதியைத் தமிழில் மொழிபெயர்த்தல்.**

இலக்கண நூலாசிரியர்கள், தமிழ்மொழியிலுள்ள சொற்களை நால்வகையாகப் பிரிக்கின்றனர். அவை பெயர்ச்சொல், வினைச்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பனவாகும்.

**எ) ஓரிரு தொடரில் விடை.**

1. சேர்த்துப் படித்தல் – விளக்கை ஏற்றிவை.

   இடைவெளிவிட்டுப் படித்தல் – தாய்/ தன் மகனிடம்/ "ஒழுங்காகப் பாடம் படி"/ என்று கூறினாள்.

2. இடைவெளிவிடாமல் படித்தால், கண்ணன் படித்துமுடித்தான் எனப் பொருள் தரும். இடைவெளிவிட்டுப் படித்தால், கண்ணன் படித்தபிறகு அதனை விட்டுவிட்டான் எனப் பொருள் தரும்.

3. முதல் தொடர், குமரன் மட்டுமே வேலை செய்தான். வேறு யாரும் செய்யவில்லை எனப் பொருள் தருகிறது. இரண்டாவது தொடர், குமரன் யாருடைய உதவியும் இல்லாமல் அவனாகவே வேலை செய்தான் எனப் பொருள் தருகிறது.

4. அ) நான் கேட்ட கேள்விக்கு ஏன் விடையளிக்கவில்லை?

   ஆ) நேற்று ஏன் விளையாடவரவில்லை?

5. தமிழ் மிகவும் இனிமையான மொழி.

6. உன் கையெழுத்து அழகாக உள்ளதா? (வினா)

   ஆ! உன் கையெழுத்து எத்துணை அழகு! (வியப்பு)

7. திருக்குறள் 'உலகப் பொதுமறை' என அழைக்கப்படுகிறது. இந்நூல், பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாகும். இந்நூலில் அறம், பொருள், இன்பம் என முப்பிரிவு உள்ளது. 133 அதிகாரமும் ஓர் அதிகாரத்திற்கு 10 குறட்பா என 1330 குறட்பாவையும் இந்நூல் கொண்டுள்ளது.

8. என் தந்தை மதுரையில் **வேலை** செய்கிறார்.

9. ஒற்றை மேற்கோள்குறி

10. நேற்று நானும் என் நண்பனும் கடற்கரைக்குப் போனோம்.

## பின்னிணைப்பு – 1


எழுத்து
உயிர் எழுத்து (12)
மெய் எழுத்து (18)
உயிர்மெய் எழுத்து (216)
ஆய்தம் (1)
குறில் (5)
நெடில் (7)
சுட்டு (3)
வினா (4)
வல்லினம் (6)
மெல்லினம் (6)
இடையினம் (6)
உயிர்மெய்க் குறில் (90)
உயிர்மெய் நெடில் (126)
உயிர்மெய் வல்லினம் (72)
உயிர்மெய் மெல்லினம் (72)
உயிர்மெய் இடையினம் (72)


பெயர்ச்சொற்களில் அறியவேண்டியவை
திணை (2)
பால் (5)
எண் (2)
இடம் (3)
வேற்றுமை (8)
உயர்திணை
அஃறிணை
ஒருமை
பன்மை
தன்மை முன்னிலை படர்க்கை
ஆண்பால்
பெண்பால்
பலர்பால்
ஒன்றன்பால்
பலவின்பால்
முதலாம் வேற்றுமை
இரண்டாம் வேற்றுமை
மூன்றாம் வேற்றுமை
நான்காம் வேற்றுமை
ஐந்தாம் வேற்றுமை
ஆறாம் வேற்றுமை
ஏழாம் வேற்றுமை
எட்டாம் வேற்றுமை


புணர்ச்சி
இயல்புப் புணர்ச்சி
விகாரப் புணர்ச்சி
தோன்றல் விகாரம்
திரிதல் விகாரம்
கெடுதல் விகாரம்


சொல்
பெயர்ச்சொல்
வினைச்சொல்
இடைச்சொல்
உரிச்சொல்
பெயர்
வினை
பொதுப்பெயர்
சிறப்புப் பெயர்
வினையாலணையும் பெயர்
அளவைப் பெயர்
எண்ணல் அளவை
நிறுத்தல் அளவை
முகத்தல் அளவை
நீட்டல் அளவை
செய்வினை
செயப்பாட்டுவினை
தன்வினை
பிறவினை


1. பதம்
பகாப்பதம்
பகுபதம்
பெயர்ப் பகாப்பதம்
வினைப் பகாப்பதம்
இடைப் பகாப்பதம்
உரிப் பகாப்பதம்
பெயர்ப்பகுபதம்
வினைப்பகுபதம்


2. பகுபத உறுப்புகள்
பகுதி
விகுதி
இடைநிலை
சந்தி
சாரியை
விகாரம்
பெயர்ப் பகுதி
வினைப்பகுதி
பெயர் இடைநிலை
வினை இடைநிலை
ஆண்பால் விகுதி
பெண்பால் விகுதி
பலர்பால் விகுதி
ஒன்றன்பால் விகுதி
பலவின்பால் விகுதி


3. பெயர்
இடுகுறிப்பெயர்
காரணப்பெயர்
இடப்பெயர்
ஆகுபெயர்
வினையாலணையும் பெயர்
பொது
சிறப்பு
பொது
சிறப்பு
தன்மை
முன்னிலை
படர்க்கை
பொருள்
இடம்
காலம்
சினை
குணம்
தொழில்
கருத்தா
உவமை
அளவை
தானி
எண்ணல்
எடுத்தல்
முகத்தல்
நிறுத்தல்


1. வினைச்சொல்
தெரிநிலை வினை
குறிப்பு வினை
தன்வினை
பிறவினை
உடன்பாட்டு வினை
எதிர்மறை வினை


2. வினை
முற்று
எச்சம்
தெரிநிலை வினைமுற்று
குறிப்பு வினைமுற்று
செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று
ஏவல் வினைமுற்று
வியங்கோள் வினைமுற்று
பெயரெச்சம்
வினையெச்சம்
தெரிநிலை பெயரெச்சம்
குறிப்புப் பெயரெச்சம்
தெரிநிலை வினையெச்சம்
குறிப்பு வினையெச்சம்

# பின்னிணைப்பு – 2

## பிழையும் திருத்தமும்

| பிழை | திருத்தம் |
|---|---|
| இரும்பல் | இருமல் |
| உடம்படிக்கை | உடன்படிக்கை |
| எண்ணை | எண்ணெய் |
| ஒருவள் | ஒருத்தி |
| ஒரு குறிப்பிட்ட | குறிப்பிட்ட ஒரு |
| கருவேப்பிலை | கறிவேப்பிலை |
| கோர்த்தல் | கோத்தல் |
| கோர்வை | கோவை |
| சில்லரை | சில்லறை |
| பதிநான்கு | பதினான்கு |
| பதிமூன்று | பதின்மூன்று |
| பதட்டம் | பதற்றம் |
| பன்னிரெண்டு | பன்னிரண்டு |
| மக்குதல் | மட்குதல் |
| மணத்தக்காளி | மணித்தக்காளி |
| முழுங்கு | விழுங்கு |

## பார்வை நூல்கள்


1. பரமசிவானந்தம், அ.மு., நல்ல தமிழ், வள்ளியம்மாள் கல்வி அறம், சென்னை. பதிப்பு–1985.
2. முத்து– கண்ணப்பன், தி., தமிழில் தவறுகளைத் தவிர்ப்போம், சென்னை. பதிப்பு–1986.
3. பரந்தாமனார். அ. கி., நல்ல தமிழ் எழுத வேண்டுமா? பாரி நிலையம். சென்னை. பதிப்பு – 1988.
4. கோதண்டராமன், பொன். (பொற்கோ), தமிழில் நாமும் தவறின்றி எழுதலாம், ஐந்திணைப் பதிப்பகம், சென்னை. பதிப்பு–1992.
5. நுஃமான், எம், ஏ., அடிப்படைத் தமிழ் இலக்கணம், இலங்கை, பதிப்பு–1999.
6. திருமுருகன். இரா., இனிய தமிழைப் பிழையின்றி எழுத வழிகள், புதுச்சேரி. பதிப்பு –2001.
7. தமிழண்ணல், பிழை திருத்தம் மனப்பழக்கம், உலகத் தமிழர் தேசிய தமிழியக்கக் கல்விக்கழகம், மதுரை. பதிப்பு–2002.
8. தமிழண்ணல், தமிழில் அடிக்கடி நேரும் பிழைகளும் திருத்தமும், உலகத் தமிழர் தேசிய தமிழியக்கக் கழகம், மதுரை. பதிப்பு–2002.
9. முத்துக்குமரன், பொன்., தமிழ் மரபு – தவறுகளின்றித் தமிழை எழுதுவதற்குரிய வழிகாட்டி, காந்தளகம், சென்னை. பதிப்பு–2003.
10. முருகேசனார், சிவ., பிழையே வராமல் தமிழ் எழுதுவது எப்படி?, தமிழ்ச்சாரல் பதிப்பகம். பதிப்பு–2004.
11. தமிழண்ணல், பேசுவதுபோல் எழுதலாமா? பேச்சுத் தமிழை இகழலாமா?, தமிழ்மொழிப் பயிலகப் பல்துறை கழகம், மதுரை. பதிப்பு–2005.
12. திருமுருகன், இரா., இனிய தமிழைப் பிழையின்றி எழுத வழிகள், பாவலர் பண்ணை, புதுச்சேரி, பதிப்பு –2005.
13. வெள்ளிமலை, க., நல்ல தமிழ், விஜயா பதிப்பகம், கோவை. பதிப்பு– 2006.
14. டாக்டர் சங்கர சரவணன், பொதுத் தமிழ்க் களஞ்சியம், விகடன் பிரசுரம், சென்னை, பதிப்பு–2011.
15. மணிமேகலை புஷ்பராஜ், தமிழில் ஒற்றுப் பிழையின்றி எழுத மிக எளிய விதிகள், பாவேந்தன் நினைவு அறக்கட்டளை, சென்னை. பதிப்பு–2014.
16. இராசரத்தினம், சு., படிமுறைத்தமிழ் மொழியியலும் பயன்பாடும், உலகத் தமிழராய்ச்சி நிறுவனம், சென்னை. பதிப்பு –2022.

## கலைத்திட்டம் மற்றும் பாடத்திட்ட வல்லுநர் குழு

1. முனைவர் பெ. முருகன்
   முதல்வர், அறிஞர் அண்ணா அரசினர் கலைக் கல்லூரி, நாமக்கல்.
2. முனைவர் சங்கரசரவணன்
   துணை இயக்குநர், தமிழ்நாடு பாடநூல் மற்றும் கல்வியியல் பணிகள் கழகம், சென்னை.
3. முனைவர் நா. அருள்முருகன்
   இணை இயக்குநர், பள்ளிக் கல்வித் துறை, சென்னை.

## பாட வல்லுநர் மற்றும் மெய்ப்புத் திருத்துநர்

1. திருமதி பா. மலர்விழி
   விரிவுரையாளர், மாவட்ட ஆசிரியர் கல்வி மற்றும் பயிற்சி நிறுவனம், திருவூர், திருவள்ளூர் மாவட்டம்.
2. திரு. கோ. சுந்தர்
   முதுகலைத் தமிழாசிரியர், ஆ.ந.மே.பள்ளி, திருமுல்லை வாயில்.

## மீளாய்வுக் குழு

1. முனைவர் பா. ஜெய்கணேஷ்,
   உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, எஸ்ஆர்எம் அறிவியல் மற்றும் தொழில்நுட்ப நிறுவனம், சென்னை.

2. முனைவர் த. சத்தியராஜ்
   உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, ஸ்ரீ கிருஷ்ணா ஆதித்யா கலை மற்றும் அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்.

3. முனைவர் அ. சதீஷ்.
   உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, ஸ்ரீமத் சிவஞான பாலய சுவாமிகள் தமிழ், கலை, அறிவியல் கல்லூரி, மயிலம், விழுப்புரம் மாவட்டம்.

4. முனைவர் வெ. பிரகாஷ்
   ஆராய்ச்சியாளர், சமூக அறிவியல் துறை, பாண்டிச்சேரி பிரெஞ்சு ஆய்வு நிறுவனம், புதுச்சேரி.

## ஒருங்கிணைப்புக் குழு

1. முனைவர் க. ஜானகி,
   ஆய்வு வளமையர், தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னை.

2. திரு. ச. சுசீந்திரன்,
   உதவி நிரலர், தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னை.

## நூலாசிரியர் குழு

1. திருமதி. வே. சித்ரா,
   தொடக்க நிலை ஆசிரியர், அமிர்த வித்யாலயம், எட்டிமடை, கோயம்புத்தூர்.

2. திரு. வெ. பாலமுருகன்,
   பட்டதாரி தமிழாசிரியர், அரசு மேல்நிலைப்பள்ளி, ஆரம்பாக்கம், திருவள்ளூர் மாவட்டம்.

3. முனைவர் ந. இராஜேந்திரன்,
   உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, இந்துஸ்தான் கலை அறிவியல் கல்லூரி, கோயம்புத்தூர்.

4. முனைவர் ம. தமிழரசன்,
   உதவிப் பேராசிரியர், தமிழ்த்துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி.

5. முனைவர் பா. கவிதா,
   உதவிப்பேராசிரியர், தமிழ்த்துறை, பூசாகோ அர கிருஷ்ணம்மாள் மகளிர் கல்லூரி, கோயம்புத்தூர்.

## புத்தக வடிவமைப்பாளர் குழு

1. திரு. வே. சந்தோஷ் (அட்டைப் படம்)
   நிரலர், தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னை.

2. திரு. நீ. கணேஷ்,
   நிரலர், தமிழ் இணையக் கல்விக்கழகம், சென்னை.

